# தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள்


தொகுப்பாசிரியர்

மணவை முஸ்தபா



விலை : ரூ. 15/-

இது ஒரு

மீரா ஃபௌண்டேஷன்

வெளியீடு





AE-103, அண்ணா நகர்,

சென்னை-600 040.

# TAMIZHIL ISLAMIA MEIGNANA ILAKKIANGAL

*Compiler*

MANAVAI MUSTAFA

*Price:* Rs. 15/-

*Published by*

***MEERA FOUNDATION***

AE-103, ANNA NAGAR,

MADRAS-600 040.

## BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the book | ... Tamizhil Islamia Meignana Ilakkiangal (Sufi Literatur in Tamil) |
| Compiler | ... Manavai Mustafa |
| Language | ... Tamil |
| Edition | ... First Edition |
| Date of Publication | ... November 1981 |
| Copyright holder | ... Meera Foundation |
| Paper used | ... 12 Kg Appollo Bond |
| Size of the book | ... Dy. Octovo |
| Printing Points used | ... 10 points |
| No. of pages | ... 250 |
| Price | ... Rs. 15/- |
| No. of Copies printed | ... 1,000 |
| Printers | ... Meera Foundation Press<br>AE-103, Anna Nagar,<br>Madras - 600 040. |
| Binding | ... Paperback |
| Publishing place | ... Meera Foundation,<br>AE-103, Anna Nagar,<br>Madras-600 040. |
| Subject | ... Literary Criticism |
| Call Number | ... O, 31, IJ65; C g L8 |

# பொருளடக்கம்

மெய்ஞ்ஞான நெறிகளை
இஸ்லாமியத் தத்துவக் கருத்துக்
களோடு குழைத்து இலக்கிய
மெருகோடு தமிழுலகுக்குத் தந்து
இறையுணர்வையும் ஞானத்
தமிழ் இலக்கியத் துறையையும்
வளப்படுத்திய மெய்ஞ்ஞானி
கட்கு இந்நூல் அர்ப்பணிக்கப்
படுகிறது.

# என்னுரை

காலப் போக்கிற்கேற்ப தமிழ் இலக்கிய, கலை, பண்பாட்டு வளர்ச்சிக்கு, குறிப்பாக இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் செழுமைக்கென முனைந்து செயல்பட உருவாக்கப் பட்டிருக்கும் அற நிறுவனமே மீரா ஃபௌண்டேஷன்.

காலத்தால் அழிக்க முடியாத இலக்கியங்களை நூற்றுக் கணக்கில் முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள் எழுதிக் குவித்திருந்தும் அவை தமிழ் மக்களின் கவனத்தை ஈர்க்க இயலா வண்ணம் எங்கெங்கோ முடங்கி விட்டன. அவைகளை மக்களின் பார்வைக்குக் கொண்டு வருவதோடு அவற்றின் அருந்திறன் அனைத்தையும் தக்கவர்களைக் கொண்டு ஆய்வு செய்து தமிழ் கூறு நல்லுல குக்குக் கொடுத்து விட வேண்டும் என்ற வேட்கை பன்னெடுங் காலமாகவே என் உள்ளத்தில் அலைமோதிக் கொண்டிருந்தது. இவ்விலக்கியங்களின் கருப்பொருள்கள் இஸ்லாத்தை அடித்தள மாகக் கொண்டு உருவாகியிருந்த போதிலும், இலக்கியம் என்ற அளவில் அவை ஜாதி, மத, இன உணர்வுகட்கு அப்பாற்பட்ட நிலையில் உலகத்துக்குச் சொந்தம் ஆகும். இந்த உணர்வின் அடிப்படையில் இலக்கியத் திறனாய்வாளர்களைக் கொண்டு இஸ்லாமிய இலக்கியங்கள் அனைத்தையும் பல்வேறு பொதுத் தலைப்புக்களில் 10 கருத்தரங்குகள் மூலமாக ஆயிரத் துக்கு மேற்பட்ட இஸ்லாமிய இலக்கியங்களின் சாற்றை மக்க ளுக்கு ஆய்வுக் கட்டுரைத் தொகுப்புகளாகக் கொடுத்துவிட வேண்டும் என்று முடிவு செய்து, ஆகஸ்ட் 15-ல் முதலாவ தாக 'சீறா' கருத்தரங்கை நடத்தினேன். பெரும் இடர்பாடு களுக்கிடையே வெற்றிகரமாக அக் கருத்தரங்கு நடைபெற்றது. நல்ல உள்ளங்கள் பலவும் அதற்குப் பின் துணையாக இருந்தன. அக் கருத்தரங்குக் கட்டுரைத் தொகுப்பு 'சிந்தைக்கினிய சீறா' என்ற தலைப்பில் அரிய ஆராய்ச்சி நூலாக வெளிவந்து தமிழ் கூறு நல்லுலகத்தின் பேராதரவைப் பெற்றது. இலங்கை அரசு அந்நூலைத் துணைப் பாட நூலாக ஆக்கியிருப்பது அந்நூலின் சிறப்புக்கு மற்றுமோர் சான்றாகும்.

இரண்டாவதாக 'தமிழில் சூஃபி இலக்கியங்கள்' பற்றிய ஆராய்ச்சிக் கருத்தரங்கை நடத்த முற்பட்டேன்.

இறை நேசச் செல்வர்களாகிய மெய்ஞ்ஞானிகளில் பலர் நம் தமிழகத்தில் வாழ்ந்து மெய்ஞ்ஞான நெறிகளை இஸ்லாமியத் தத்துவக் கருத்துக்களோடு குழைத்து இலக்கிய மெருகோடு தமிழுலகுக்குத் தந்து இறையுணர்வையும் இலக்கியத்தையும்

வளப்படுத்தியுள்ளனர். ஆயிரக்கணக்கான பாடல்களைத் தத்துவக் சருவூலங்களாகத் தந்து சென்றுள்ள இவர்களின வாழ்கலகையைப் பற்றிய உண்மைத தகவலசளையும எழுதிய நூல்களின் முழு விவரங்களையும் இவர்களது தத்துவ விளக்கங்களையும் ஆய்வாளர் உறுதுணையோடு வெளிப்படுத்தும முயற்சியாக இககருததரங்கு அமையவேணடும் எனபது என வேணவா. அதற்கான முயற்சி களில் முனைந்து ஈடுபட்டபோது எப்போதும் போலவே ஆககச் சிநதனையுணர்வுடைய நலல உள்ளங்கள் என் முயற்சி வெற்றிபெற ஆதரவுக்கரம் நீட்டி என்னை அரவணைத்துக் கொண்டன.

எனது இலககியப் பணிக்கான நிலைக்களனக உருவாகி யிருக்கும் மீரா ஃபௌண்டேஷன் அற நிறுவனம் பல உன்னத நோக்கங்களைத் தன்னகத்தே கொணடு தமிழ் வளர்ச்சிக்கு—இலக்கிய மறுமலர்ச்சிக்கு—இஸ்லாமிய இலக்கிய மேம்பாட்டிற் குரிய பல்வேறு செயல் திட்டஙகளை நிறைவேற்றி வருகிறது—நிறைவேற்றவிருக்கிறது.

இலக்கிய செழுமைக்கு உழைப்பது போன்றே தமிழ்ப் பணியாற்றிய சான்றோரைப் பாராட்டுவதும் மீரா ஃபௌண் டேஷன் நோக்கங்களில ஒனறாகும். அதற்கிணங்க முதற கருத் தரங்கில் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய ஆராய்ச்சிககென டாகடர் பட்டம் பெற்ற இலஙகைப் பேராசிரியர் டாகடர் உவைஸ் அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி 'தீன தமிழ்க் காவலர்' என்ற பட்டமும் விருதுக் கேடயமும் தந்து சிறப்பித்தது போன்றே இவ்விரணடாம் 'ஸூஃபி இலக்கிய'க் கருத்தரங்கில் தமிழில் சூஃபி இலக்கியம பற்றி மிகுதியான நூல்களை எழுதி யுள்ள ஜனாப் ஆர். பி. எம். கனி அவர்கட்குப் பொன்னாடை போர்த்தி 'இஸ்லாமியத் தமிழ்ச் சுடர்' என்ற பட்டமும் விருதுக் கேடயமும வழங்கிச் சிறப்பிக்கப் பட்டார். அவவாறே தமிழ் இலக்கிய, பணபாட்டு வளர்ச்சிக்கு நேரடியாகவும் மறைமுகமாகவும் பல்வேறு துறைகளில் பாடுபட்டுவரும் திரு நா. மகாலிங்கம் அவாகளுக்குப் பொன்னாடை போாத்தி அருள்நெறிக் காவலர்' எனற பட்டமும் விருதுக் கேடயமும் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டார். நாறபதாணடுகளுக்கு மேலாக 'முஸ்லிம் முரசு' இதழ வாயிலாக அரும்பணியாற்றியும திற மிகக வரலாறறுப் புதின இலககியப் படைப்பாசிரியராகவும் விளஙகிவரும் மணிவிழாச செலவர் ஜனாப் சையத் முஹம்மது (ஹஸன) அவர்களும சிங்கபபூரில் சமுதாய, இலககியப் பணிகளை முனைப்புடன் ஆற்றிவரும் ஜனாப் எல். எம. அலி அவாகளும பொன்னாடை போர்ததிச சிறப்பிக்கப்பட்டனர்.

இந்த நூல் உருப்பெறுவதற்குத் தோன்றாத் துணையாக இருந்த ஆய்வாளர்களை இந்நேரத்தில் நன்றிப் பெருக்கோடு நினைத்துப் பார்க்கிறேன்.

சித்தர்களைப் பற்றிய சிறப்பாய்வாளராகத் திகழும் டாக்டர் இரா. மாணிககவாசகம் அவாகள் நம சிந்தனையைத் தூணடும் வணணம தம் ஒப்பாய்வைச் செய்துள்ளார் ஆண்டில் இளையராயினும் சூஃபி இலக்கியங்களிலும் மெய்ஞ்ஞான தத்துவ நுட்பங்களிலும் நுண்மான் நுழை புலமிக்கவராக விளங்கும தக்கலை ஜனாப் எம. எஸ. பஷீா அவர்கள இக்கருத்தரங்கில கொண்ட பங்கும பணியும் என்றும் நினைத்துப போற்றத்தக்கனவாகும் அவரது பெருமுயற்சியின விளைவாக உருவான இஸ்லாமிய சூஃபிகளின் தமிழ்த தொண்டுகளை விவரிககும் பட்டியல் இத் துறை ஆராய்ச்சியாளர்களுககு ஓர் அரிய திறவுகோலாகும் என்பதில் ஐயமில்லை. பெண்பாற் சூஃபிகளைப் பற்றிய அவரது ஆய்வு முயற்சியும அவரது ஆற்றலுககுக கட்டியங் கூறுவன வாகும், இநநூலில 'நாஞ்சில நனமொழியோன்' எனற புனை பெயருள புகுநது அதிகமான ஆராய்சசி ஆய்வுரைகளை வழங்கிய சிறப்பும் அவர்கட்கு உணடு. சூஃபிகளின் கோட்டையெனத் திகழும கோட்டாறு தநத ஞானியர்களின சிநதனைகளை வெள் ளோட்டமாகத் தொகுத்துத் தந்துளளார் ஞானியர் வழி வந்த பேராசிரியர் செ. பகுலு முகிய்யதீன் அவர்கள். போராசிரியா கா. முகம்மது பாரூக் அவர்களும், தக்கலையின மிகக புகழ் பீரபபா அவர்களின வாழ்வையும் வாழ்க்கையையும் சுவைபட ஆராயந்துள்ளாா. சகோதரர் ஹைதர் அலி அவாகளின ஆய்வுரையோ புதியதோர் கோணத்தில் ஞான வழியைச் சிந்திக்கத் தூண்டுகிறது. இளைய தலைமுறையின எழுச்சிக கவிஞரான கவிக்கோ அப்துல் ரகுமான அவர்களின் குணங் குடியாரின் மெய்வழிச் சிநதனையை உள்ளது உள்ளவாறே உணாநது தெளிய வழி காட்டும் ஒளி விளசகெனினும் அஃது பொருநதும்.

இஸ்லாமிய மெய்ஞ்ஞானச் சிநதனைகளை இலக்கிய வழியே வெளிப்படுத்தி வழங்க முனையும் எம் முயற்சி இத்துறையில் மேற் கொள்ளப்படும் முதன் முயறசி எனபது அனைவரும் அறிந்ததே. இந்நூலுக்குத் தக்கார் ஒருவரிடம முனனுரை பெறவேணடும் என்று என் உள்ளம் எணணியபோது என மனக் கண்ணில் பளிசசென மின்னியவர் எனது பேராசானும் மதுரை காமராசர் பலகலைக கழக முன்னாள் துணை வேந்தருமான டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள்தான். தமிழ்ககடலாக

வும் மெய்யறிவுத் தத்துவச் சுரங்கமாகவும் தேசிய உணர்வின் சின்னமாகவும் திகழும் அவர்கள் இளமை முதலே என் எழுச்சி உணர்வுகளுக்கு உந்து சக்தியாக விளங்கியவர்கள். உடல் நலிவால் இயலா நிலையிலும் என் விருப்பத்திற்குச் செவி சாய்த்து ஆர்வப் பெருக்கோடு அரிய முன்னுரையை வழங்கிப் பெருமைப் படுததினூர்கள். நூலுக்கே முடிமணியாய்த் திகழும் அரிய முன்னுரை வழங்கிச் சிறப்பித்த அனுர் அடுத்த திங்களே உலகை நீத்துச சென்றுவிட்டார்கள். அவர்கள் வாழ்வில் இறுதி யாக வழங்கிய இலக்கியக் கருத்துரை இதுவேயாகும் இவ் வாய்வுத் தொகுப்பை எனது பேராசானின் நினைவு அஞ்சலியாக வெளியிடுவதில் பேரமைதி பெறுகிறேன்.

இஸ்லாமிய இலக்கிய ஆராய்ச்சித் துறையின்] முன்னேடி யாகத திகழும 'தீன் தமிழ்க் காவலர்' பேராசிரியர் டாக்டர் ம. மு உவைஸ அவர்கள் வழங்கியுள்ள வாழ்த்து ᵕᵕ ற மேலும் பல விளக்கங்களை வழஙகி நம்மைச் சிந்திக்கத் தூணடுகிறது. எனது முயற்சிகளுக்கு அவ்வப்போது அரிய ஆலோசனைகளை வழங்கி எனக்குத் தோன்ருத் துணையாக விளங்கி வரும் 'தீன் தமிழ்க் காவலர்' அவர்கட்கு இதயம் நிறைந்த நன்றியைத தெரிவித்துக் கொளகிறேன.

இந்நூலுககு மிக அருமையான அணிந்துரையை வழங்கி யுள்ள உலமா பெருந்தகை மார்க்க ஞானச் செல்வர் மௌலவி மீ. இ. மு. அபுல் ஹசன ஷாதலி ஸாஹிப் (நூரிய்யி, பாஜில் பாகவி) அவர்கட்கு நான் எனறும கடபபாடுடையேன். எனது ஆக்கச் சிந்தனைகளுக்கு—அவற்றைச் செயல்படுத்த விழையும் முயற்சிகட்கு அனுா காட்டிவரும் ஆர்வமும் உற்சாக ஊக்க மொழிகளும் எனக்கு என்றும் புத்தெழுச்சி ஊட்டவல்லன வாகும்.

மிகச் சிறந்த மதிப்புரையை வழங்கியுள்ள எனது அன்புச் சகோதரர் மௌலவி எம். அப்துல பத்தாஹ், பாகவி அவாகட்கு நனறி செலுத்தக கடமைப்பட்டுள்ளேன. குறை நிறைகளை சமன செய்து சீர்தூககும் கோல் போலமைநத அவாதம் மதிப்புரை எல்லா வகையிலும் ஏற்றமுடைந்தாக ளிளங்குகிறது நூலுள் புகமுனையும் வாசர்கட்கு வழிகாட்டும் ஒளி விளககாக அஃது அமைந்துள்ளதெனினும் அஃது மிகையன்று.

எனது உணாவுகள் செயல் வடிவு பெறும் வகையில் எனக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டி வருமநணபர்களை—குறிப்பாக

அல்ஹாஜ் யாசீன் சாஹிப், அல்ஹாஜ ஏவி. எம். முகம்மது இபுருகீம் சாஹிப் போனற நலல உளளங்களையெல்லாம் நனறிப் பெருக்கோடு நினைததுப பாாக்கிறேன.

இறைவனின நல்லருளாலும் 'யார் செய்கிருர்கள் என்பதை விட என்ன செய்கிருர்கள்' என்பதிலேயே பெருங் கவனம செலுத்தி ஒத்துழைப்பை நல்கிவரும் நலல உள்ளங்களின ஆதர வோடும் இத்தகைய ஆக்கப்பணிகளில் முனைப்போடு தொடர்நது முயலவேன எனபது திண்ணம்.

அனபன்
**மணவை முஸதபா**

# முன்னுரை

இந்து-முஸ்லீம ஒற்றுமைக்காக காந்தியடிகள் தம் வாழ் நாளெலலாம் பாடுபட்டு உழைத்து முடிவில் தன் உயிரையே பலியாகக் கொடுத்தார் இந்திய விடுதலை இந்து வெறியர்களும் முஸ்லீம் வெறியாகளும ஒருவரையொருவர் வெட்டிச் சாயதத இரதத வெள்ளததினிடையே பிறந்தது. இப்போது அத்தகைய வெறி இல்லையானாலும் முஸ்லீமகள் வேறு, இந்துக்கள வேறு என்கிற பிரிவு மனப்பான்மை மறந்துவிட்டது எனச் சொல்வதற் கில்லை.

இநதியாவினுள் பல இனத்தவர்கள் வந்து குடியேறினார்கள் ; பல மதததவாகள்வந்து குடியேறினார்கள்: இன்றலல, நேற்றல்ல, பலப்பல நூற்றாணடுகளாக நடந்து வருகிற வரலாற்று உணமை. இததகைய வேற்றுமைகளினிடையே ஒற்றுமை காண்பதுதான இந்திய நாட்டின் பெருமை.

சென்ற நூற்றாணடில கூட இஸலாமிய இலக்கியங்களை திரிசிரபுரம மீனாட்சிசுந்தரம் பிள்ளை போனற தமிழறிஞர்கள் பிறருககுப் பாடம சொல்லி வந்தார்கள். நாகூர் குலாம் காதிறு நாவலா அவாகள, பிள்ளை அவர்களின் மாணவர். ஆனால அரசியல் காரணமாக ஒத்துழைத்த இந்துக்களும் முஸ்லீம்களும் இநத நூற்றாண்டில வேறுபடத தொடங்கினா. இதனவிளைவுகளை நேரே அனுபவித்திருக்கிறோம. ஆதலால் அவற்றை இங்கே விவரித்து எழுத வேணடியதில்லை.

காந்தியடிகள் தம்முடைய பிரார்த்தனை கூட்டங்களில எல்லா மதப் பாடல்களையும் பாடுவதையே மரபாகக் கொண்டிருந்தார். திருக்குர்ஆன் பாடல்கள் சிறப்பாக இடம பெறும். இதற்கு எதிர்ப்பும் இருந்தது அத்தகைய பிரார்த்தனைக் கூட்டத்தில் தான ஒரு இந்துவே அவரைச சுட்டுக் கொன்றான். இந்திய நாட்டின சமரச உணர்வை இந்தியரே மறந்துவிட்டது ஒரு புதிராகத்தான் இருக்கிறது. அரசியல் காரணமாக கைகுலுக்கி அளவளாவினால் மட்டும் போதாது. ஒருவரது பண்பாட்டையும் கொள்கைகளையும சமய உண்மைகளையும் இலக்கியத்தையும் மற்றவைகளையும் அறிய வேண்டும். அறிவாராய்ச்சி அன்போடு கலந்து நிகழும்போது வெறும் உணர்ச்சியினால் எழும் பகைமை நீங்கும். இந்த முயற்சி மிகச் சிறிய அளவே நடந்து வந்தது. வினோபாஜி அவர்கள் திருக்குர்ஆனிலிருந்தும் சில வாசகங்களை அரபி மொழியிலேயே தாம் படித்து மொழி பெயர்த்துத் தந்துள்

ளார் ஆனல், இத்தகைய முயற்சிகள் இந்தியா முழுவதும் பரந்து நிகழ்ந்தது என்று சொல்வதற்கில்லை. தமிழர்களும் அராபியர்களும் மிகப் பழங்காலந்தொட்டு மேற்குக் கடல்களில் நண்பர்களாய் கப்பலோட்டி வாழ்ந்து வந்திருக்கிறார்கள். போர்ச்சுக்கீசியர்களோடு முதலில் போராடியபோது இந்த ஒற்றுமை மிகவும் பயன்பட்டது. தமிழர்கள் முஸ்லீம்களாகிய போது தமிழநாட்டில் மாலிககாபூர் வரும்வரை வடநாட்டில போல போராட்டம் ஒன்றும இருநததில்லை. எனவே, பழைய தமிழ் முஸ்லீமகளின வரலாற்றை மேலும் ஆராயவது இன்றியமையாததாகும, சீதக்காதியின் காலத்திலிருந்து இஸ்லாமியத்தில அழுத்தமான பற்றுடையவர்களும கூட தங்களுடைய மதம தமிழ்நாட்டு மரபுமாகி தமிழோடு தமிழாய் இஸ்லாமியரலலாதாருக்கும் இனிக்க வேண்டும் என்ற முயற்சியில ஈடுபட்டார்கள். அந்த முயற்சியில் வெற்றியாகசு கடிகமுத்துப் புலவரின் சீடரான கவிஞா பெருமான் உமறுப் புலவர் நபிகள நாயகத்தின் வரலாற்றை வாய்க்கும் மனதிற்கும இனிககும் தமிழாக சீறாப் புராணததையும் பாடினர் இஸலாமியத்தில பெரும புலவரும் பெரும் ஞானியுமாகிய சதக்கத்துல்லா அபபா அவர்கள் துணை நின்றதாலேயே இந்த முயற்சியில் உமறுப் புலவர் ஈடுபட்டார.

இந்த வெற்றியைக் கண்ட பல இஸ்லாமியத தமிழ்ப் புலவாகள் பலவகைத தமிழ இலககியங்களை — இஸலாமியக் கொள்கைகளை கைவிடாது எழுதிக் குவித்தார்கள. இருபதாம் நூற்றாண்டிலும் குலாம காதிறு நாவலர் அவர்கள் நசகூாப புராணம, மொய்தீன புராணம் போன்றவற்றைப் பாடினர். இன்றும்கூட கவிஞர் அபதுல் ரகுமான போன்றவாகள் இத்தகைய தொணடைத தொடர்ந்து செய்து வருகின்றனா.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் நூல்களைப் பதிப்பித்து வந்த இந்துக்களும் சீறாப் புராணத்துக்கு செயகுததம்பி பாவலரைக் கொணடு உரை எழுதி வெளியிட்டார்கள். ஆனல், மேற்கொணடு இததகைய முயற்சிகள் நடைபெறவிலலை. ஒரு இருணட காலம தமிழநாட்டிலும் உருவாகியது. இதனைப் போககுவதற்கு இபபோதுதான் முயற்சிகள நடந்து வருகின்றன.

இஸ்லாம் முதலிய சமயங்களை அறிந்து கொள்ள வேணடுமானல், பொதுவாக இஸலாத்தைப பறறிய நூலகளைப படிததால் மட்டும் போதாது. பாவாணர்கள் செயகிற ஒரு பெருநதொணடு என்னவென்றால தான சொல்லவநதது ஒரு இனத்திற்கோ ஒரு மதததிறகோ உரியதுபோன்று தோன்றுவதை

யெல்லாம் உலகுக்கே பொதுவானதாகக் காட்டுவதுதான். அந்த நிலையை இஸலாமியத தமிழ்ப் பாவலர்களும் பின்பற்றினார்கள் என்பதைக காண்கிறோம். ஆனால் ஏதோ இந்த நாட்டின் கெட்ட காலம் இந்த நூலகளோடு பழகும வழக்கம் குறைந்து வந்து மறைந்தே போயிற்று. புதிதாக முயலுமபோது அநத நூலகளில் இருக்கிற அரபிபோன்ற மொழிச் சொற்கள் அந நூலகளைப் படிப்பதற்குப் பெரும் தடையாகத தோன்றின. ஆனால், மற்றொருவகையில இஸலாமிய மதத்திற்கும் இந்து சமுதாயத்திற்குமுள்ள தொடர்பு நிலைத்து வந்தது.

வெறும் கொள்கைகளையும் சடங்குகளையும் வற்புறுத்துவோரே இந்த உலகத்தில் மிகுதியானவர். ஆனால். சமயமோ கடவுளோடு நாம் உறவு கொணடு அந்த அனுபவத்தில் திளைத்து வாழ்வதேயாம. அத்தகையவர்கள்தான் அனுபூதிமான்கள், மெய்ஞ்ஞானிகள், சூஃபிகள் (Mystics), சிததர்கள் என்று பெயர் பெறுவர். இவர்கள் எந்த மதத்தவர்களாயினும் அவர்கள் அனுபவததைக காணும்போது, அடிப்படையில் ஒற்றுமையே காண்கிறோம் மொழி, மொழியில வரும் பெயர்கள் அவரவர்களின் பழகக வழக்கங்கள் மாறுபடலாம். ஆனால, அடிப்படை அனுபவம் மாறுவதில்லை. செயிண்ட் தெரஸா, ஜலாலுத்தீன் ரூமி, நம்மாழ்வார், மணிவாசகர், பதினெண சித்தர்கள் முதலியோர்களின் நூலகளை இந்தக் கண்கொணடுபார்த்தவர்கள் இந்த ஒற்றுமையை வற்புறுத்தி மேனாட்டிலும் கீழ் நாடுகளிலும் எழுதி இருக்கிறார்கள். பதினெண் சித்தர்களில் இஸலாமியர்களும் இருப்பதைக் காணலாம்.

குணங்குடி மஸ்தான் பாடல்கள் இந்துக்களின் பாடல்கள் போலவே இந்துக்கள் பாடிமகிழ்கிறார்கள். இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகள் அலலது சூஃபிகள் பாடும்போது பல இந்து மதச் சொற்களையும் பயன்படுததி இந்துககளும் இந்த உணமைகளை உணர வேணடுமெனற பரந்த நோக்கில் பாடியுள்ளாாகள். ஆனால் சித்தாகள் பாடல்களையோ இந்து மதத்தின் உயர் நிலையில் இருப்போர் படிப்பதிலலை, பொது மக்களிடையேதான் அந்தப் பாடல்கள் நாடோடிப் பாடல்கள்போல அன்றாட வாழ்வில் பரவி இருககினறன. அதனால், இந்த உணமையை எடுத்து விளக்க வேணடியிருக்கிறது. அத்தகைய முயற்சியில எனது நணபா திரு. மணவை முஸ்தபா அவாகள் ஈடுபட்டு 'தமிழில இஸலாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள் எனற கருததரங்கைநடத்தினார்கள். திரு, மணவை முஸ்தபா தமிழறிவு நிறைந்தவர்: நலல தமிழ்த் தொணடர்; ஆனால, வெறியா அல்ல. இந்திய நாட்டு ஒருமைப்

பாட்டிலும் உலக ஒருமைப்பாட்டிலும் அசைக்க முடியாத நம்பிக்கையுள்ளவர் அவர் தந்தையார் 'விரும்பியதுபோல தமமுடைய வாழ்வையும் வருவாயையும தமிழுககும் உலகுககும பயனபட, அவறறில் ஒரு பெரும் பஙகை இவற்றிற்கென ஒதுக்கி ஒழுகி வருகிறார் இவற்றிற்கான நிலைக்களமாக அமைந்திருப்பதே 'மீரா ஃபௌண்டேஷன்' அற நிறுவனம. அதன தோற்ற வளர்ச்சிக்கான மூலராகவும் விளஙகுகிறார் அவருககுக் கிடைககும் வெறறி தமிழுக்குக கிடைககும் வெற்றி; இந்திய ஒருமைப்பாட்டுக்குக கிடைக்கும வெற்றி, உலக ஒருமைப் பாட்டுக்குக் கிடைக்கும் வெற்றி.

இவர் நடத்திய சூஃபி இலக்கியக் கருத்தரஙகில் அறிஞர்கள் ஆற்றிய சொற்பொழிவுகள் காற்றோடு காற்றாகப் போகாமல் பினவரும் சந்ததியாருக்கும் உதவுவதற்காக அச்சு வடிவில்இதோ உஙகள் கையில தவழ்கிறது.

சூஃபித்துவம் எப்படி தோன்றியது? எப்படி வளாந்தது? எனற வரலாற்றை அல்ஹாஜ சுலைமான் அவர்கள் முதலிலேயே விரிவாக விளக்கியுள்ளார். ஒரு ஐ, ஏ எஸ பதவியில இருப்பவர் இத்தகைய தொண்டில் இவ்வளவு ஆழமாகவும் சிறந்த அறிவோடும் ஈடுபடுவது முதலில வியபபைத்தான விளைவிககிறது. அந்தப் பெரியாரே குணங்குடி மஸதானைப் பறறியும் ஒரு சிறந்த அறிமுகததைச செயது வைககிறார். இனி சூஃபிகள் எனற வுடன இவாகள் யாரோ வேறு நாட்டவாகள் என்ற உணாவு தோனறுதபடி சிததர் நூல்களில் ஆராயச்சி செய்யும் டாக்டர் மாணிககவாசகம் சிததர்கள் பாடலகளுககும சூஃபிகளுக்கும உள்ள ஒறறுமையை மறக்க முடியாதபடி நிலைநாட்டியுளளாா. திரு, தக்கலை எம். எஸ. பஷீர அவர்கள இஸலாமிய சூஃபிகளின தமிழ்த் தொணடை பட்டியல ஒனறின வழியே தெளளத்தெளிய விளககுகின்றா, சூஃபி எழுத்துக்கள் மெய்ஞ்ஞான நூல்களாக விளஙகுவதோடு அலலாமல தமிழ இலக்கியங்களாக இலங்கை யிலும் பிறந்த வரலாறறை திரு. பஷீா அவாகளே எழுதியுளளாா கள். தமிழ்ச் சூஃபிகளுககு சில இடங்கள பிடித்தமாகிவிட்டது. தக்கலை, கோட்டாறு, குணஙகுடி என்று சொல்லிக்கொணடே போகலாம். அவறறில கோட்டாறு தநத ஞானியர்களைப் பறறி தாம் அறிந்த வகையில் திரு. செ. பசுலு முகியீதின எழுதுகிறார்.

தமிழ்நாட்டில் பல புலவர்களும் ஞானிகளும் வாழந்திருக் கின்றாகள. இவாகளில் பெண பாலாரும் உணடு. இவாகளில பலரை இந்துககளுமகூட பாவா, பாவா எனறு அழைப்பதைப்

பார்க்கலாம். இவர்கள் எண்ணிக்கையில் அடங்கமாட்டார்கள். ஆனால் இவர்களில சிலர் எழுதிய பாடல்கள் சில கிடைக்கின்றன அப்படி பாடியவர்களில் எட்டுப் பெரியவர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் கிடைத்துள்ளன. எட்டு அறிஞர்கள், கிடைக்க முடியாத புதையல்கள்போல நூல்களை நமக்குத் தந்துள்ளார்கள சித்தர் பாடலகளில பீர் முகம்மது என்ற பெயரில் சில பாடல்கள் வருகின்றன. அவாதான தக்கலை மெய்ஞ்ஞானி பீர் முகம்மது அவர்கள். பேராசிரியர் கா. முகம்மது பாரூக் அவர்கள் இவரைப் பற்றிஆய்ந்துள்ளார். இந்தக் காலத்தில் இவையெல்லாம் நமக் கேன் என்று கேட்கத்தான் பலரும் என்னுவார்கள். அவர்கள் வாயை அடைப்பது போல 'விஞ்ஞான நோக்கில் மெய்ஞ் ஞானியா' என்ற தலைப்பில் திரு. ஹைதர் அலி பேசியுள்ளார். இலங்கையில் வாழ்ந்த தமிழ் சூஃபியாக்களைப் பற்றி நேரில் ஆராய்ச்சி செய்து, டாக்டர் உவைஸ் அவர்கள் எழுதியுள்ளது வரவேற்கத்தக்கதாகும். குணங்குடி மஸ்தான் அவர்கள் பல வடமொழிச் சொற்களையும் இந்துமதச் சொற்களையும் பயன் படுத்துகிறார். தாயுமானவர் பாடல்கள்போல வரும் இவர் பாடல்கள் தாயுமானவர் பாடல்களைவிட எளியன. இனிமை யானவை; பொருளாழம் உள்ளவை. இந்து மதச் சொற்கள் போல தோன்றுபவைகளை தம் மெய்ஞ்ஞான அனுபவத்திற்கு ஏற்றபடி பயன்படுத்தியுள்ளார் அவற்றின் உண்மைகளை கவிஞா அப்துல் ரகுமான் அவர்கள் அரிதின் முயன்று விளக்கி யுள்ளார். எனவே அச்சொற்பொழிவுகள் ஆராய்ச்சியின் பயனாக எழுந்தவையாகும். அவை என்றென்றும் பயன்படும் பல்கலைக் கழக ஆராய்ச்சிச் சொற்பொழிவு போல விளங்குவதால் என்றென் றும் நிலைத்து நின்று வழிகாட்டும். திரு. மணவை முஸ்தபா அவர் களின் முயற்சி இவ்வளவு பெரிய வெற்றி அடைந்துள்ளதைக் கண்டு, அவர் மாணவராக அண்ணாமலைப் பலகலைக் கழகத்தில, பயின்றபோது 'நச்சினார்க்கினியர்' என்ற பெயரோடு அவர் உலவியது எவ்வளவு பொருத்தம் என்று வியந்து மனமகிழ்ந்து அவரையும் அவர் தொண்டையும் உளமாற வாழ்த்துகிறேன.

**டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்**
முன்னாள் துணைவேந்தா
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

சென்னை,
10—8—80.

# வாழ்த்துரை

தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள் ஏராளம் இருக்கின்றன. இவற்றை அறிஞா பெருமக்கள அறிவதற்கான வாய்ப்பை அளிக்கும நோக்கமாக மணவை முஸதபா அவர்கள் மேறகொணடுள்ள முயற்சி பாராட்டததக்கது மாத்திரம அனறிப பின்பற்றப்பட வேணடிய தொனறுமாகும். இத் துறையிலும் இது போனற பல துறைகளிலும கருததரங்குகளை நடத்தி இக்கருத்தரஙகுகளில் வெளியிடப்படும் பயனுள்ள கருத்துககளை நூலுருவில அறிஞர் பெரு மக்கள் பெறச செய்வது நல்லதொரு முயற்சியாகும

தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள் பற்றிய கருத்தரங்கினை, இஸலாமிய அடிப்படையில் தோனறிய இலக்கி யங்களைப் பரப்பும் தமது திட்டததிலே மணவை முஸதபா அவர்கள் இரணடாவது கருத்தரங்காக நடத்தி உளளார் இக் கருததரங்கிலே நல்லறிஞாகள பலா வழங்கிய கருததுக்களை நூலுருவில் கொணடுவந்துளளார் தமிழில இஸலாமிய மெய்ஞ் ஞான இலககியஙகளைப பலவேறு அறிஞர்கள வெவ்வேறு கோணங்களிலிருந்து. ஆராயநது வழங்கிய அறிய கருததுக்கள பலவற்றை இந்நூல் கொணடுள்ளது இததகைய நன்முயற்சி வளர்நதோஙக எல்லாம் வல்ல அலலாகுத்தஅல நலலருள் பாலிப்பானாக ஆமீன்

நாஞ்சில நன்மொழியோன தக்கலை எம. எஸ். பஷிர் அவர்கள் தமிழில இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியஙகள பற்றி ஆராயநது வருபவர்: அவரின் பதது எழுததோவியங்கள் இத தொகுப்பில் இடம பெறறுள்ளன எனபது குறிப்பிடததககது. அவறறுள ஒன்று இஸலாமிய சூஃபிகளின தமிழததொணடு பறறி யது. இக்கட்டுரையில் தமிழகததிலும் ஈழததிலும வாழநத அறுபத்தைந்துககும் மேற்பட்ட மெய்ஞ்ஞானிகளைப் பறறிக் குறிபபிட்டுளளாா. பெயரை மாத்திரம குறிப்பிடுவதுடன அவா நின்றுவிடவிலலை வரலாற்று அடிப்படையில் அவாகள அனைவரையும் வரிசைப்படுததி உள்ளார். இம்மெய்ஞ்ஞானி களின் தமிழ்த்தொணடினை இஸலாமியத தமிழ் இலக்கிய வரலாற்று அடிப்படையில ஆராயவதற்கு இபபட்டியல பெரிதும் பயனுடைய தொனறுகும, மெய்ஞ்ஞானி பீரப்பா முதல சித்தி லெவ்வை வரை அறுபத்தைநது சூஃபியாககளைப் பற்றிக் குறிபபிட் டுளளாா. அத்தோடு நின்றுவிடாது மெயஞ்ஞானக் கருத்துக் களை உரைநடையில் வழங்கியுளள பலரைப் பற்றியும் தொகுத் துத் தந்துளளார்.

இந்தப் பெரிய பட்டியலிலும் தமிழில் இஸ்லாமிய மெய்ஞ் ஞானப் பாடல்களைத் தந்துள்ள பலர் விடுபட்டுள்ளனர். தமிழில் இலக்கியம் படைத்த இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகள் எத்தனைபேர் இலைமறை காய்களாகி உள்ளனர் என்பதை இத்துறையில் ஆழ்ந்த ஆராய்ச்சி மேற்கொள்ளும்வரை கூறிவிடமுடியாது.

தமிழில் இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள் பற்றிய கருத்தரங்கு நடைபெற்றபின்னர் எமது கைக்கு எட்டிய மெய்ஞ் ஞான இலக்கியங்கள் பற்றி ஈண்டு குறிப்பிடுவது பொருத்த மானது என்று நினைக்கிறோம. அத்தகைய மெய்ஞ்ஞானிகளுள் ஒருவர் கலிபத்து செய்கு ஷாஹுல் ஹமீது என்பவரும் ஒருவர் ஆவார். இவர் கலிபத்து செய்கு ஷாஹுல் ஹமீது அப்பா நாயகம் எனவும் அழைக்கப்பட்டார். இம்மெய்ஞ்ஞானி பாடிய வற்றுள் தற்பொழுது எமக்குக் கிடைத்துள்ளவை ஞானக் கமல மணிமாலை, ஞான அலங்காரம், ஞான அற்புதம், ஞான வேதாந்தம் என்னும் பிரிவுகளில் இடம்பெற்றுள்ள பாடல்களே யாகும். இவற்றையும் பல்வேறு பிரிவுகளாக கலிபத்து செய்கு ஷாஹுல் ஹமீது அப்பா நாயகம் அவர்கள் வகுத்துள்ளார்கள். ஞான அலங்காரம் என்னும் பிரிவில்,

பூரண மெய்ஞ்ஞானம் நூறு,
சம்பூர்ண ஆசிரியவிருத்தம்,
சச்சிதானநத ஆசிரியவிருத்தம்
மெய்ஞ்ஞான ஆனந்தக்களிப்பு
ஞானச்சர நூல்
ஞானககண் மணிக்கும்மி
மாசிலாமணிப் பதிகம்
மெய்ஞ்ஞான முச்சுடர் விளக்கம்
எக்காலக் கண்ணிகள்
எந்நாள் கண்ணிகள்
ஞானத்திறவுப் பதிகம்
மெய்ஞ்ஞான தீபம்
ஞானத்திருநடி
ஞானத்தெளிவு
மெய்ஞ்ஞான அடைக்கலம்

என்பன இடம்பெற்றுள்ளன. அதேபோன்று ஞான அற்புதம் எ ் னும் பிரிவில் இடம் பெற்றுள்ளவை,

ஞான சூஸத்ரம்
றஹ்மான கண்ணிகள
ஞானச்சுடர்
ஞான ஒளிவு
ஞானப்பிரகாசம
சூஸதர மெயஞ்ஞானம் பதிஞறு
நபிநாயகம் அவாகள பேரில முஞஜாத்து
வேதத திருபுகழ்ச்சி

என்பனவாகும். ஞான வேதாந்தத்தில ஞான உபதேசம் இருபத்திரணடு.

வண்ணம்
பூரணநூல்
முகியிதத்தீன் ஆணடவா பேரில் ஆசிரியவிருத்தம்
காஜாமுஈனுத்தீன் ஆண்டவர் பேரில ஆசிரியவிருத்தம்
செய்கு சிந்தா மதாா நாயகம அவர்கள் பேரில ஆசிரிய விருத்தம்
சுல்தானுல ஆரிபு செயயது அஹமதுல் கபீர் ஆண்டவா கள பேரில ஆசிரியவிருததம்
காதீர் அலி மீரான் சாஹிபு நாயகம் அவாகள பேரில ஆசிரியவிருத்தம்

ஞானவல்லபப பதிகம்
அருளானந்தப் பதிகம
காரணமாலை
தவயோகசூஸ்த்ரம்
அடைக்கலமாலை
கற்பஞானம் பதிஞறு
கதிமெயஞ்ஞானம் பதிஞெனறு
ஞானமலா முபபது
ஞானநிலை
பஞ்சபக்ஷி
திருவருள வெண்பா

முதலியன இடம் பெற்றுள்ளன.

*கலிபத்து செய்கு சாகுல் அமீது அப்பா நாயகம் அவர்களின் ஞான அற்புதம் பிரிவில் இடம் பெற்றுள்ள ஞான ஒளிவு பகுதியில சில பாடல்களை ஈணடு நோக்குவோம். இப்பகுதியில் உளள 176 முதல் 185 வரை உள்ள செய்யுட்களில் அறபு அரிச்சுவடியில் உள்ள எழுத்துக்களுக்கும் மனிதனின் உடலுறுப்புக்*

களுக்கும் உள்ள தொடர்பு எடுத்தோதப்படுகிறது. முதலில் செய்யுட்களைப் பார்ப்போம்.

அலிபு முதல் எவரையும் உள்ள ஹறு
பதையும் யானும் சொல்வேன்
அன்புடைய மானிடரே மகிழ்வாகக்
கேட்டுஅறி வீரே (176)

அருளான புருவமத்தி அலிபதுதான்
அன்பான பேயும்
அருமையுள்ள வலப்புருவம் இடப்புருவம்
தேயென்று அறிவாய் (177)

முறையான தேயதுதான் நெற்றியாகும்
தெளிவான ஜீமும்
முதலான தலையாகும் ஹே வலத்தோள்
இடத்தோள்கே கண்ணே (178)

விதமான தாயதுதான் வலமுழங்கால்
இடமுழங்கால் தாலே
மேன்மையுள்ள றேயதுவும் வலதுவிலா
இடதுவிலா ஸேயே (179)

கனமான ஸீனதுவும் வலதுமார்பு
இடதுமார்பு ஷீனே
கருணையுள்ள வலதுசெவி ஸாதாகும்
இடதுசெவி ழாதே (180)

சரியான தேயதுவும் வலக்கரண்டை
இடக்கரண்டை ளேயதுலாம
சங்கை வலக்கரம்ஐன்தான் இடககரமும்
கைனுகு மறிவாய் (181)

முறையான பேயதுவும் வலபபுறங்கை
இடப்புறங்கை காபு
முதுகெலும்பு காபாகும் துடைபொறுத்த
லாமாகும் அரியே (182)

மீமதுவும் நெஞ்சுமுதல் மூளையாகும்
நூஹின் மகாம் நூனே
வெற்றியுள்ள நபுசுகொப்புழ்வாவாகுய
கல்புஹேயு மாகும் (183)

லாமலிபு மூச்சாகும் நன்மை அம்ஸ
விந்தாகும் இன்னும்
நலமான ஏறூஹு தெளிவாகச்
சொன்னேன் நற்பொருளை (184)

தெளிவாக இன்ஸானில் அமைந்திருக்கும்
ஹறுபுகளைச் சொனனேன்
சிறப்புடனே நல்விதமாய் மாந்தர்களே
அறிநதிருங்கள் நலமாய (185)

தடித்த எழுத்துகளில உள்ளவை அறபு அரிச்சுவடியில் உளள எழுத்துக்களாகும். அறபு எழுததுககள் பலவற்றை அவை உச்சரிக்கப்படும் அதே முறையில தமிழில் எழுதமுடியாது. 177ஆம் செய்யுளிலிருந்து அறபு எழுத்துக்கள் ஆரம்பிக்கின்றன. இநத எழுத்துக்கள் எழுதப்படும் முறையையும் மனிதனின் உருவம் அமைந்திருக்கும் முறையையும் கருத்திற்கொண்டே கலிபத்து செய்கு ஷாஹுல் ஹமீது அப்பா நாயகம் அவர்கள இக்கருத்துகளைத் தெரிவித்துளளார். இக்கருத்துககளை இன்னொரு முறையில் பார்க்கலாம். அரபு அரிசசுவடியில எழுத்துக்கள் அமைந்துள்ள முறையில் பார்த்தால் அரபு எழுத்துக்களை தமிழில் எழுதமுடியாமை பிரசசினையாக இராது.

ا முதலாம் எழுத்து புருவமத்தியாகும்

ب இரண்டாம எழுத்து வலப்புருவமாகும்

ت மூன்றும் எழுத்து இடப்புருவமாகும்

ث நான்காம் எழுத்து நெற்றியாகும்

ج ஐநதாம் எழுத்து தலையாகும

ح ஆறும எழுதது வலத்தோளாகும்

خ ஏழாம் எழுத்து கண்ணாகும

د எட்டாவது எழுதது வலது முழஙகாலாகும

ذ ஒன்பதாவது எழுத்து இடது முழஙகாலாகும்

ر பத்தாவது எழுத்து வலது விலாவாகும்

ز பதினோராவது எழுந்து இடது விலாவாகும்

س பன்னிரணடாவது எழுத்து வலது மார்பாகும்

ش பதினமூனறாவது எழுதது இடது மாாபாகும்

ص பதினனகாவது எழுதது வலது செவியாகும்

ض பதினைந்தாவது எழுத்து இடது செவியாகும்

ط பதினாறாவது எழுத்து வலது கரண்டையாகும்

ظ பதினேழாவது எழுத்து இடது கரண்டையாகும்

ع பதினெட்டாவது எழுத்து வலது கரமாகும்

غ பத்தொன்பதாவது எழுத்து இடது கரமாகும்

ف இருபதாவது எழுத்து' வலது புறங்கையாகும்

ق இருபத்தொராவது எழுத்து இடது புறங்கையாகும்

ك இருபத்திரண்டாவது எழுத்து முதுகெலும்பாகும்

ل இருபத்துமூன்றாவது எழுத்து தொடைபபொருத்தாகும்

م இருபத்துநான்காவது எழுத்து நெஞ்சு முதல் மூளையாகும்

ن இருபத்தைந்தாவது எழுத்து உயிரின் நிலையாகும்

و இருபத்தாறாவது எழுத்து கொப்பூழாகும்

ه இருபத்தேழாவது எழுத்து இருதயமாகும்

لا இருபத்தெட்டாவது எழுத்து மூச்சாகும்

لا இருபத்தொன்பதாவது எழுத்து விந்தாகும்

ى முப்பதாவது எழுத்து ஆன்மாவாகும்

*இப்பாடல்களில் அறபு எழுத்துக்களுக்குப் புறம்பாகப் பல அறபுச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றையும் அவற்றின் தனித்தனி கருத்தையும் பார்ப்போம்.*

ஹறுபு-எழுத்து ; நூஹ் ; உயிர் மகாம்-இடம்
நபுசு—ஆசை ; கலபு-மனம் ;இன்ஸான-மனிதன்.

*கலிபத்து செய்கு சாஹுல் ஹமீது அப்பா நாயகம் அவர்கள் பாடியுள்ள அடைக்கலமாலை முப்பது செய்யுட்களைக் கொண்டு ஞான வேதாந்தம் என்னும் பகுதியில் இடம் பெற்றுள்ளது. தொங்கல் செய்யுட்களாக அமைந்துள்ளவற்றுள் முதலாவது இவ்வாறு உள்ளது.*

ஆதியாகிய பெரியவனே
    ஆல மடங்கலும் புகழ்ச்சி உளள
நீதி ரஹ்மா னேவல லவனே
    நெறியுள் ளோர்க்கெலலாம் தயாள வேந்தே
ஓதி உணராத பாவி கட்கும
    உதவி செய்கின்ற பரம்பொருளே
பாத கன என் மேல பாரில் உள்ளோர்
    பகையாமற் காருன் அடைக்கலமே

ஆலம்-அகில உலகு ; றஹ்மான்-அளவற்ற அருளாளன்)

அபிராமம் ஆ. மீ. இ. காதர் முகையதீன் என்பவர் இயற்றியது வேத மெய்ஞ்ஞான நூல். 1933இல வெளியிடப் பட்டது இந்நூல். இவ்வேத மெய்ஞ்ஞான நூலில் கடவுள் துதியைத் தொடர்நது துதிப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. சற்குரு நபிகள் நாயகம், முகியித்தீன் அப்துல்காதிா, நாகூர் சாகுல் அமீது, ஏர்வாடி செய்யது இப்ராஹீம் முதலிய பெரியார் கள் மீது பாடப்பட்ட துதிப்பாடல்களைத் தொடர்ந்து இல்மின்ஸான் பாடல் அமைந்துள்ளது. கிளிவாலைக் கண்ணிகள் எனனும் புதிய ஒரு வடிவமும் இடம் பெற்றுள்ளது அடுத்து நொண்டிச்சிந்துகள் இடம் பெற்றுள்ளன. இந்நொண்டிச் சிந்துகள் மூலம் மலக்குகளையும் வேதங்களையும் நபிமார்களையும் கியாம முடிவையும் அறிவது பற்றியும் இஸ்லாத்தின் ஐநது காரியங்கள் அறிவது பற்றியும் போதிக்கப்படுகிறது. வேத மெய்ஞ்ஞான மஞ்சரி ஆக அமைந்துளள அடுத்த பகுதியில் விருத்தங்களும் கீர்த்தனங்களும் இடம் பெற்றுள்ளன பல்வேறு சந்தங்களில பாடக்கூடியனவாக இக்கீர்த்தனஙகள் அமைந் துள்ளன. இந்நூலில் அமைந்துள்ள மற்றொன்று ஆனநதக் களிப்பு.

முத்திசுடர் என்பது மற்றொரு நூல். கொணடச்சியைச் சேர்நத முகம்மது சரீபுப் புலவர் இதனை இயற்றி உள்ளார். கௌது நாயகர் காரணப் புராணம் என்னும் காப்பியத்தையும் இவர் இயற்றி உள்ளார். இவர் பிறந்த இடமாகிய கொணடச்சி மன்னார்ப்பகுதி முசலி தெற்கில் உள்ளது. இலங்கையின் வட மாகாணத்தின் ஒரு துறைமுகப் பட்டினமாக மன்னார் விளங்கு கிறது.

நகுயான் பேரில் முனாஜாத் என்னும் நீண்ட பாடல் தொகுதி ஒன்றை முத்திச்சுடரில் இடம் பெறச்செய்துள்ளார் மன்னர் சரீபுப் புலவர் முததிச்சுடரில நபிகள் நாயகம் பேரில் சலவாத்துப் பாட்டும் முகியிததீன் ஆண்டவர் அவர்கள் பேரில் இதழி ரணடொட்டாதியற்றலையுடைய வெணபாவும் ஆசிரியப் பாக் களும் இடம பெற்றுள்ளன.

சிறப்புமிக்க தமிழில் உள்ள இத்தகைய இஸ்லாமிய மெய்ஞ் ஞான இலக்கியங்களைத் தேடிபெற்று ஏனையோரும் நன்மை அடைய எல்லாம வல்ல அல்லாகுத்தஆலா அருள் புரிவாளுக.

டாக்டா எம். எம். உவைஸ்
பேராசிரியர்,
இஸ்லாமியத் தமிழ் இலக்கியத் துறை,
தமிழ் மற்றும் இந்திய மொழிப்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்.

மதுரை,
28—7—80.

# தொடக்கவுரை

இஸ்லாமிய ஞானிகள் தமிழிலக்கியம், கலை, பண்பாட்டு வளர்ச்சிக்கு செய்திருக்கும் தொண்டுகளை தமிழ உலகம் எப் போதும் நன்றியுடன் போற்றி வருகிறது.

தமிழ் இலக்கியம், குறிப்பாகத் தமிழில் உள்ள சமய தத்துவ இலக்கியங்கள் எந்த அளவு இஸ்லாமியத தததுவக் கருத்தால் பாதிக்கப்பட்டது, அதுபோலவே முஸ்லீம் ஞானிகளால் ஆக்கப் பட்ட தமிழ் சமய பக்தி நூல்கள் எநத அளவிற்குத் தமிழ் நாட்டில் இஸ்லாத்துக்கு முன்பிருந்த சமய பக்திக் கருத்துக் களால் பாதிக்கப்பட்டன என்பதையும் காணவேணடும்.

ஒன்று இஸ்லாத்தின் அடிப்படை கொள்கை, மற்றொன்று இஸ்லாம் தமிழ் நாட்டுக்கு வந்தபோது இங்கே நிலவியிருந்த சமயக் கருத்துக்கள்.

இஸ்லாத்தின் அடிப்படைக்கொள்கை மிக எளிமையானவை, "இறைவன் ஒருவனே; அவனே அல்லா! அவனை நேசிப்பதை போல் நடிப்பதைவிட அவனிடம் பயபகதி பூணடு அவனுடைய குழந்தைகளாகிய மக்களுக்குத் தொண்டாற்ற வேண்டும்" என்பதுதான்.

இஸ்லாம் தமிழ்நாட்டில் அடி எடுத்து வைத்த காலத்தில இங்கு சைவம், வைணவம் ஆகிய மதங்கள் மேலோங்கியிருந்தன. இவை கடவுள் ஒருவரே எனற கொள்கையை உடையதாக இருந் தாலும், பக்தி இயக்கத்தின் காரணமாக ஏக தெய்வக் கொள்கையின் அழுத்தத்தையும், உறுதியையும் இழந்து மக்க ளிடையே பல தெய்வ வழிபாடு இடம் பெறும்படிச் செயதுவிட்டன.

ஏக தெய்வக் கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் இஸ்லாம் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை.

தமிழ் நாட்டு சைவ, வைணவ மக்களிடையே ஏக தெய்வ வழிபாடு இலகுவில் அவர்களிடம் இருந்து பிடுங்கி எறிந்துவிட முடியாதபடி வேர் ஊன்றி விட்டது.

அந்த நாளிலேயே ஏக தெய்வக் கொள்கையை வலியுறுத்தித் தமிழகச் சித்தர்கள் பாடுபட்டு வந்தார்கள். தமிழ்நாட்டுச்

சித்தர்களின் கோட்பாடுகளுக்கு ஏற்றபடியாக முஸ்லீம் சூஃபி களுடைய கோட்பாடுகளும் அமைந்து இருநதன.

முஸ்லீம்களிடையே சூஃபிகள் எப்படித் தோன்றினார்கள். மனித வாழ்க்கை பற்றிய ஆராய்ச்சியிலே ஈடுபட்டு ஆத்ம விசா ரணையில் ஆழ்ந்து, ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி, இறை வழிபாட்டிலே இன்பங்கண்ட மக்கள் உலக வரலாற்றிலேயே உயரிய இடங்களைப் பெற்றிருக்கின்றனர்.

இத்தகைய உத்தம மனிதர்கள் பண்டைக்காலம் தொடங்கி இன்றுவரை எல்லா நாடுகளிலும், எல்லா இனத்திலும் ஒளி வீசிக்கொணடிருக்கின்றனர்.

இவர்கள் எல்லோரும் சூஃபிகள்தான். ஆனால் இஸ்லாமிய சமயத்தில் இருக்கும் ஞானசித்தர்களை சூஃபிகள் என்று குறிப்பதே இன்று வழக்கமாயிருக்கிறது.

சூஃபி எனற சொல் 'போபாஸ்' என்ற கிரேக்க அடிச்சொல்லி லிருந்து வந்ததாகக் கூறி அதற்கு 'அறிவாளி' என்று பொருள் சொல்லி வந்தனர்.

அந்த நாளில் டாக்கா மஸலீன் போன்ற ஆடைகளை உயர்குல மக்கள் அணிந்து வந்தனர். அப்போது ஆடம்பரத்தையும் பகட்டையும தவிர்த்த சூஃபிகள் கரடு முரடான கம்பளி ஆடை களையே அணிந்து வந்தனர். கம்பளி ஆடை அணிந்த ஞானிகளை 'சூஃபி' என்ற சொல் குறிப்பிடுவதாய் அமைநதிருந்தது.

நபிகள் நாயகம் காலத்தில் வாழ்ந்த அவருடைய திண்ணைத் தோழர்களையும் சூஃபிகள் என்று சொன்னதாக சிலர் கருது கிறார்கள். ஆனால் ஆராய்ச்சி மிக்க அறிஞர்கள் இநதச சொல் தூய்மை எனனும் பொருளைக் குறிக்கும், 'சபா' எனற அரபுச் சொல்லிலிருந்து வந்ததாகச் சொல்கின்றனர்.

தூய்மையான வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்த சான்றோர்களைத் தமிழில் அறிஞர்கள் என்றும், வடமொழியில் சித்தர்கள் என்றும் வழங்கியுள்ளனர்.

தொல்காப்பியத்தில் மனிதர்கள் வாழ்க்கையில் அடைய வேண்டிய வெற்றியை ஏழாகப் பிரித்துச் சொல்லப்பட்டிருக் கிறது. அவற்றுள் ஒன்று 'அறிவர்கள்' அதாவது 'சித்தர்கள்', சூஃபிகள் அடையும் வெற்றி' என்று சொல்லப்பட்டிருககிறது.

குற்றமில்லாத ஒழுக்கத்தினுல் மூன்று காலத்துச் செய்திகளையும் தெளிவாக அறிந்து வாழ்க்கையை வெற்றியுடன் நடத்துபவர்கள் அறிவாகள்; அதாவது சித்தர்கள்-சூஃபிகள்.

''மறுவுஇல் செயதி மூவகைக் காலமும
நெறியின ஆற்றிய அறிவன தேயன்''

என்பது தொல்காப்பியம்.

சூஃபிகள் நபிகள் நாயகத்தின் நேரடியான வழித்தோன்றல் கள் என்றும் சூஃபித்துவத்தைப் பொறுத்தவரையில் அதன் கொள்கைகள் பரவக் காரணமாயிருந்தவர்கள் நபிகள் நாயகத் தின் தோழர்கள் என்றும் சொல்கிருர்கள்.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் சித்தர்களுக்கும். சூஃபி களுக்கும் வேற்றுமை இருப்பதாகத தெரியவில்லை. சித்தர்கள் ஆடம்பரங்களையும் ஆரவாரங்களையும் வெறுத்தார்கள. தாவர உணவு உண்டார்கள். சாதி சமயங்களைக் கடநது அனைவரையும நேசித்தார்கள். அவர்கள் நல்வாழ்வுக்காகப் பாடுபட்டார்கள்.

சூஃபிகளும் இந்தக் கொள்கைக் கோட்பாட்டுடனதான் வாழந்திருக்கின்றுர்கள்.

தமிழ் நாட்டில் சித்தர்களும், சூஃபிகளும் தமிழில ஒரு புதிய ஞான இலக்கியத்தையே உருவாககியிருக்கிருர்கள்.

சூஃபிகளும், சித்தர்களும் தமிழ் மககளுக்காவே தங்கள் இலக்கியங்களைப படைத்திருக்கிருாகள். தமிழ மக்கள் புரிந்து கொளளக்கூடிய எளிய இனிய சொற்களையே கையாணடு அற்புத மான ஞானப் பாடல்களைப் பாடியிருக்கிருாகள.

குணங்குடி மஸ்தான் சாகிபு, பீர்முகம்மது அப்பா போன்ற சூஃபிகள் அருமையான ஞானப்பாடல்களை அருளி இருக்கிருர்கள். பட்டினத்தார். தாயுமானவர், இராமலிங்க வள்ளலார் போனற சித்தர்களும் அற்புதமான மெய்ஞ்ஞானப் பாடல்களை இயற்றியிருக்கின்றனர்.

சித்தர் ஞானக் கோவையில் பீர்முகம்மது அப்பா அவர் களுடைய ஞானரத்தினக் குறவஞ்சி இடம் பெற்றிருக்கிறது. இதிலிருந்தே தமிழ் மக்களாகிய நாம் சித்தர்களையும் சூஃபிகளையும் ஒன்றுகவே பார்த்து வருகிறேம் என்பதைப் புரிந்துகொளளலாம்.

*தமிழ் நாட்டுச் சித்தர் பாடல்களும், சூஃபிகளின் பாடல்களும் பேதமில்லாமல் முழங்கி வந்திருக்கின்றன.*

"நட்டகல்லைத் தெய்வம் என்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணமுண என்று சொல்லு மந்திரம ஏதடா,
நட்டகல்லும் பேசுமோ நாதன உள் இருக்கையில்
சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ!"

*இப்படி சிவவாக்கியர் பாடியுள்ளார்.*

"ஓசை உள்ளகல்லை நீர் உடைத்து இரண்டாய்ச் செய்துமே
வாசலில் பதித்த கல்லை மழுங்கவே மிதிக்கிறீர்!
பூசனைக்கு வைத்த கல்லில் பூவும் நீரும் சாத்துறீர்!
ஈசனுக்கு உகந்தகல் எந்தக் கல்லு சொல்லுமே!"

*இது பட்டினத்தார் பாட்டு.*

"உள்ளம் பெரும் பெரும்கோயில் ஊன் உடம்பு ஆலயம்
வள்ளல பிரானுக்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெரிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலவன் ஐந்தும் காளா மணிவிளக்கே".

*இது திருமூலர் அருளிய திருமந்திரப் பாடல்.*

*இந்தப் பாடல்களில் ஒரு மத்தியக் கருத்துத் தெளிவாக உள்ளதைக் காணலாம். இறைவன், ஒருவன். அவன் உருவம் அற்றவன். அவன் எங்கும் நிறைந்தவன. அவனை உள்ளத்தில் இருத்தி உணர்வு பூர்வமாக வழிபட முடியுமே தவிர, வெறும் வெளிச்சடங்குகளால் முடியாது என்பதாகும்.*

"முத்தொடு பவளம் பச்சை முதலொளி புரிவனும் கூட்டிச்
சத்தியாய் சிவனுய இந்தத் தாரணி தன்னில் ஆக்கிப்
பத்தியாய் எனைவளர்த்த பரமனே உனையான் பாட
இத்திசை அனைத்தும் போற்றும் இறைவனே துணை
செய்வாயே

*இது பீர்முகம்மது அப்பா பாடல்.*

*அவர் சிவன் என்றும் சக்தி என்றும் பாடி இருக்கிறார். இதற்குப் பரமசிவன் என்றோ பார்வதி என்றோ பொருள கூற*

முடியாது. இந்தப் பொருளிலும் அவர் பாடி இருக்க முடியாது. சிவம் என்பது பொதுவாக ஒரே தெயவததைக் குறிககும் சொல் சக்தி என்ருல் அநதத் தெய்வ அருளேக் குறிககும சொல என் பதை விளக்கிக் கொள்ளவேணடும்

வள்ளல் பெருமான திரு அருட்பாவில் 'சுத்த சிவம்' என்ற சொலலேக் கையாளுகிருர். அது ஒரே தெய்வமான அருட்பெருஞ் ஜோதியைக் குறிக்கும் சொல்லாகும்.

குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல் ஒன்றைப் பாருங்கள.

''ஊளுகி, ஊனில உயிராகி, எவ்வுலகும் ஆய்
ஒனருய இரணடும்ஆகி
உளளாகி, வெளியாகி, ஒளியாகி, இருளாகி
ஊருடன் பேருகிஆகிக்
காளுகி, மலேயாகி, வளே கடலும்ஆகி வெளி
கணடபொருள எவையும ஆகி
கங்குல பகல ஆகி மதி ஆகி ரவி ஆகி வெளி
கண்டபொருள் எவையும் ஆகி

நாளுகி, நீயாகி, அவளுகி, அவளாகி,
நாதமொடு பூதம அகி
நாடும் ஒளிபுரிய, அடியெனும் உமை நமபினேன்
நனமை செயது ஆளுதற்கே!
வானேரும் அடிபணிதல உள்ளநீ பின்தொடர
வள்ளல் இறசூல வருகவே!
வளரும அருள்நிறை குணஙகுடி வாழும் எனனிருகண்
மணியே முகியிததீனே!''

எனறு பாடுகிருர்,

தாயுமானவர் பாடலுக்கும் குணங்குடியார் பாடலுக்கும் பல இடங்களில் வித்தியாசமே தெரியவில்லே. அவ்வளவு பொருத்தமாக சொல் ஆட்சியும், கருத்து ஒற்றுமையும் இருக்கின்றன.

''அஙகு இங்கு எளுதபடி எஙகும பிரகாசமாய
ஆனநத பூர்ததியாகி''

என்கிருர் தாயுமானவர்.

''அங்கு இங்கு என ஒண்ணு அகண்ட பரிபூரணமாய்
எங்கு நிறைந்த இறையே நிராமயமே!''

என்கிறார் குணங்குடியார்.

''பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கம் அற நிறைகின்ற
பரிபூரண ஆனந்தமே!''

என்று பாடுகிறார் தாயுமானவர்.

பார்க்கும் இடம் எல்லாம் பரிபூரணமாக
ஏற்கையுடன் நின்ற இயல்பே நிராமயமே''

என்று பாடுகிறார் குணங்குடி மஸ்தான் சாகிபு!

''எட்டுத் திசையும் பதினாறு கோணமும் எங்கும் ஒன்றாய்
முட்டித் ததும்பி மூளைத்தோங்கு ஜோதியை மூடர் எலாம்
கட்டிச் சுருட்டி கக்கத்தில் வைப்பார் வருத்தில் வையார்
பட்டப் பகலை இரவு எனறு கூறிடும் பாதகரே!''

என்று பட்டினத்தார் பாடுகிறார்.

''கல்லிலோ, மண்ணிலோ, விண்ணிலோ, அடிமைஇரு
கண்ணிலோ, கண்ணீரிலோ.
கரையிலோ, கடலிலோ, உடலிலோ, உயிரிலோ,
கதியான பூமிதனிலோ
அல்லிலோ, பகலிலோ, நல்ல பத இல்லிலோ
அருவிலோ, உரு மீதிலோ
அறிவிலோ, அறியொணா மறையிலோ மறைகண்முதல்
ஆகம பூராணத்திலோ,
செலவமிகு துரை ராஜரே தேவரீக்குநிலை
திவ்விய குணங்குடியிலோ
தெரியாமல இடையும் அடியேனும் உமை நம்பினேன்
சேர்ந்து அணைந்து ஆளுதறகே!
மல்லிகை மலர்ககந்தமுளனே நீர் பினதொடர
வளளல் இறகுல வருகவே!
வளரும அருள்நின்ற குணங்குடி வாழும் என்னிருகண்
மணியே முகியித்தீனே!''

என்று பாடுகிறார் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள்.

இப்படியாகத் தமிழ் நாட்டுச் சித்தர்களும், சூஃபிகளும் ஏக தெய்வக் கொள்கையையும் சாதிமதம் கடந்த சகோதரத்துவத்தையும் வற்புறுத்தியிருக்கிறார்கள்.

இவ்வாறாக ஞானத் தமிழ் இலக்கியம் சித்தர்களாலும் சூஃபிகளாலும் போற்றி வளர்க்கப்பட்டு வந்துள்ளது. இந்த ஒருமைப் பாட்டுக்குத் திருவருட்பிரகாச வள்ளலார் என்ற புகழ்பெற்ற ஞான சித்தர் ஒரு அருமையான மார்க்கத்தை அருளியிருக்கிறார். துண்டுபட்டுக் கிடக்கும் உலக மக்கள் எல்லாரும் ஒன்றுபட்டு வாழ்வதற்காக ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை உருவாக்கி வழங்கியிருக்கிறார்.

வள்ளலாரின் ஏக தெய்வ வழிபாட்டையே பழைய சித்தர்களும் சூஃபிகளும் தொடர்ந்து வலியுறுத்தி வந்திருக்கிறார்கள் இந்த அருளாளர்களுடைய நெறியை ஆராய்ந்து, உணர்ந்து அன்றாட வாழ்வில் அனைவரும் மேற்கொண்டு இன்பத்துடன் இணைந்து வாழ்வதற்கு இந்த சூஃபிகளின் மெய்ஞ்ஞானத் தமிழ் இலக்கியங்கள் வழி காட்டுமாக!

அருள்நெறிக் காவலர் நா. மகாலிங்கம்

# அணிந்துரை

தமிழகத்தின் தலைநகரில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தை யும் தமிழ்ப் புலவர்களையும் அனைத்துலக மக்களுக்கும் அறிமுகம் செய்துவைத்து, தமிழ் வளர்ச்சிக்காக முஸ்லீம்கள் செய்த சேவை எத்தகைய பாராட்டுதலுக்குரியவை என்பதை சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், ஆய்வுத் தொகுப்புகள் ஆகியவைகள் மூலம்அருந் தொண்டாற்றி வரும் அன்பும் பண்பும் கொண்ட அருமைச் சகோதரர் மணவை மூஸ்தபாM.Aஅவர்களை தமிழ் வளர்ச்சியில் ஆர்வங் கொண்ட அனைவருமே நன்கு அறிவர். 'சிந்தைக்கினிய சீறு' போன்ற அரிய நூல்களே அதற்குச் சான்று.

இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகளை சூஃபிகள்,ஞானவான்கள், ஞான மேதைகள் என்ற பெயரால் முஸ்லீம்கள் அழைப்பர். இத்தகைய மேதைகள் வாழ்ந்த காலத்து நிகழ்நத ஆச்சரிய நிகழ்ச்சிகளுடன் அவர்கள் தனி நிலையிலும் பரவச நிலையிலும் வசனமாகவும் கவி களாகவும் அருள் புரிந்த தத்துவங்கள் நிறைந்த கருத்துக்களையும் அனைவரும் மதித்துப் போற்றுவது மனிதனின் மேன்மைக்கு—நல் வாழ்வுக்கு வழிகளாக அமைந்திருக்கின்றன. அப்பெரியார்கள், புனித குர்ஆனையும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அறிவுரை களையும் நாயகத் தோழர்களான ஸஹாபாப் பெருமக்களின் கருத் தோவியங்களையும் அடிப்படையாகக்கொண்டே தங்கள் தத்துவங் களை—உள்ளத்தின் உணர்வுகளை எழுத்தில் உருவாக்கி வழங்கி யுள்ளனர். இப்பெரியார்களின் சில கருத்துக்கள், சில பதங்கள், நமது பார்வைக்குப் புரியாத புதிர்களாகவும் மாற்றமானதாகவும் தோன்றினால், அகமியங்களை அறியும் ஆற்றல் படைத்தவர்களை அணுகி அறிந்து கொள்ளவேண்டுமே தவிர நமது அறிவைமட்டும் வைத்துக்கொண்டு முடிவு கட்டிவிட முடியாது. அவ்வுத்தமர் களின் பதங்களுக்கு நம் விருப்பம்போல் பொருளை வலிந்துரை செய்து, உயர் தத்துவங்களை கண்டனங்களுக்கும் குழப்பங் களுக்கும் இலக்காக்கிவிடக் கூடாது.

சூஃபியாக்கள் என்ற ஞானவான்கள், இருதயசுத்தி அடைந் தவர்கள்; இறைஞானம் மிக்கவர்கள்; அல்லாஹ்வின் பிரகா சத்தில் வாழ்பவர்கள். அவர்களை நமது ஊனக்கண் கொண்டு குறைத்து மதிப்பிடக் கூடாது. 'புரியாத பதங்களை, புரியவில்லை:

அவர்கள் கருத்து யாதோ என்று நினைக்கவேண்டுமே தவிர குயுகதி கொண்டு குறைத்து மதிபபிடக் கூடாது. இவை அனைத்தும் இறை நம்பிககை உளளவர்கள் உணர்தல் வேண்டும்.

மணங்கமழும் இஸ்லாமிய இலக்கியத்தை—மெய்ஞ்ஞானப் பேரமுதை அனைவரும் அள்ளிப் பருக வழிகாட்டி நிற்கும் அன்பு மணவை முஸ்தபா அவர்களுக்கு என் வாழ்த்தையும், அவர்களின் மகத்தான உழைப்புக்கும உணர்வுக்கும் என் நன்றியையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் இலக்கியச் செலவர்களும் இஸ்லாமிய கவிவாணர் களும் பேரறிஞர்களும் இப்படிப்பட்ட இஸ்லாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்களை ஆழமான கருத்துரைகளை—தங்கள் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சிப்பெருககுகளை கட்டுரைகள் வடிவாக வடித்து, மெய்ஞ்ஞானிகள் அருளிய தேனினுமினிய பாக்களைப் பொறுக்கி அதை அழகுபடுத்தி இத்தொகுப்பை மணக்கச் செய்துளளதைக் பார்த்து உள்ளம் பூரித்தவனாக அவர்களுக்காக துஆ செயகிறேன். மணவை முஸ்தபா அவர்களின் இம்மகத்தான பணி, முஸ்லீம்கள் முஸ்லீம் அல்லாதவர்கள் ஆகிய அனைவருக்கும் பேரருளாளனாகிய, பேரன்புடையோனாகிய அலலாஹ்வின் அன்பைப் பெறவும் அருளை அடையவும் அவனின அளப்பரிய ஆறறலை அறிநது கொள்ளவும் உதவுவதற்கு உறுதுணையாக அமையவேணடும் என்று ஆவல்படுகிறேன், அல்லாஹு—த் தஅலா அன்பு மணவை முஸ்தபா அவர்களின் உள்ளத்தில் எழுசசியை செயலுருவாக்கி மக்கள் யாவரும் பலன பெற அருள் புரிவானாக. ஆமீன் வஸ்ஸலாம்.

மௌலவி மீ. இ. மு. அபுல்ஹஸன ஷாதலி ஸாஹிப்
(நூரிய்யி, பாஜில் பாகவி)
ஆசிரியர்; 'மஜாஅத்துல உலமா'
—தமிழ மாத இதழ்

திருநெல்வேலி ஜங்ஷன்
627001

நஹ்மதுஹு வநுஸல்லீ அலா ரஸூலிஹில்கரீம்

# மதிப்புரை

மனத்துக்கும் ஆன்மாவுக்கும் நிம்மதியும் பேரின்பமும் அளிப்பது மெய்ஞ்ஞானம் யந்திரகதியில் இயங்கும் இன்றைய உலகில் மனிதன் மெய்ஞ்ஞானத் துறையிலும் சற்று கவனம் செலுத்தினுல பேரிரைசசலகளுககிடையே அவன் பேரின்பத்தை அடைய இயலும். ஆனுல முற்றிலும் இத்துறையைப் புறக் கணித்தவனுக அவன் வாழ்வது(?) வருந்தத் தக்கது.

இந்நிலையில், எங்கோ ஓர் ஒதுக்குப்புறததில சூருவளிக் கிடையே சுடர்விட்டுப் பிரகாசிக்கத் துடிக்கும் மெய்ஞ்ஞான விளக்கைத் தூண்டிவிட்டுப் புத்தொளி பரப்ப மெய்ஞ்ஞானக் காவலர்கள் முயன்று கொண்டிருக்கும் உயர் பணியில இக் கட்டுரைக் கோவையும் ஒரு சிறு பங்கை எடுத்துக கொணடிருக் கிறது எனருல் அது பாராட்டுக்குரியதாகும்.

கருத்தரங்குகளின உணமையான தகுதி எத்தகையது என் பதை துடிபபுமிகக சகோதரர் மணவை முஸ்தபா அவர்கள் கூட்டிய 'சூஃபி' இலக்கியக் கருத்தரங்கு' நிலை நாட்டியுள்ளது

முதலில் மனிதனைப் பற்றியும் அதைத் தொடர்ந்து இறை வனைப் பற்றியும் ஆராயும் அறிவே மெய்யறிவு. இந்த அடிப் படையை முழுமையாககொணடதே சூஃபிகளின் இலக்கியங்கள். இநத இலக்கியங்களை ஆய்வுக்கு எடுத்துக கொளளும் கருததரங்கு உயர் தகுதிக்கு உரியதே.

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பொருளைப் பற்றிய பல் வேறு கருத்துகள் வெளியிடப்பட்டுள்ளன அவை நூலவடிவிலும் இப்போது உங்கள் கையில் உள்ளது. இதில் கூறப்பட்டுள்ள கருத்துக்கள் அனைத்தையும் ஏறறுக் கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் உங்களுக்கில்லை. ஏற்பதறகும் ஒதுக்குவதற்கும் உஙகளுக்கு உரிமை இருக்கிறது

இக்கட்டுரைக் கோவை நூல் வடிவில் வரும் முன்னர் இதன் சிறப்பைச் சிலாகித்தும் கருத்துச் சிதைவு ஏதேனுமிருந்தால் அதைச் சுட்டிக்காட்டியும் தெளிவுபடுத்த வேண்டும். என்ற எண்ணம் எழுந்ததை வரவேற்க வேண்டும்.

இக்கட்டுரைக் கோவையில் பல்வேறு அம்சங்கள் ஆராயப் பட்டுள்ளன. அவற்றில், தமிழகத்து இஸ்லாமிய மெய்ஞ்ஞானி களையும் சித்தர்களையும் ஒப்புநோக்கி ஆராய்ந்துள்ளது அரிய ஆராய்ச்சியாகும். 'சூஃபி'யாக்களான முஸ்லிம் ஞானியார் தமிழ் மரபையொட்டிப் பயன்படுத்தியுள்ள சில செய்திகள் இஸ்லாத் திற்கு அப்பாற்பட்டதோ என்ற மயக்கத்தைச் சிலருக்கு ஊட்டினாலும், அவர்கள் எடுத்துக் கொண்ட கருத்து முற்ற முற்ற தனித்த இஸ்லாமியக் கொள்கைக் கோட்பாடுகளுக்குட்பட்டதே. இஸ்லாமிய மெய்ஞ்ஞானம் இறைமறையாம் திருக்குர்ஆனையும் நபியுரையான ஹதீஸ்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும் இவ்விரண்டையும் மீறிச் செல்லும் ஞானம் இஸ்லாமிய ஞான மன்று. திருகுர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் ஒத்த கருத்துக்களைச் சித்தர்கள் வெளிப்படுத்தும்போது அவர்கள் சூஃபிகளுடன் வைத்துப் போற்றத் தக்கோராகிறார்கள்.

அதேபோல, ஞானிகளின் பரிபாஷை பற்றிய ஆய்வும் போற்றுதற்குரியதாகும். இதனை, டாக்டர் இரா. மாணிக்க வாசகம் அவர்களும் கவிக்கோ எஸ். அப்துல் ரகுமான் அவர்களும் சிறப்பாகச் செய்துள்ளார்கள். அவர்களிருவரும் எடுத்தாண் டுள்ள அகஸ்தியரின் பாடல் கூறுவதே போன்று,

> 'பாடுகின்ற சித்தருடைய நூல்களெல்லாம்
> பரிபாஷைத் தெரியாது பாவியோர்க்கு...'

பரிபாஷையின் முக்கியத்துவம் மெய்ஞ்ஞானப் பாடல்களை ஆய்வோருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

சூஃபித்துவத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி அல்ஹாஜ் எஸ். எம். சுலைமான், ஐ. ஏ. எஸ். அவர்கள் செய்துள்ள ஆய்வு கருத்துக்கு விருந்தாகும். சிருஷ்டியின் தோற்றமே மெய்ஞ் ஞானத்தின் தோற்றமாகும். "நான் மறைந்த பொக்கிஷமாக இருந்தேன்; நான் அறியப்பட விரும்பினேன்; ஆகவே, படைப் பினைப் படைத்தேன்" எனும் (ஹதீஸே குத்ஸீ) வாக்கு இதை எண்பிக்கிறது. தன்னை அறிவதன் மூலம் இறைவனை அறிவது தான் சூஃபித்துவம். இறைவனின் வேதங்களும் அவனுடைய தூதர்களும் இதனையே அடிப்படையாகக் கொண்டு இறைவனுல்

அனுப்பப்பட்டார்கள. நபிமார்களின் காலத்தில் இது வளர்ச்சி யடைந்து, இறுதித தூதர் எமபெருமானார் (ஸல) அவர்களால் நிறைவுபடுத்தப்பட்டது. சூஃபித்துவ தநிறகும கலைச சொற்கள் தோனறவாரய பித்தது ஹலரத ஹஸன பஸரீ (ரலி) அவர்களின் காலத்திலிருநதுதான. அதுவும் நிறைவடைநதது கௌதுல் அஃலம் முஹயுதநின அப்துல் காதிர் ஜீலானி (ரலி) அவர்களால தாம்.

தமிழக மெய்ஞ்ஞானப பெரியார்களின் இலக்கியப் படையல் களும் அவாகளின இலக்கியப் பணிகளும் பட்டியல உருவில் அளிக்சப்பட்டுள்ளது. பட்டியல படிக்கச் சிறியதாகவும் எளிதாகவு மிருப்பினும் அதை உருவாக்கும் பணி கடினமானதாகும. இதனை தக்கலையின இலக்கிய இளவல் எம். எஸ். பஷீர் அவர்கள் சிறப் பாகச செய்துள்ளார்கள்.

டாக்டா இரா. மாணிக்கவாசகம் அவர்கள 'சூஃபி—தத்துவம்' எனும் துணைத் தலைப்பில் 'இனஸானுல' காமில் நூலின கருத்தொன்றை எடுத்தெழுதியுள்ளார்கள் அககருத்தே தவறுகளுககு அபபாறபட்ட மெய்ஞ்ஞானக் கருததாகும். (பககம் 2 ) பனிககட்டி, தனனைப் பனிக்கட்டியாகவே கருதி கொண்டிருககும வரை அறியாமையிலேயே வாழ்கிறது அந்த அறியாமையை அகற்றுமல வாழும் காலததில யதார்த்த நிலை எனும் காற்றுப் பட்டு மெய்நிலை அடைநதாலும 'தனனிலை' அழிந்து விட்டதே எனக் கரைகிறது. பனிக்கட்டிக்கென்று ஒரு தனி உள்ளமை இல்லை அது வெறும் மாயையாகும், இதுவே சிருஷ்டியின் மெயநிலை. இருககும் உளளமை ஒனறே அதுவே இறைவன் அனன மாயை அல்ல. 'வஹததுல வுஜூது' எனும (ஏக உள்ளமை) தததுவம கூறுவதும இதையே. கருப் பொருள் (Material) ஒன்றுதான காணும தோற்றமே வெவ வேறு. மண்! கருப்பொருள். பானை, சட்டி, குதிர், அடுப்பு, கூஜா என்பன தோற்றங்களின வெவவேறு பெயர்களாகும். தோற்றங்கள் 'மவ்ஜூது'களாகும், வஹதத்துல வுஜூதை 'வஹதத்துல மவஜூது, எனறு தவறுக எண்ணியோர் 'வஹ ததுல வுஜூது' எனும் கருத்தை வன்மையாகக் கண்டித்தனர். 'கஃதரத்துல மவஜூது'—பல தோற்றங்கள் உள்ளன என்பதும் சூஃபி தததுவத்தின சரியான கொளகை அமைப்பாகும. இவை ஒனறுககொனறு முரணபட்டவையலல

டாக்டர் அவர்கள் நான்கு, படித்தரங்களை வரிசைப்படுத்தும் போது, மூனறுவதாக மஃரிபத, நானகாவதாக ஹகீகத் என் றுரைககிறார். 1. ஷரீஅத, 2. தரீகத, 3. ஹகீகத் 4. மஃரிபத்

என்ற வரிசைக் கிரமமே சரியானது. தரீகத் பற்றி விளக்க வுரையில், 'புறச்சடங்குகள் அகன்றுவிடும்' என்ற கருத்து இஸ்லாமிய மெய்ஞ்ஞானத்தைச் சேர்ந்ததல்ல. இறுதிப் படித்தர மான மஃரிபாவை ஞானி ஒருவர் அடைந்தாலும் புறச் சடங்கு களுக்கான கடமை அவரை விட்டும் அகன்று விடாது.

ஸூஃபி மார்க்கத்தாரில் இரு வகுப்பினர் குறிப்பிடத் தகுந்தோ ராக அதே கட்டுரையில் சுட்டப்பட்டுள்ளனர் இவ்விரு வகுப் பாரும் சுத்த சத்திய இஸ்லாத்தின் இறைமைக் கொள்கையைத் தகர்ப்போராவார்.

ஹுலூலியயா · 'இறைவன் ஓரிடத்தில் இறங்கித் தங்கி யுள்ளான்' என்பதே இவர்களின் கருத்து இது தவறான கொள்கை இறைவன் குறிப்பிட்ட ஓரிடத்தில் இறங்கினாலும் தங்கினாலும் எல்லைக்கு உட்பட்டவனாகிவிடுகிறான். ஓர் எல்லைக்கு உட்பட்டவன் மற்றோரிடத்தில் இல்லை என்று ஆகிறான். ஓரிடத்தில் இருந்து, இன்னோரிடத்தில் இல்லாதவன் இறைவ னல்லன. இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவன்.

இத்திஹாதிய்யா 'இறைவன் சிருஷ்டியுடன் இணைந் துள்ளான்' என்ற கருத்துடையோராவர். இவர்கள் சிருஷ்டி களுக்குத் தனி உள்ளமை இருப்பதாகக் கருதுகிறார்கள் இவர் களின் கூற்றும் தவறானதாகும். இரு தனித்தனி உள்ளமைகள் இணைய முடியும். இறைவனைத் தவிர்த்து வேறெதற்கும் தனி உள்ளமை கிடையாது என்பதே இஸ்லாமிய தத்துவம். இவ் விடத்தில் ஸூஃபிகளில் இவ்விரு வகுப்பார் பற்றிய கருத்துடாக்டர் அவர்கள் மேற்கோளுக்காகப் பயன்படுத்திய மூல நூலிலுள்ள கருத்துப் பிழையென நான் கருதுகிறேன்.

'தாத்' என்பதற்கும் 'ஹஜூது' என்பதற்கும், 'உள்ளமை' என்ற பொருளை மிகப் பலரும் தமிழில் பயன் படுத்துகிறார்கள், இறைவனுடைய 'தாத்',' வுஜூது'டன் சேர்ந்தே உள்ளது இறை வனைக் குறிக்கும்போது இரண்டிற்கும் 'உள்ளமை' என்ப பொருள் காணலாம். ஆனால், பொதுவாக 'தாத்' என்று சொல்லும்போது' இறைவனுடைய தாத், சிருஷ்டிகளுடைய தாத் என இரு 'தாத்' களையும் எடுத்துக் கொள்வதால் அந்நிலையில் 'அதற்கு உள்ளமை. எனப் பொருள் கூறக்கூடாது. 'தாத்' என்பது, பெயர்களும் (அஸ்மா) இடுகுறிப் பெயர்களும் (ஸிஃபாத்) எதனைப் போய் அடைந்து குறிக்குமோ அதுவேயாகும். இஸ்மும், ஸிஃபத்தும் இறைவனுக்கும், சிருஷ்டிகளுக்கும் உள்ளன. எனவே, இறைவ

என்பது தாதுப் பொருள், கருப் பொருள் (Material) ஆன உள்ளமையைக் குறிப்பதாகும், இது இறைவனுக்கு மட்டுமே உள்ளது. சிருஷ்டிகளுக்குக் கிடையாது. சிருஷ்டிகளில் வெளியாகி உள்ளது. எனவேதான், இறைவன் திருமறையில் (அத்தியாயம் 57; வசனம் 3) தன்னைப் பற்றி இவ்வாறு அறிமுகப் படுத்துகின்றான்.

> ''ஆதியும் அவனே: அந்தமும் அவனே,
> தோற்றுவதும் அவனே; மறைந்திருப்பவனும்
> அவனே, அவன் சகலவற்றையும் நன்கு
> அறிந்தவன்''

மறைந்து கிடக்கும் கருவூலத்தை வெளியில் கொண்டு வருவதும் மாபெரும் பணியாகும். இப்பணியினை முனைப்போடும் துணிவோடும் சகோதரர் மணவை முஸ்தபா அவர்கள் செய்துள்ளார்கள். பாராட்டுக்குரிய இப்பணியினை இனி மெருகூட்டிப் பொலிவூட்டித் தொடர்ந்திட இறைவன் நல்லருள் நல்குவானாக!

மௌலவி எம். அப்துல பத்தாஹ் பாகவீ
ஜுஹூரி—சிஷ்தியுல் காதிரீ

# ஸூ:.பித்துவம்
# தோற்றமும் வளர்ச்சியும்

அல்ஹாஜ் எஸ். எம். சுலைமான், ஐ.ஏ.எஸ்.

ஆங்கில மொழியில் 'Gnosticism, Mysticism, Theosophy, என்ற சொற்கள் வழங்கி வருவதை நம்மில் பலர் அறிவோம். மேலோட்டமாகப் பார்க்கும் சாமானிய மக்கள் இச்சொற்கள் இறைவனை அடைவதற்கு வழிவகை செய்யும் இறை ஞானத்தைக் குறிப்பதாக எண்ணுகின்றனர். எனினும் அவற்றிற்கிடையே நுண்ணிய வேறுபாடுகள் உணடு என்பதைத் தத்துவவாதிகள் அறிவர். சற்று ஊன்றி கவனிப்போமாயின், 'Monism, Dualism, போன்ற சொற்கள் தத்துவயியலில் பயன்படுத்தப்படுவதை நாம் காண்கிறோம். இவற்றினின்று உருவாகும் உட்பிரிவுகளும் உண்டு. இவற்றையெல்லாம் ஆராயப் புகுவோமாயின் கட்டுரை விரிந்து விடும்.

'தஸவ்வுஃப்' (Tasawwuf) அல்லது 'ஸூஃபித்துவம்' (Sufism) என்பதை இஸ்லாமிய ஆத்மஞானம் (Islamic Mysticism) என்று பொதுவாகக் கூறலாம். அதேபோன்று 'ஸூஃபி' என்பாரை ஆங்கிலததில் 'Muslim Mystic' என்றும் தமிழில் 'முஸ்லிம் சித்தர்,' 'ஆத்ம ஞானி', 'மெய்ஞ்ஞானி' என்றும் கூறலாம்.

'ஸூஃபி' என்ற அரபுச் சொல்லின் மூலம் குறித்து வேறுபட்டக் கருத்துக்கள் உள்ளன. 'தூயமை' என்ற பொருள் கொணட 'ஸஃபா' (Safa) என்ற மூலச்சொல்லிருந்து பிறந்ததுதான 'ஸூஃபி' என்பர். ஸூஃபிகளின சிந்தனை, சொல், செயல் மிகத் தூய்மை வாய்ந்தவை.

வேறு சிலர் 'ஸூஃபி' என்பது அணி (வரிசை) எனும் பொருள் கொணட 'ஸஃப்' (Sauf) எனற மூலததிலிருந்து பிறந்தது எனபர். ஸூஃபிகள் இறைவன்பால் நாட்டமும் தேட்டமும் உடையவர்கள்; தங்கள் உள்ளததை அவனுளவிலேயே நிலை நாட்டுவதற்காக இறைச் சந்நிதானத்தில முதல் வரிசை (அணி—ஸஃப்) யில இடம் தேடிக் கொள்பவர்கள்.

நபிகள் பெருமான் (ஸல்) அவர்களோடு நெருங்கிய தொடர்பு கொணடு மதீனாவிலுள்ள 'மஸ்ஜிதுந் நபவி' என்ற பள்ளிவாயிலின் பக்கம அமைந்திருந்த திண்ணைத் தாழவாரத்தில் இரவும் பகலு மாக இறைத் தியானத்தில் ஈடுபட்டிருந்தவாகளாகிய 'அஸஹாபுஸ் ஸுஃபா'' எனும் திண்ணைத் தோழர்களைக் குறிக்கும் தொடரி லிருந்து சூஃபி எனும் சொல் தோன்றிற்று என்று வேறு சிலர் கூறுவர்.

சில எழுத்தாளர்கள் ''சூஃப்'' என்ற சொல்லைச் ''சோபோஸ்' (Sohpos) என்ற கிரேகக அடிச் சொலலுடன் இணைத்து 'அறிஞன்' என்ற பொருளைக் கொடுக்க முயன்றுளளனா.

அரபு மொழியில் 'சூஃபி' (Soofi) என்றால் முரட்டுக் கம்பளி என்று பொருள்படும். ஆடம்பர வாழவைத் துறந்து, மனோ விச்சைகளை அடக்கி, எளிய வாழ்வின சின்னமாய்க் கம்பளியை விரும்பி அணிந்து கொண்டதின காரணமாக 'சூஃபிகள்' எனப் பெயர் பெற்றனா் எனறு இன்னும் சிலர் கருததுத் தெரிவித் துள்ளனர்.

'தஸவவுஃப்' என்பதற்கு சூஃபிகளே விளக்கங்கள் தந்துள்ள னர். அவையனைத்தின சாரத்தையும் கொணடதாக அமைந் துள்ளது, ஷைகுல் இஸ்லாம் ஜகரிய்யல் அன்ஸாரி (ரஹ) அவர் களின் விளககம்·

''உள்ளத்தைப் புடமிட்டுத் தூய்மைப்படுத்தி, மாசற்ற உயர்ப் பண்புகளை வளர்த்து, அகத்தையும் புறத்தையும் ஒரு சேரப் பரிபக்குவப் படுத்துவதற்கான வழி வகைகளை அறிநது கொள்ள உதவும் ஞானமே 'தஸவவுஃப் ஆகும நிலையான பேரின்பப் பேற்றைப் பெறுவது தான் அதன் நோக்கம்'' ஒரே சொற் றொடா கொண்டு விளக்குவதாயின் சுயக் கட்டுப்பாடு—தன்னைத் தானேக் கட்டுப்படுத்திக் கொள்ளுதல்—எனறு சொல்லிவிடலாம். தன்னைக் கட்டுப்படுத்திக கொணடு இறைவனது பாதையில் முடுகி அவனில கலப்பதே சூஃபிகளின் வேணவா. ஞானிகள் மூனறு அடையாளஙகளால் அறியப்படுகிறார்கள். அவர்கள் சிந்தனை இறைவனைப் பற்றியது; அவர்கள் இறைவன்மாட்டு வாழ் கிறாகள்; அவர்கள் தொழில் இறைவன் மாட்டு அமைந்து கிடக் கிறது''. (The saints of God are known by three signs—their thought is of God, their dewelling is with God and their business is in God) இரததினச் சுருககமாக, 'தஸவவுஃப்' என்பது ''இறைவன உனனை உன்னளவில் இறநது படுமபடி செய்து,

அவன்மாட்டு உன்னை வாழும்படி செய்தலே'' என்று கூறி விடலாம்.

ஆத்ம ஞானம் மனிதனைப் போன்று அவ்வளவு பழமையானது. உலகத்தில தோன்றிய ஒவ்வொரு பெருஞ்சமயமும் அகம்—புறம் ஆன்மம்—சரீரம், இறைஞானம்—அதன் அனுஷ்டானங்கள், சடங்குகள் என இரு பகுதிகளைக் கொண்டது. அகப்பகுதி மேலைய நாடுகளில் 'இறைஞானம்' (theosophy) எனறும் கீழைய நாடுகளில் வடமொழியில் 'பிரம வித்யா' என்றும் அழைக்கப் பட்டது 'மனித ஆன்மாவை இறைவனோடுத் தானாக ஒன்ற (Personal union) வகை செய்யும். நிரந்தரமான மாறுதலடை யாதத் தனிச் சிறப்பிறகுரிய நேர்த்தி—முறைமை (Phenomenon) (Mysticism) ஆத்ம ஞானம் என்று ஏ. ஜே ஆர்பெர்ரி கூறுகிறார். எசசமயத்தவரது அல்லது நாடடவரது ஏகபோக உரிமையன்று அது வேறுபட்டச் சமுதாய நெறிமுறைகளைப் பினபற்றி வாழ்ந்துவந்த ஆத்ம ஞானிகள் அதை ஆர்வத்தோடு வளர்த்து வந்தனர். பிற சமயங்களைப் போன்று இஸ்லாத்திலும் ஆத்ம ஞானத்தை வளர்த்து இறைவனை அடைவதற்கு ஒரு அமைப்பு உருவாயிற்று. அது 'தஸவ்வுஃப்' என்று வழங்கலாயிற்று.

உண்மை இவ்வாறிருக்க, அறிஞர்களிடையே 'தஸவ்வுஃப்' நியோ பிளட்டானிஸத்திலிருந்து பிறந்ததென்றும், ஆரிய நாகரிகத் தொடர்பால் ஆரம்பமாயிற்று என்றும் கருத்துக்கள் நிலவி வருகின்றன. அவை சரியன்று. பிற மதங்கள் பிற தத்துவ யியல்கள் இவற்றின் கலப்பாலன்றி தன்னியல்பாகவே 'தஸவ் வுஃப்' தோன்றிற்று என்று கூறுவதே பொருத்தமாகும்.

திருக்குர்ஆனின் பேருரைகள் சூஃபித்துவத்திற்குரிய அடிப் படைக் கருத்துக்களைத் தன்னகததே கொண்டு மிளிர்வதைக் காணலாம். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அமுத வாக்கு களிலும், அவர்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளிலும் சூஃபித்துவத்தின் சாயலைக் காணலாம்.

''ஆதியும் அவனே; அந்தமும் அவனே,
தோற்றுவதும் அவனே; மறைந்திருப்பவனும் அவனே,
அவன் சகலத்தையும் நன்கறிந்தவன்.''

(திருக்குர்ஆன் 57 : 3)

''அல்லாஹ் மண, விண் இவ்விரண்டில்
ஒளியாய் இருக்கிறான்.''

(திருக்குர்ஆன் 24 : 35)

''நான் (மனிதனை) பூமியில் (எனது)
பிரதிநிதியாகப் படைத்திருக்கிறேன்.''
(திருக்குர்ஆன் 2 : 30)

''நான் அவனை (மனிதனை) உருவாக்கி அதில்
என் உயிரைப் புகுத்தினேன்.''
(திருக்குர்ஆன 15 : 29)

''நான் உங்களின் உயிர்.(நப்ஸ்) களிலே இருக்கிறேன்
என்னை, நீங்கள, பார்க்க வேண்டாமா?''
(திருக்குர்ஆன் 51 : 21)

''அல்லாஹ எவனுக்கு ஒளி ஊட்டவில்லையோ அவனுக்கு
(எஙகிருநதும) எவ்வித ஒளியும் கிட்டாது''
(திருககுர்ஆன் 24 : 40)

''இறைவண்ணத்தில தோய்வீராக இறைவனைப் போல்
அதிகமாக வண்ணத்தைக் கொடுப்போர் யார்?''
(திருககுர்ஆன் 2 : 138

''யார் நம் வழியிலசிரமமெடுத்து முயல்கிறார்களோ அவர்
களுக்கு நாம் நேர்வழியைக் காண்பிபபோம். நிச்சயமாக
அல்லாஹ் நற்செயல புரிவோருடன் இருக்கிறான்.''
(திருக்குர்ஆன 29 : 69)

''விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து அவன
ளவில் செலவதற்கான வழியைத் தேடிக் கொளளுங்கள.
இன்னும் அவனுடைய பாதையில் தியாகம் புரியுங்கள.
நீங்கள வெற்றி பெறலாம்.''
(திருக்குர்ஆன் 5 : 35)

''சன்மார்க்க நெறியின் தலையாய பொருள் இறைவனை
அறியும் மெய்ஞ்ஞானமாகும.'' (அவ்வலுத்தீனி மஃரிப
துல்லாஹி)
(ஹதீஸ்—நபிமொழி)

''உன்னில் இறைப்பணபுகளை உண்டாக்கிக் கொள்.''
(ஹதீஸ)

' நீ இறப்பதற்கு முன் இறந்துவிடு.'' (ஹதீஸ்)

''தன்னை அறிந்தவன் தலைவனை அறிவான்.'' *(ஹதீஸ)*

''அர்ஷ் (அல்லாஹ் தான் நாடியபடி தரிபட்டிருக்கும் தானம்), 'குர்ஷி' (ஆசனம்), ஏழு வானங்கள முதலிய வற்றையும் உன் அகத்தின் உள்ளேயே நீ கண்டு கொள் வாயாக.''

*(ஹதீதே குத்ஸி)*

''எந்த மனிதனை நான் நேசிக்கிறேனே அவன் கேட்கிற கேள்வியாக நான் ஆகிவிடுகிறேன்; மேலும், அவன் பார்க்கிற பார்வையாக நான் ஆகிவிடுகிறேன். மேலும், அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுகிறேன்''—என்று இறைவன கூறுகிருன்.

*(ஹதீதே குத்ஸி)*

''(நபியே) நீர் *(மண்ணை)* எறிந்தபோது அதை நீர் எறிய வில்லை; அல்லாஹ்தான் (அதனை) எறிந்தான.''

*(திருக்குர்ஆன் 8 :17)*

''நிச்சயமாக அல்லாஹ் உயர் (ரலி) அவர்களின் வாயில் திருவுளம் பற்றுகிருன்'' (ஓ இன்னல்லாஹ லயன்திகு அலாலிஸானி உமர்)

*(ஹதீஸ்)*

''அல்லாஹ்வில் இணைந்துவிடு; இல்லாவிட்டால், அல்லாஹ்வை அடைநதவர்களோடு ஒன்ருகிவிடு; அவர் கள வன்னை அல்லாஹ்வுடன் சோதது விடுவார்கள்.'' (குன் பில்லாஹி ஒயிலலம் தகுன் பகுன் அமன்கான பில்லாஹி இன்னஹ"யூஸிலுக இலல்லாஹி இன்குன்த மஅஹ")

*(ஹதீதே குத்ஸி)*

*நபி பிரானின் (ஸல்) விண்வெளிப் பயணமும் (மிஃராஜ்) ஒரு ஆத்மார்த்த அனுபவமேயாம். எனவே எல்லா ஸூஃபி அமைப்பு களின் மூலமும். ஆதாரமும், ஊற்றுக்கண்ணும் அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அவர்கள் வழி அலி (ரலி] அபூபக்கர் (ரலி) அவர்களும் ஆவார்கள்; அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'முஸ்தபா' (மிகத்தூய்மையான உள்ளம் படைத்தவர்) என்று அழைக்கப்படுவது ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கது. நபி*

தோழர்களின் வாழ்க்கையும், அந்தரங்க சுத்தியை வளர்த்து நித்தியானந்தத்தைப் பெறுவதற்கு முன மாதிரியாய் அமைந்திருந் தன இறைவன் மீது மிகுநத பயபக்தியோடும், நபி (ஸல்) அவர்கள் மீது அளபபறும் காதல கொண்டும், இஸ்லாமிய நெறி முறையை (ஷரீஅத) அடியொற்றி அவர்கள் வாழ்ந்தாாகள். எனவே, அவர்களது வாழ்கைை ஷரீஅத்திற்கும் இறைக் காதலுககுமிடையே (Love and Mystic experience)பிணக்கத்தைத் தோற்றுவிககவில்லை. அவர்களில் குறிப்பிடத்தக்கவாகள் ஹஸன் பாஸரி (ரஹ்), ராபியா பாஸரி (ரஹ), இப்ராஹீம் அத்ஹம் (ரஹ) ஆவாாசள.

'ஸூஃபி' என்னும் சொல் திருக்குர்ஆனில இடம் பெறவில்லை. 'எனினுமை குர்ஆனின் ,வாசிஆ' (56-வது) அததியாயததில் 'முகர்ரிபூன' (அலலாஹவுடன் நெருக்கமுடையோர்) என்ற சொற் றொடர் இடம் பெறுகிறது. முகாரிப் எனும் சொல்லுககுக் கொளளப்படுகின்ற பொருளே ஸூஃபி' என்பதற்கும் உரியதாகும் இவர்கள் தெளளிய மதியுடையவாகள் இறைவனுககும். மனித னுககு மிடையே உள்ள தொடர்பை—பந்ததை--துல்லியமாகத் தெரிந்தவர்கள. இறையளவில் அழிந்து (ஃபனாவாகி) விடு வார்கள. மேலுமை இவர்களுக்கு அகத்தும புறத்தும் இறைவனின் காடசியே மிளிருமை ஸூஃபி எனற சொல ஹிஜ்ரி இரணடாம் நூற் றுணடில (கி.பி. 9வது நூற்றுணடுல்) வழக்கில வந்தது எனபது ஆய்வாளர்களின் முடிவு

இஸலாம் தோன்றுவதற்கு முன உலகில பல்வேறு நாகரி கங்கள நிலவின. பாபிலோனியா, பாரசீகம், கிரேககம், எகிப்து, இநதியா—இந்நாடுகளில நிலவிய நாகரிகஙகள பெயர்பெற்றவை. இவறறைச சாரநதவாகள இஸலாததைத தழுவியபோது திருககுா ஆனைப் பயில ஆரமபித்தாாகள் தங்களுடைய பழைய வேத நூல்களில் சொல்லப்படடிருபபதைத திருக்குர்ஆன போதனைகளோடு ஒப்பிட்டுப் பார்ததபோது இவற்றிற்கு இடையே பல முனைகளில் ஒருமைப்பாடு இருப்பதாகக் கண டார்கள். எளிமையும் அமைதியுமை இழையோடி நின்ற இஸ்லாமிய முறைகளில 'பிற நாகரிகங்களின தாக்கத்தால ஒன்பதாவது நூற்றுண்டில் ஒரு விசித்திரமான மாற்றம் உருவாயிற்று

எகிப்தில 'துன்னூன்மிஸ்ரி' என்ற ஆத்ம ஞானி இருந்தார். 'இறைவனை அறிவதற்குரிய ஒரே வழி அவனோடு ஒன்றி விடுவதே' என்று அவர் போதித்தாா. அவர் ஆத்மஞானக கூட்டங்களில் ஆடலையும் பாடலையுமை நுழைத்தார். பினனா தியானத்தையுமை

யோக நிஷ்டைகளையும் நுழைத்தார். இவ்வாறு எகிப்து நாட்டிலுள்ள சூஃபித்துவத்திற்கு ஒரு தனித் தன்மை ஏற்பட்டது.

இதேபோன்று பாரசீக மக்கள் இஸலாத்தைத் தழுவிய போது தங்களின பழைய 'மாகி' முறை ஆத்மஞானத்தை (Magi system of mysticism) ஒப்புநோக்கினர். இவர்களில் 'பாயஜீது பிஸ்தாமி' என்ற ஆத்மஞானி குறிப்பிடத் தக்கவர். இறைவனை மகிழ்விப்பதற்குரிய ஒரே வழி 'ஆத்மார்ப்பணம்' என்றும் அதன் வழி இறைவனோடு ஒன்றிவிட்ட பின்னர் மனிதன் இல்லாமலாகி விடுகிறான் எனறும் கூறப்பட்டது. சூஃபிகளின் இத்தகையப் போக்கு ஷரிஅததிற்கும் சூஃபித்துவத்திற்கும் ஊடே இடைவெளியைத தோற்றுவிபபதாய் அமைந்துள்ளது எனறு வைதீக முஸ்லிம் அறிஞாகள் (உலமாக்கள்) எணணத் தொடங்கினர். உலமாக்கள சூஃபிகளை வழிதவறியவர்கள் (heretics) என்று வெறுக்கலாயினர்.

மன்ஸூர் ஹல்லாஜ (கி பி. 858-922) என்பார் ஒரு பெரிய சூஃபி. அவர் இந்தியாவுக்கு வந்தாரென்றும், இநதியத் தத்துவயியல், யோகம் இவறறைப்பற்றி அறிந்து கொணடாரென்றும் சொல்லப்படுகிறது. அவா ஒரு கல்லைப் போட்டார். "நானே உண்மை - இறைவன" (I am the Truth - God: Aham Brahma Asmi; Anal Haq) என்று அவா கூறினார். இதன் பொருள் 'அவர் இறைவனோடு ஒன்றாகி விட்டார்' என்பது. உலமாக்களின் சீற்றத்திற்கு அவர் இலக்கானார். கொல்லப்பட்டார்.

கார்முகிலுக்கிடையே மின்னொளிக் கீற்று பளிச்சிடாமல் இல்லை. ஜுனைத் பக்தாதி (ரஹ்) போன்றோர் தோனறி ஷரீஅத்தின் முதன்மையை நிறுவியும, இறைவனின் உண்மை நிலை (பகா)வை வலியுறுததியும சமூக நிலை உருவாக வழிகோலினர். ஜுனைத் பக்தாதி (ரஹ்) அவாகள சூஃபி எனபாருக்கு வகுத்த இலக்கணம:

"சூஃபி 'தான்' என்பதில் அழிந்து இறைவன் அளவில் நிலையாகி இருபபாா" அதாவது 'சூஃபி' தம உளளமையின் நிலையற்ற தன்மையை உணர்நது, அப்போலி நிலைபாட்டை ஒழித்து, இறைவனின ஸதிரமான உள்ளமையால் நிலைபடுகிறார். சூஃபியின் வாழ்வின் நோககமும் இலட்சியமும அல்லாஹவே தான், அல்லாஹவுடனேயே நேசம் கொளகிறார். அவனுடைய நேசததிறகாகவே எதையும செய்கிறார். அல்லாஹவின் நினைவில திளைக்கும் போதெல்லாம் அவர் உள்ளம் தெளிவடையும். அல்லாஹ்வின ஞாபகமே அகததின் வாழ்வு. அவனை மறந்திருபபதே அதன்

சாவு. அந்நிலையில் அவர் இறைவனின் நெருக்கத்தைப் பெற்று உலகமாயையிலிருந்து விடுதலை பெறுகிறார். இத்தகைய ஞான வழி 'தரீக்கத்' என அழைக்கப்படும். 'தரீக்கத்' என்ற பயிற்சி நிலையைக் கடந்து, 'ஹகீக்கத்' (தெளிவு-உண்மை) என்ற உன்னத நிலையை அடைகிறார். ஆத்மாவின உண்மை, அல்லாஹ்வுக்கும், தனக்குமிடையிலுள்ள தொடர்பின் இரகசியம், இவையெல்லாம் தெளிவாக விளங்க ஆரம்பிக்கின்றன. அல்லாஹ அல்லாத தேட்டத்தை விட்டு உள்ளம் பரிசுத்தமாக்கப்படும். இறுதியாக 'மஃரிபத் (மெய்ஞ்ஞானம்) என்ற நிலையை அடைந்து இறைவனின் தரிசனத்தைப் பெறுகிறார். மற்றொரு பெரியார் கூறுவதைக் காண்போம. "உலகில் நிலையான ஷரீஅத்தின் வணக்கம் உடம் பைக் கொண்டும் தவநிலையான தரீக்கத்தின் வணக்கம் அகத் தைக் கொண்டும், சித்தி நிலையான ஹகீக்கத்தின் வணக்கம் ஆத்மாவைக் கொணடும, மஃரிபத்தின் வணக்கம அல்லாஹ்வின் தரிசனத்தைக் கொணடும் நிகழத்தப்படுவதாயிருக்கும்". சைவ சித்தாந்தத்தில் உபதேசிக்கப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற சாதனங்களை ஒப்பு நோக்குக.

ஜுனைத் (ரஹ்) போன்ற இஸலாத்தின் தூல—சூக்கும (புற வாழ்வு—அக வாழ்வு) கொள்கைகளை இணைத்த மறறொரு பெரி யார் இமாம் கஸஸாலி ஆவார். (கி பி.1058—1111) அவருடைய கொள்கைகள் முஸ்லிம் உலகால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அவர் "ஹுஜ்ஜத்துல் இஸ்லாம்"—சத்திய சன்மார்கக ஞானச் சான்று—என்று அழைககப் பெறறார்.

தஸவ்வுஃப் தனி மனிதர்களின் தாக்கத்தால் பல்வேறு கிளை அமைப்புக்காக (தரீக்) பல்கிப் படிப்படியாக வளர்ந்தது கி. பி. 1165ஆம் ஆண்டில் ஸ்பெயின நாட்டில் தோன்றிய முஹயித்தீன் இப்னு அல் அரபி (ரஹ) எனபார் தீவிரக் கொள்கைகளை யுடையவர். அதன் விளைவாக எதிர்ப்பு உருவாயிற்று. அவர் ஒரே இடத்தில் நிலைத்து வாழ இயலவில்லை. அவர் ஸ்பெயினி லிருந்து பாக்தாதவரைப் பயணமாகித் தம் கொள்கைகளைக் கீழைய நாடுகளில் தூவினார் அவரது சூஃபித்துவம் கிழக்கத் தியக் கணணோட்டததில 'எல்லாம் அவனே' என்பதை ஒத்திருந் தது. மற்றொரு பக்கம் வேதாந்திகளின் "அவனிலிருந்தே எல் லாம்" என்ற கூற்றுக்கு ஒப்பானதாகவும இருநதது. அவர் ஷெயகுல் அகபர்---மாபெரும் ஷெய்க-என்று அழைக்கப்பட் டார. அவரது பிரதானக் கொள்கை 'வஹதத்துல் உஜூத'--- ஏக உள்ளமை, அத்வைதம்-- (Ontological monism) அதன் சாரம வருமாறு

இது ஏகத்துவத்தின் விஸ்தரிப்பாகும். ஒரே இறைவனைத் தவிர வேறு தெய்வமில்லை (There exists but one God). அவ் விறைவனைத் தவிர வேறு உள்ளமை (உஜூத்) எதுவும் இல்லை (There is nothing in existence except God). பிரபஞ்சத்திலுள்ள எல்லாம் அந்த உஜூதிலிருந்து உண்டானவையாகும். ஏக உள்ளமையின ஜோதியின் பிரகாசத்தால் சூஃபியுடைய "நான்" எனும் இருள் அவரை விட்டு நீங்கிவிடும். அப்போது அவர் இறைவனில மறைந்து விடுகிறார். இறைவன் அவரைத் தன் ஏக உள்ளமையில் மறைத்துக் கொள்கிறான். "அவ்லியாயி தஹத்த கபாயி லாயஃரிபுகும கைரி—என் அன்பர்கள் என் அங்கியின் கீழ இருககிறாகள்", என்ற ஹதீதே குத்ஸி ஈண்டு நினைவில் கொள்ளத்தக்கது:

இப்னுல் அரபி (ரஹ்) தங்கள் 'லவாக்கிவுல் அன்வார்' என்ற நூலில் "நான் உணமை; நான் நாயன்" என்ற மன்ஸூர் ஹல்லாஜின் கூற்று பற்றிச் சொல்வதைக் காண்போம்:

'ஹல்லாஜ் இப்னு மன்ஸூர் (ரஹ்) அவர்கள் 'அனல் ஹக்' (நானே உண்மை) என்று சொன்ன பேச்செல்லாம் போதையில் (மஸதில்) வெளியாகிய கூற்றேயன்றி உண்மையை வெளிப் படுத்துவதல்ல. மேலும் புதிதாக ஆனது. அவ்விதம் புதிதாக ஆன நிலையை விட்டும் ஒழியாது; அநாதியானவன் புதிதானவை களில் இறங்கினான் என்று ஏற்படுமாயின் அல்லாஹ் உடல் (உரு) உடையவன் என்ற வழிதவறிய கூட்டத்தாரின் சித்தாந்தம் சரி யாகிவிடும். எனவே அநாதியானவன் ஒரு பொருளில் இறங்கு வதற்கு இடமில்லை. ஒருவன்தான் அல்லாஹ்வில் கலந்தவன் என்று வாதாடுவானாயின் அதுவே பிரித்தலாய் இருக்கும்......... நீ நீதான்; அவன் அவன்தான். ஆனால் 'ஆசை கொண்டவனும் நானே, ஆசிக்கப்பட்டவனும் நானே' என்று அல்லாஹ்மீது நேசங் கொண்டவர்கள் (ஆஷிகீனகள்) சொல்லுகிறார்களே அது எப்படி சரியாகும் என்று நீ கேட்கலாம். இது ஆசையும் அன்பும் கொண்ட நாவால் உரைத்த பேச்சேயனறி, அறிவின் துணையுடன் உள்ளமையைத் திடப்படுத்தும் பேச்சல்ல, அவர்களுடைய ஆசை என்ற போதை (மஸ்து) தெளிந்தால் அப்படிச் சொல் வதை விட்டும் அவர்கள் திரும்பிவிடுவார்கள். எனவே, நீ அவ்வாறு சொல்லாமலிருக்கக்கடவாய் என்று உன்னை நான் எச்சரிக்கிறேன்.

இது பற்றி கூறப்பட்டுள்ள வேறு சில கருத்துகளையும் காண்போம்;

ஹல்லாஜ் (ரஹ்) அவர்கள் 'அனல் ஹக்' என்று சொன்னதன் காரணத்தால் அவாகளுடைய 'கைரியத்' (ஒபபனே-உருவெளித தோற்றம்) போய்விடவில்லே. ஆனால் நிகழ்நதது எனனவென்றால், ஹல்லாஜ (ரஹ்) அவர்கள் 'ஐனியத'தான (அசல-மூலம்) காரண காரியததில எமமட்டு ஆழ்நதுபோய் இருந்தார்கள் என்றால் 'கைரியத' என்பது அவர்களுடைய பார்வையைவிடடே போய்விட்டது. அதறகுப் பதிலாக 'ஐனியத்'துடைய தன்மை தங்கி இருநதுவிட்டது எனவே, இந்த ஐனியத்துடைய நிலேயில 'அனல் ஹக்' எனறு சொனனாாகள்.

சுக துக்க மாயையென்னும் இப்பந்தங்களே விட்டும் வெளி யேறி விடுதலே பெறும் அகத்துக்கே நிததியானந்தம் என்னும் மோட்சம் கிட்டும் அதாவது ஆதமாவுடன இணேத்து இறை வனின், 'தஜலலியா'த்துக்களாகிய (உள்ளொளி) அருட்காட்சி களுக்குக் கண்ணாடியாகித் தன் உள்ளமையில் இறைவனுடைய உள்ளமை பிரதிபலிககக்கூடிய இந்த நிலேயில்தான 'அனல் ஹக்' 'இனனி அல்லாஹ்' என்ற சொற்கள் ஒலிககப்படும். ஆகையாய், புதை குழியைவிட நெரிசலும், இருளும் கொணட தன் நிழலாகிய இந்த பூவுலகச சிறையில சிக்காமல சுகதுக்க பந்த பாசங்களே உடைத்தெறிந்து வெளியேறியவனே 'பரிசுத்த ஆத்ம ரீதி' அருளப்பெறுவான. இதுவே நிததியானந்த சுவர்க்கமும் இறை வனின தரிசனமும் ஆகும.

''இகபர மிரண்டிலுஞ் சுகதுக்க மற்றுயான்
சும்மா விருக்க வருள் புரியவும்.''

(மஸ்தான் சாகிப்)

'வஹ்தத்துல் உஜூத்' கொள்கையைக் குறை கண்டவர் பலர். குறிப்பாக ஷெய்க் ஷிஹாபுததீன ஷுஹரவர்தியைக (ரஹ கூறலாம் அவா ''அவாரிபுல மஃரிப்'' எனற அரியநூலே எழுதி னார். அது எல்லா உலமா அமைபபுககளாலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. அவா ஷரீ அததீன முதனமையை வலியுறுத்தியுள்ளார் இந்நூல் பிற்காலத்தில எழுதப்பட்ட பல ஞானநூலகளுக்கு தாயநூலாக அமைந்தது. எனவே சூஃபிததுவம் வலது சாரி இஸ்லாமிய ஆத்மஞானி அமைப்பி ா தாககததின் கீழ் வரலா யிற்று. ஷரீ அததீன் கை ஓங்கிற்று.

மௌலானா ஜலாலுதீன் ரூமி (1207-1273) மிகச்சிறந்த சூஃபிக கவிஞர் ஆவாா. அவருடைய 'மத்னவி' என்ற ஞானக் கவிதை உலகப் புகழ்பெற்றது. 'உலகததிலுள்ள பொருட் தொகுதியில

தாதுப்பொருட்கள் கீழ்மட்டத்தில் உள்ளன. அதற்கடுத்தமேல் நிலையில் அமைவது தாவர இனம். அடுதது விலங்கினம். மனித னுக்கு மேல் இருப்பவன் இறைவன். அடிமட்டப் பொருள் உசசநிலைப் படைப்போடு முன்னேற்றச சங்கிலித தொடரொன ருல் இணைக்கப்படுகிறது. மனித ஆத்மாவானது உலகக் கட்டினை அறுத் தெரியும் முயற்சியில் தொடர்ந்து முயலுகின்றது. விடுதலை அடைந்தவுடன், மேலே எழுந்து, எங்கிருந்து வந்ததோ அந்த இறைவன் பக்கம் வேகமாகச் செல்கின்றது'' இக்கொள்கை 'மத்னவி' யில் இடம் பெறுகிறது.

இஸ்லாமிய பேரொளியின் கதிர்கள் இந்தியாவின் மேற் கெல்லையில் பளிச்சிட ஆரம்பித்தபோதே, தஸவ்வுஃபின் தென்ற லும் தவழத துவங்கிவிட்டது தெனனிந்தியா, இலங்கை, இலட் சத்தீவுகள், மாலத்தீவுகள் ஆகியவற்றில் தங்கள் அடிச்சுவட்டைப் பதித்த மத்திய கிழககு நாட்டு முஸ்லிம்கள் தஸவ்வுஃபின்பால் அதிக நாட்டம் கொண்டவர்கள் தங்கள் சீலமிகு இஸ்லாமிய வாழ்க்கைபபாட்டையில் தஸவ்வுஃபின் சுவடுகளையும் பதித்து விட்டனர். எனருலும் சூஃபித்துவம இந்தியாவில் பதின்மூன்றுவது நூற்றுணடில் அல்லது அதற்குச் சற்று முனனர்தான வளர்ச்சியுற் றுக கால கொணடது என்று சொலலலாம். இந்திய சூஃபித்துவ வரலாறு இரு பகுதிகளாகப் பிரிக்கப்படலாம். ஒன்று ஏறத் தாழ திலலி சுலதானகள ஆட்சிக்கலாம்; மற்றொன்று மொகலாய மனனர்கள ஆட்சிக் காலம் அலியயுப்னுல் ஹஜ்வீரீ (ரஹ்) கஸனு விலிருந்து (Ghazna) வந்து லாகூரில தங்கினுர். அவர் காலத்தில தான தஸவ்வுஃபின பசுமை இந்திய மண்ணில் வெகுவாகப் படர்ந் தது. அவா எழுதிய 'கஷ்புல் மஹ்ஜூப' ஆதாரத்திற்குரிய சிறப் பான தஸவவுஃப் நூலாகும். அவர் 'தாதா கன்ஜ் பக்ஷ்', அநாவது ஈருலக அருள் பொக்கிஷங்களைத் தருபவர் என்று, அழைக்கப்பட்டாா. அவர் தமக்கு முந்திய கால சூஃபிகளையும பினனர் வந்தவர்களையும் போல ஷரீஅத்திற்கும், தரீகத்திற்கு மிடையே இணக்கத்தை ஏற்படுத்தினுர். என்றுலும் இறை நாட் டத்தில் தனனிலையை அழித்து கொள்ளும் (ஃபனுபில்லாஹ்)எனும் மேல நிலைக்கு முக்கியத்துவம் அளித்தார். அதே சமயம் இறைவ னுடைய உளளமையில் (தாத்) 'தான்' அழிந்து அதில் ஒன்றுகக் கலந்துவிட முடியும் எனும கூற்றைக் கண்டித்துள்ளார் எந்தப் பொருளை நெருப்பிலிட்டாலும, அப்பொருளை நெருப்பு தன்வயப் படுத்தி, தன நிறத்தையும. இயல்பையும கொடுக்கிறது ஆனுலும் எக்காரணத்தைக் கொண்டு அதன் அசல் நிலை மாறிவிடுவதில்லை எனறு 'ஃபனுபில்லாஹு' என்பதை அவர் உதாரண மூலம் விளக்கினுர்,

தஸவ்வுஃபுடைய ராஜபாட்டையில ''ஹாலத்துஸ் ஜத்ப்'' எனும் பரவச இறைக் காதலில் லயித்துத் திளைத்து விடுவதை விட, ''ஹாலத்துஸ ஸுலூக்'' எனும் ஆத்மார்த்த இறைக்காதலி லும் உலகியல் வணககத்திலும் ஈடுபட்டிருக்கும் நிலைக்கு ஹஜ்வீரீ முதலிடம் கொடுத்தார். இதுவே ஜுனைதுல பக்தாதி (ரஹ) அவர்கள் தீவிரமாக மேற்கொண்டநிலை மிக உயர்ந்த படித்தரங் களைக் கடந்த சூஃபிகள் யாராயிருந்தாலும் ஷரீ அத்தின் மூலாதா ரச் சட்டங்களைப் புறக்கணித்துவிடக கூடாது என ஹஜ்வீரி எச்ச ரித்தாா. பின் தோன்றிய ஷேக் ஷிஹாபுத்தீன (ரஹ) தமது நூலில இறை வணக்கமும தியானமும். படைத்த இறைவனோடு சிருஷ்டிகளை இணைக்கின றனமென்று வலியுறுத்தியுள்ளார்.

சூஃபித்துவம் இந்தியாவிற்கு வெளியில் பிறந்திருந்தாலும், அது இந்தியாவில் மகத்தான வெறறியைக் கணடது. அதற்குச் சாதகமாயிருந்த முககிய காரணங்கள் வரலாற்றுச் சூழநிலை களும், இந்திய மக்களின் இயல்பான மனோநிலையும், நற்பண்பும் நல்லொழுக்கமுமாகும். இந்திய சூஃபித்துவம் ஒருபுறம் ஷரீ அத்தையும் தரீக்கத்தையும இணைத்தல், மறுபுறம் இந்து-முஸ்லிம் பரஸபரத்தை உணடாக்குதல், இவற்றைச் சுற்றி வரையப்பட்ட ஒரு கவாச்சிமிகு விருத்தாந்தமாகும ஆத்ம ஞானிகள் பரநத நோக்குடையவர்கள். எளிமைக்கும், தனனடக்கத்திற்கும் உறை விடமாகத் திகழ்ந்தாாகள். இறைவனால் படைக்கப்பட்ட எல்லா வுயிர்களையும் சாதிமத பேதஙகளுக்கு அப்பாற் சென்று நேசித் தார்கள். எவரையும் பகைத்துக் கொள்ளமாட்டாாகள. உலக மக்களெல்லாம் நிம்மதியாக அமைதியுடன் வாழவேண்டுமெனறு விரும்பினாாகள். அவாகளுடைய உள்நோககம ஏகத்துவத்தை (தவ்ஹீத்) நிறுவதலும், போற்றுதலும், பேணுதலும், சாந்தி (அமன) அதாவது குழப்பத்திலிருநது மன நிமமதி பெறுதலுமா கும். ஏகத்துவம் இலலாவிட்டால—அதை மக்கள் ஒப்புக் கொள் ளாவிட்டால—மனுக்குலமெலலாம ஓர்குலம எனற உணர்வை எவவாறு தூணட முடியும.

இககணனோட்டத்தோடு ஷெய்க் நிஜாமுதநீன் அவுலியா (ரஹ்) சமுதாய சேவையை, ஞானப்பாதையின் (Sufi Suluk) ஒரு அங்கமாக ஏறறுக்கொணடாா. அதன விளைவாக இந்தியக் கலாச்சார வரலாற்றில வேறறுமைகளுககிடையே ஒற்றுமையை நிறுவ வாய்ப்புக கிட்டியது ''ஏ முஸலிமகளே; இறைவன்மீது ஆணையாக மன்பதையின நலனுககாக இறைவனை யாா நேசிககி றார்களோ அவர்களையும், இறைவனுககாக யார் மன்பதையை நேசிக்கிறார்களோ அவாகளையும் இறைவன தனக்கு மிக நெருக்க

முடையவர்களாகக் கருதுகிறுன். இதுவே இறைவனைத் துதிப் பதற்கு வழியாகும்'' என்று அவர் கூறினுர். அதனுல் அவருக்கு 'மஹ்பூபே இலாஹி, —இறைவனுல் நேசிக்கப்பட்டவர் — என்ற சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று. யாவர்க்கும் சாந்தி (ஸுல்-ஹிகுல்) என்ற சுலோகத்தை அவர் போதித்தார். எல்லா மதங்களின் இறுதி நோக்கமும் இறைவனுக்கு அடிபணிந்து அவனில் சரண் புகுவதே. இவ்வாறு சூஃபித்துவம் இந்து —முஸ்லிம்களுக் கிடையே இணக்கத்தை உருவாக்கிற்று. ராஜா மனோஹர் என்ற சூஃபிக் கவிஞர் இவ்வுணர்வைச் சுட்டி இதமாகப் பாடியுள்ளார்.
''ஒன்ருய் இருப்பதற்கும் ஒன்ருய் ஆவதற்கும் இரு கண்களி லிருந்து கற்றுக் கொளளுங்கள்; ஏனென்ருல், அவை ஒன்றை விட் டொன்று பிரிந்திருந்தாலும், அவை தனித்தனியே பார்ப்பதில்லை''
(Being one and becoming one, learn from the two eyes for though they are separate from each other, they do not see separately).

சிஸ்த்தியா, ஷுஹ்ரவர்தியா அமைப்புக்களின் செல்வாக்கு மக்களிடையே குறைந்து ஷத்தாரியா அமைப்பு தலைதூக்கிய போது, இந்திய சூஃபித்துவம் மாறுபட்டக் கருத்தின் பக்கமாக நழுவத் தொடங்கிற்று. இந்து மக்களிடையே வேற்றுமைகளைக் களைந்து ஒற்றுமையைத் தோற்றுவிக்கத் துணைநின்ற யோகம் போன்ற நியமங்களை ஷத்தாரியா அமைப்பு தனதாக்கிக் கொண டது. சுருங்கக்கூறின், இவ்வமைப்பு சூஃபிததுவத்தை வேதாந் தத் தத்துவயியலோடு ஒப்புமை செயதது மேலும் இக்கால கட் டத்தில ஷரீ அத்தைப் பேணுத பலசூஃபி அமைப்புகள் தோன்றின.

இத்தகுக் குழப்பமான சூழ்நிலைக்கிடையே, ஷரீஅத்தின் முக்கி யத்துவத்தைப் பேணிக் காத்த காதிரியயா, நக்ஷபந்தியா சூஃபி அமைப்புக்களின் தாக்கம் மக்களின் சமுதாய முறைகளை வெகுவாக ஆட்கொணடு, பதினுறு, பதினேழாம் நூற்ருண்டுகளில் ஒரு நல்ல திருப்பததை உருவாக்கிற்று. இப்புனருததாரண இயக் கத்தை நக்ஷ்பந்தியா அமைப்பைச சேர்ந்த ஷெய்க் அஹ்மது ஸர்ஹிந்தி தலைமை தாங்கி நடத்திஞா, இவருககு 'முஜததித் அலபஸானி' (புதுப்பித்தவர்— சீர்திருத்தியவர்) என்ற பெயர் வழங்கலாயிற்று. இப்னு அரபி (ரஹ்) அவர்களின் 'வஹ்தததுல் உஜூத' (ஏக உள்ளமை) என்னும் தததுவத்தின்மீது அவர் நம்பிக்கை கொள்ளாது 'வஹ்தத்துஸ் ஷுஹூத'' (Apparentism, Unity of Witness of Phenomenal monism) வெளிப்பாட்டில் ஒற்றுமை என்ற தத்துவத்தைப் பரப்பிஞா, அதன்படி இறைவனுக்கும் மனிதனுககுமிடையே உள்ள

ஆன்மீக உறவை நேசிப்பவருக்கும், நேசிக்கப்படுபவருக்குமி, டையே உள்ள, முதிர்ந்த அன்பே தவிர ஒனறுக இணையும் ஐக்கிய மன்று. இவ்வுறவை ஒரு சூஃபிக் கவிஞர் அழகுற சி.ந்தரிக்கிருர். ''இறைவன் எவ்வளவுக்கெவவளவு அதிகமாகக் கீழ் இறங்கி வெளிப்படுத்திஞலும். இறைவன் இறைவனே: அடியான எவ்வள வுக்கெவ்வளவு உயாந்தாலும அடியானே.'' (The Lard is the Lord, however much He may reveal and the seivent is the servant however much he may rise) 'ஐனியத' தும் (அசல்—மூலம்) 'கைரியத்'தும் (அசல் அல்லாதது—ஒப்பனை—உருவெளித்தோற்றமும்) அநாவது முலாதிக் கர்ததா வும், சிருஷ்டிபொருட்களுமஒனறேடொன்று கலநது விடமாட்டா 'அவைகளுக்கிடையில ஒரு தடுப்பு உண்டு. (அந்தத் தடுப்பை) ஒன்றைஒன்று மீறுது'' (குர் ஆன் 55:19,20) என்ற வாக்கின் உட் கருத்தும் அதையே ஊர்ஜிதபபடுததுகிறது. கற்கணடாகிவிடுவ திலும், கற்கண்டைச சுவைததல மேலன்றே? இவ்வாறு ஷரீ அத திற்கும் தரீக்கத்திற்குமிடையே ஒரு இணைப்புப் பாலததை அமைத்து சூஃபிகளுக்கும் உலாமாக்களுக்கும மததியில நீணட காலமாக இடை இடையே தலைகாட்டிய போராட்டத்திற்கு முஜத்தித் முடிவு கணடார் அவரது கோட்பாடுகள இந்தியா வில் ஏற்றுக் சொள்ளப்பட்டதுமலலாமல மததிய ஆசியா விலும் வேகமாகப பரவின,

நக்ஷ்பந்தியா அமைப்பைச் சார்ந்தவர்கள் பின்பறறிய ஷரீஅத்திற்கு வலுவூட்டிய சூஃபித்துவம பத்தொன்பதாவது நூற்றுணடில் வேறுபட்ட மத இயக்கங்களுக்கு மத்தியில இணக்கத்தை ஊக்குவித்தது. அக் காலையில் இவ்வமைப்பில மழ்ஹர் ஜான்-ஏ- ஜானம் (Mazher-Jane-Janam) என்ற ஆத்ம ஞானி தோன்றி, வேதங்களை (Vedas) இறை வெளிப்பாட்டு வேதங்கள் (Divinely inspired scriptures) எனறும், இந்து மதத தவரை வேதம் பெற்ற மக்கள (the People of the Book—அஹ்லே கிதாப) என்றும் கொள்ளலாம் எனக் கருத்துத தெரிவித்தார் இதற்கு ஆதாரமாக,

''ஒவவொரு வகுப்பினருக்கும் நாம் ஒரு திருத்தூதரை அனுப்பியுளளோம்'' என்ற திருக்குர்ஆன வாக்கினைக காட்டிஞா

(திருக்குர்ஆன் 16:36)

ஷாவலியுல்லா(ஹ) என்ற மாபெரும் சூஃபிட் பெரியார் சீர்தூக்கிப் பார்த்து வஹ்தத்துல ஷுஹூதின் (வெளிப்பாட்டு ஒறறுமை) சாரமும், வஹ்தத்துல் உஜூதின

(ஏக உள்ளமை) சாரமும், ஆழ்ந்த நோக்கில் ஒன்றேயென்றும். அவற்றிற்கிடையே வேற்றுமை எதுவும் இருப்பின் அது மிக அற்ப சொற்பமேயென்றும, அதைப்பற்றி வீணாக விவாதிக்கத் தேவையில்லையெனறும் அறிவுறுத்துகிறார்கள். இருப்பது இறைவன் ஒருவனே. பார்க்கப்படுவதெலலாம் இறைவன் ஒருவனே. இருப்பதைத்தானே பார்க்கமுடியும். பார்ப்பதற்கு ஒளியும் வேண்டுமல்லவா? ''மெய்ஞ்ஞான வீடு நீ, வீட்டின விளக்கு நீ விரிகதிரச்சுடர் நீயே'' எனக் குணங்குடி மஸ்தான் சாகிபு பாடல் அமைந்திருப்பது கூர்ந்து கவனிக்கத் தக்கது.

தரீக்கத்தெனும் ஞானவழியில் பிரபலமான பதினான்கு வணக்க வழி —அமைப்புகளில் (ஸில்ஸிலா--தரீக்) ஐந்து அமைப்பு புககளே இந்தியாவில் வேரூன்றிக் கிளைத்து அருட்கனியை வழங்கிக் கொணடிருக்கின்றன. அவையாவன; (1) சிஸ்த்தியா அமைப்பு. இதை காஜா அபூ அலி இஸ்ஹாக் ஷாமி சிஸ்த்தி (ரஹ்) இந்தியாவில் அறிமுகப்படுததினார்கள். காஜா முய்னுத்தீன் சிஸத்தி (ரஹ்) வேரூன்றச் செய்தார்கள். (2) காதிரிய்யா : இது கௌதுல அஃலம் ஷெய்க் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களைப் பினபற்றுவோர் அமைப்பாகும். (3) ஸுஹ்ரவர்திய்யா : அப்துல காதிர் ஸுஹரவர்தி (ரஹ) உமர் ஸுஹரவர்தி (ரஹ்) என்ற இருவராலும ஆரம்பிக்கப்பட்டது. (4) நக்ஷ்பந்தியா; நக்ஷ்பந்த் முகம்மது பின் முகம்மது பஹாவுத்தீன் அல் புகாரி (ரஹ்) அவாகளால் நிறுவப்பெற்றது (5) ஷாதிலிய்யா: அபூ மத்யன் (ரஹ்) அவாகளால் துவக்கப் பெற்று அபுல ஹஸன் ஆலிபின் அப்துல்லாஹ் அல்ஷாதிலி (ரஹ்) அவர்களால் நிறைவு பெற்றது.

ஒவ்வொரு அமைப்பிலும் தனித்தன்மை வாய்ந்த சில முக்கிய விதிகள் உண்டு அதன் உறுப்பினர்கள் தங்களின் ஆத்மீக வலிமை இறைபக்தி, தாராள நோக்கு இவற்றின் துணைகொண்டு இஸ்லாமியக் கொள்கைகளைக் உபதேசிப்பார்கள். ஒவ்வொரு ஆதமஞானச் சீடனும் ஞானகுருவிடம் தீட்சை (பைஅத்) பெறுவது அவசியம்,

தமிழ் நாட்டைச் சற்று நோக்குவோம், தமிழகத்தில் தோன்றி இஸ்லாமிய நெறியினைப் பின்பற்றித் தாங்கள் கொண்ட கொள்கைகளையும், கண்டகாடசிகளையும் தமிழ்க் கவிதைத் தேனிலே வடித்தெடுத்த சூஃபிகள் பலர் உள்ளனர். குணங்குடி மஸ்தான சாகிபு, தக்கலை பீர்முகம்மது சாகிபு. கோடைநகர் மெய்ஞ்ஞானி ஷைய்க் முஹ்யித்தீன் மலுக்கு முதலியார்,

காலங்குடி மச்சரேகைச் சித்தர், ஐயம்பேட்டை அப்துல் கனி சாகிபு, காயல்பதி செய்யிது முகமமதுல காதிரி, கணியபுரம் ஷெய்க் அப்துல் காதிர், வாலே மஸ்தான் ஆகியோர் ஆவார்கள், இவர்கள் தம் பாடலகளில 'சூஃபி' மெய்ஞ்ஞானக் கருத்துக்கள் இடம் பெறுகின்றன இஸ்லாமிய மெய்ஞ்ஞானக் கருத்துக்களைத தெரிவிககின்ற இவர்கள் அரபுச் சொற்களைப் பரவலாக விதைத துள்ளனர் தமிழ்நாட்டுப் பக்தி நெறியின் தாககத்தை இவர்கள் பாடல்களில் காணலாம், இந்து--முஸ்லிம் ஒற்றுமைக்கு இவர் களது பாடல்கள் பெருந்துணையாக நிற்கின்றன.

இந்தியாவின் சமுதாயப் பாரம்பரியம் பழமையானது. அது அழிந்து போய்விடவிலலை. தொடர்ந்து நடைபோட்டுக்கொண டிருக்கிறது. ஒருமைப்பாட்டுணர்ச்சியை வளர்த்து, இன்றைய கவலை நிறைந்த மனித குலத்திற்குச் சாந்தியை அளிக்கும் ஆற்றல் அதற்குண்டு என்பதில் ஐயமில்லை. உலக மாயையில வீழ்ந்து கிடக்கும் நாம் 'ஷரீஅத்' என்ற கயிற்றைப் பற்றித். 'தரீக்கத' எனற படிகள் மூலம 'ஹகீககத்' என்ற ஒளியின் உதவியுடன் கரையேறி 'மஃரிபா' எனற அகணடமான மண்டபத்தை அடைவோமாக. சத்தியம் சித்தியைத் தருவதாக! சிததிவழி நித்தியானந்தம் கிட்டுவதாக !!

# சூஃபிகளும்–சித்தர்களும்

டாக்டர். இரா. மாணிக்கவாசகம்

## சித்தர்–ஒரு விளக்கம்:

ஆன்மீகத்துறையில் உயர்நிலை பெற்றவர்களில் ஒரு சாரார் சித்தர்கள் சித்தி—சித்து— சித்தர் என்னும் சொல்லுக்குப் பல்வேறு கோணங்களில விளக்கம் தருதல் கூடும்.

சிந்தை தெளிந்து சித்தத்தை வென்றவன் சித்தன்–வெல்வது சித்தி—வென்றவன் செயல் சித்து என்பது ஒரு விளக்கம்.

'சிந்தையிலே களங்கமற்றோர் சித்தருவான்'
—50 அகத்தியர் குரு நூல் முப்பூ 50

'சிந்தை தெளிந்திருப்பவனே யவனே சித்தன்
செகமெல்லாஞ் சிவமென்றே யறிந்தோன் சித்தன்'
—2 வானமீகி சூத்திரம் 16

மேற்கண்ட வரிகள் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

சித்தி எனும் சொல் 'அடைதல்' என்னும் பொருள் தருவது. பெறத்தக்க பேறுகளிலேயே உயர்ந்ததாகிய சாயுச்சிய நிலை அடைந்தவர்களைச் சித்தர்கள் எனவும் கூறுதல் கூடும்.

குறியான சிவயோகம் சித்தியாச்சு'
—21 நிஜானந்த போதம் சித்தர் ஞானக்கோவை

என்பது காண்க.

சித் என்னும் சொல்லுக்குப் பேரறிவு என்பது ஒரு பொருள். சச்சிதானந்தம் (சச்+சித்+ ஆனந்தம்) என்னும் சொல்லைக் காண்க. இப்பேரறிவைப் பெற்றவன் சித்தன் எனவும் கூறலாம்

சிவனுக்குச் சித்தன் என்ற பெயரும் உண்டு [1] சக்தியை வழிபடுபவர் சாக்தர் எனவும், புத்தரைப் போற்றுபவர் பௌத்தர் எனவும், விஷ்ணுவைப் பின்பற்றுபவர் வைஷ்ணவர் எனவும்

குறித்தல் போல சிவனைச் சித்தனாகக் கொண்டவர்கள் சித்தர்கள் எனக் கூறலாம். சமயம் என்ற எல்லைக்குள் நின்று சிவனைப் பாடியவாகள் சைவர்கள்; இந்த எல்லை கடநதவாகள் சிததர்கள் என்ற அமைதி கூறலாம்.

இப்படிப் பல விளக்கங்களைத தருதல் கூடும்[2]. இவர்கள் சமய ஆசாரங்களையும், மதக் கோட்பாடுகளையும் கடந்தவாகள். ஆதலின் சைவ சமயச சிததர்கள், வைணவ சமயச் சித்தர்கள் எனக் கூறும் மரபு இல்லை. என்றாலும் தமிழகத்தைப் பொருத்த வரையில் புறச் சமயங்கள் என வரலாற்று ஆசிரியர்களால் குறிக்கப்பெறுகின்ற சமணம், பௌத்தம், கிறிஸ்துவம், இஸ்லாம் முதலிய நெறிகளின் கொள்கைகளுக்கும், கோட்பாடுகளுக்கும் கட்டுப்படாது உயர்ந்தவர்களை அவ்வச் சமயங்களின பெயரோடு இணைத்துச சமணச் சித்தாகள், பௌத்தச் சிததர்கள், கிறித்துவச் சித்தர்கள், இஸ்லாமியச் சித்தர்கள் என வழங்குவது காணலாம். (mystics of Jainism, mystics of Buddhism, mystics of chrstianity; mystics of Islam). இஸ்லாமியச் சித்தர்களைச் 'சூஃபிகள், என்னும் சொல்லாலும் குறிக்கின்றாகள்.

### சூஃபி—ஒரு விளக்கம்

சூஃபி என்னும் சொல்லுககுக் 'கம்பளி ஆடை தரித்தவர்' என்னும் பொருளை மிகப்பரவலாகப் பலர் கொண்டு பேசியும் எழுதியும் வருகின்றனர். என்றாலும் இச்சொல்லுககுப் பல்வேறு கோணத்து விளக்கங்கள் தரப்படுகின்றன என்பதையும் இங்குக் குறித்தல் வேண்டும்.

SAFA (purity) என்னும் சொல் தூய்மை எனனும் பொருள் உடையது. உலகியல பிடிப்புக்களில் இருந்து விடுபட்டு அகப் புறம் இவற்றில் தூய்மை பெற்றவர்களைச் 'சூஃபி'கள், என்னும் கருத்தை மிகப்பலர் ஆதரிக்கின்றனா.

SAFF (rank) என்னும் சொல் தகுதி என்னும் பொருள் உடையது. இறைவனோடு இரண்டறக் கலக்கும் உயாநிலைத் தகுதி பெற்றவர்களைச் 'சூஃபி' என்றனர் என்னும் கருத்தும் நிலவுகிறது.

SUFFA (bench) என்னும் சொல்லில இருந்து சூஃபி எனும் சொல் பிறந்திருக்கலாம் என்னும் கொள்கையுடையவர்கள், மதீனாவில் கட்டப்பெற்ற தொழுகையிடத்தில் மசூதியின் வெளிப் புறத்தில் இருந்த மேசையையே தமது தங்குமிடமாகக் கொண்டிருந்த சில வறிய துறவிகளை இச்சொலலால் குறிந்தனர் எனக் கருதுவர்.

சூஃபிகளைப்பற்றி முதலில் எழுதப்பெற்ற நூலின் ஆசிரியர். SUF (wool) என்னும் சொல்லோடு தொடர்புபடுத்திக் கம்பளி ஆடையை அணியும பழக்கம கிருத்தவ மதத்தைச் சார்ந்த துறவி களிடம் இருந்ததாகவும் இதையே இஸலாமியச் சமயத்துறவிகளும் மேற்கொணடனர் என்று கூறுகின்றனர்.[8]

இஸ்லாமிய நெறியில் சூஃபிகள் என்ற பிரிவு ஏற்பட்ட காலம் எது என உறுதியாகச் சொலவதற்கில்லை' என்றாலும் சமயமத ஆசார சங்கற்பவிகற்பங்களைக் கடந்தவன் 'இறை' என்ற உணர் வும், அனபு வடிவானவன் என்னும் கருத்தும், உண்மை வாய்மை மெய்மை இவற்றின துணையால் அமையும் யோக நெறியால் ஆன்மீக உயர்வு பெறுதல் கூடும் என்ற எண்ணமும் தோன்றிய காலமே சூஃபிகளின் காலம். சித்தாகளின் தோற்றமும் அப்படித் தான் இருந்திருக்க வேண்டும்.

பதினெண்பேர்:— தமிழில் சித்தர்களைப் பொருத்த வரையில் 'பதினெண் சித்தர்கள்' என்று கூறும் மரபு இருந்து வருகிறது. பதினெண சித்தர்கள் எனனும் வழக்கு காலத்தால் பிற்பட்டது என்ற கருத்தும் நிலவுகின்றது. உணமையில் மிகத்தொன்மை யான சித்தர் பாடல்களில் மிகப்பரவலாக அகச்சான்றுகள் கிடைக்கின்றன.

'சித்தர்கள்தான் பதினெண்பே ராத்தாள் சொன்ன
செயலெல்லாங் கணடுணர்ந்து தெளிந்திட்டார்கள்'

—229 ஞான வெட்டியான் 1500

'வகுத்தபொரு ளேதென்றால் பதினெண்பேர்கள்
வசனித்த நூற்றேறும் மறைத்தார்' சித்தர்,

—4 இராமதேவர் பரிபாஷை 48

'வாதநூ லத்தம் பதினெண்பேர் சித்தர்
வசனிதத நூல்களும் பலிதம்'

—54 புலஸ்தியர் கற்பம் 300

'உன்னியதோர் வேதாந்தப் பெருநூல் எண்ணூறு
உற்பனமாய் பதினெட்டுச் சித்தர் பாடல்'

—மச்சமுனி பெருநூல் 800

இப்படிப் பல மேற்கோள்களைக் காட்டலாம். பதினெட்டு பேர் எனும் மரபு உண்டு என்பது உண்மை எனினும் அவர்கள்

யாவர் என்னும் கருத்தில் மிக்க வேறுபாடு உள்ளது என்பதும் ஈண்டுக் குறிககத்தக்கது' 'பதினெண சித்தா ஞானக் கோவை' என்ற பெயரில் உலாவிக் கொணடிருக்கும் நூலேத தொகுத்தவர் யாா எனத தெரியவில்லே. மிகத்தொனமையான சித்தர்களின் அரிய பாடல்களேயெல்லாம் விட்டுவிட்டு அணமைக காலத்தில் ஞானிகளின் மிகச சாதாரண பாடல்களேயெல்லாம தொகுத துள்ளனர் பதினெண் சித்தர்பாடல் என்ற பெயரில சுமார் நாற்பது பேருடைய பாடல்களேத் தொகுத்துள்ளனா.

தெற்கே 'பதினெண் சித்தர்கள்' என்னும் மரபு இருப்பது போலவே, வடக்கே' நவநாத சித்தாகள' என்னும் மாபும் இருந்து வருகிறது. ஆனுல சூஃபிகளேப் பொருத்த வரையில் இப்படி யொரு எண்ணிக்கையோடு கூடி வழஙகும் மரபு இருப்பதாகத் தெரியவில்லே.

இஸ்லாமிய சூஃபிகளேயும், தமிழ்ச் சித்தர்களேயும் இணேத்து ஆராய்வதன் முன்னம் சூஃபிகளேப்பற்றிப் பொதுவான சில கருத்துககளேச் சுருக்கமாகக் காண்பது அவர்களேப்பற்றித் தெளிந்த அறிவு பெறத் துணே செய்யும்.

**சூஃபி—தத்துவம்**' சூஃபி நெறியினர் கடவுள் ஒருவனே என்னும் ஒரு தெய்வவாதிகள். அவர்கள் தங்கள் கொளகையை 'வுஜீதி' என்றும் 'ஷீஹீதி' என்றும் கூறுவர். கடவுள் ஒன்றே உள்ள பொருள் எனனும் கொள்கையின ஒருவகையே இது இந்த இரண்டு கருத்துக்களும் முறையே இந்துமத அத்துவிதத்தையும், விசிஷடாத்துவிதத்தையும் போன்றவையாகும். இததகைய ஒன்றேயான பரம்பொருளின தன்மையைபபற்றி 'இன்சானுன் காமில்' என்னும் நூல் கூறுவதாவது ''அவன் சகல பொருள் களிலும் அந்தர் யாமியாக உள்ளான். அவனது முழுமைத் தன்மை உலகிலுள்ள ஒவவோர் அணுவிலும் காணப்பெறும். இப்படி எல்லாப் பொருளகளிலும் ஊடுருவி நிற்கும் தன்மையின் ரகசியம் யாதெனில் அவன் உலகைத்தன்னிடமிருந்தே படைத்தது தான் உலகு பனிக்கட்டி போன்றது கடவுள் பனிக்கட்டிக்குக் காரணமான நீர்போனறவன. பனிக்கட்டியின் உணமையான பெயர் நீாதான, நாம்தான அதைப் பனிக்கட்டி என்று கூறு கிறோம்.''

ஆன்மா சடப்பொருளினின்றும் விடுதலே பெற்று மீண்டும் பரம்பொருளுடன் கலக்க வேண்டுமானுல் அது நானகு படிகளேக் கடக்கவேணடும்.

ஷரியத்— ஷரா என்னும் இஸ்லாமிய சடங்குகளை நிறைவேற்ற வேண்டும். மனத்தில் எப்போழுதும் ஷெய்க்கை மறவா திருக்கவேண்டும். தியானத்தில் தன்னை இழந்தவனாக வேண்டும்.

தரீக்கத்— புறச் சடங்குகள் அகன்றுவிடும. அகத்திலே வழி பாடும தியானமும் நடைபெறவேண்டும். மிகுந்த பக்தி யும் அறவொழுக்கமும், மனவுறுதியும் வேண்டும்.

மாரி அபத்— இந்த நிலையில் இயற்கைக்கு மேலான ஞானம் பெற்றுத் தேவதூதர்களுக்கு இணையாகக் கருதப்படு வான்.

ஹகீகத்— கடவுளுடன் கலந்து விடுபவர். பார்க்குமிடமெல்லாம் நீக்கமற நிறைகின்ற பொருளையே காண்பர்.

இந்த நான்கு படிகளையும் சைவசமயத்தின் நான்கு மார்க்கங் களுடன் ஒப்பிடலாம்.

சூஃபிமார்க்கத்தார் கணக்கற்ற வகுப்புக்களாகப் பிரித்துள்ள னர். இரண்டு குறிக்கத்தக்கது.

ஹூலுலியா— இதன் பொருள் அருள் பெற்றவர் என்பது இவர்கள் கடவுள் தங்களிடம் வந்து நிறைந்துவிட்டதாக வும், அதுபோல் அறநெறி வழுவாமல பக்தி செய்து மனத்துக்கண் மாசகற்றும் எலலோரிடமும் வந்துநிறையு மென்பதாகவும் கூறுவா.

இத்திஹாதியா— இதன் பொருள் 'கலந்தவர்' என்பதாம் ஆன்மா எரியக் கூடிய கரி. இதனுடன் சுடராகிய கடவுள சேர்ந்ததும அது சுடர்விட்டு எரியத் தொடங்கி கடவுளாகி ஆகிவிடுகிறது எனபர்[6].

**சூஃபிப் பாடல்கள்:**

இனி அறுபதுக்கும் மேற்பட்ட சூஃபிகளின் தமிழ் நூல்கள் கிடைக்கின்றன. என்றாலும் சூஃபிகளில குறிப்பிடத்தக்கவராக விளங்குபவர்கள், மஸ்தான்சாகிப் அவர்களும் பீர்முகம்மதுஅவர் களும் ஆவர் தமிழ்ச் சித்தர் கூட்டத்தில் இராமதேவர் என்ற பெயருடன இருந்தவர் பின்னர் மக்கா நகரம் சென்று யாகோபு என்று தனது பெயரை மாற்றிக் கொண்டார் என்பது அகச் சான்றால் தெரியவருகிறது. இவர் பாடிய பாடல்களையும சூஃபிப் பாடலாகவே கருதுவதில தவறில்லை.

'ஆதியிலே இராமனென்று பேரும்பெற்று
அன்புடனே சதுரகிரி தனிலிருந்து
நீதியுட னக்கனமாய் மக்கஞ் சென்று
நேர்மையுட னபிமான நபியைக் கண்டு போற்றி
கோதிலலா தங்கியிருக்கும் போதெனக்குக்
கொடுத்தார்கள நபிமார்கள் யாக்கோ பென்று
வாதியென்று உலகோாகள சொல்லவேதான்
மக்காவிற் றனிருந்து பின்பு தானே'

— 1: யாகோபு வைத்தியம் 300

'தானென்ற மக்காவி லனேக நூல்கள்
தக்கபடி சொலலிவைத்து அதைவிட்டேகித்
தேனெனற சதுரகிரி மந்திவந்தேன்
திருமூலர் கண்டென்னை இருக்கவைத்தார்
நானெனறு அங்கிருககும் போது சித்தா
நலமாக வந்தெனனைக் கண்டுகொண்டு
கேசனெனறே நானிருந்த இடந்தனக்குத்
கொடுத்தார்கள் துலுக்கன் மொட்டை என்றுபேரே

— 2: யாகோபு வைத்தியம் 300

'சாதித்தேன் வடமொழியைக் கண்டுதேறி
சமத்தாக இசுலாத்தி லிருந்து கொணடு
வாதித்தேன பிசுமிலலா ரகிமானென்று
வளமாகத் தோத்திரமது மிகவும் பணணி
போதித்தேன் பதினெட்டுச் சித்தரோடே
புகலரிய அவர்களுடன் மலையிலேறி
கீாத்திபெற யாகோபு யெனறபேரு
கீர்த்திபெற வசனித்தேன் குணமிதாமே'

— 38 யாகோபு செந்தூர சூத்திரம் 150

சித்தியென்ற யென்னுலைத் தெரிந்து கொண்டால்
சித்தினென்று சொல்வதற்குத் தடைவேறுண்டோ
பத்தியுடன் நூல்கள் சொல்லி மககாதேசம
பரிவாக வந்தவுடன நபிமாரெல்லாம்
எத்திசையும் தானறிய யாக்கோபென்று
எனககுப் பேரிட்டுச் சுன்னத்துஞ் செய்தார்
பத்தியுட னங்கிருந்து வெகுநூல சொல்லி
புகழாக அறுநூறுஞ் சொனனேன் முதலே

—605: யாகோபு வைத்திய சித்தர் மணி 700

கூவென்ற சொற்கேட்டு நபிமாரெல்லாம்
குண்டலியைத் தானசைத்துத் தீன்தீனென்றார்
ஆவெனற சொற்கேட்டு ஓடிவந்தேன
அசனுசனும் வேறலல நீதானென்ருர்
மாவெனற ரொட்டியொன்று மீய்ந்து பின்பு
மக்சத்தி லேயிருங்க ளென்று சொல்லி
ஈவென்றுஞ் சொல்லாது கலிமாவோதி
இருந்தேனே சிலகாலம் யாகோப்பென்றே
—614. யாகோபு வைத்திய சிந்தாமணி 700

இவை சில சான்றுகள். இவரைச் சூஃபிகள் கூட்டத்தில் சேர்த்தால் அக்கூட்டத்தில் இவர் ஒருவரே வைத்தியம், வாதம், யோகம் மூன்று பற்றியும் மிக அதிகமான பாடல்களைப் பாடியவர், எனத் தயங்காமல் கூறலாம். மற்றவர்கள் யோகம் பற்றியே பாடியுள்ளனர். சில தோத்திரப் பாடல்களாகவும் உள்ளன என்பதும் உண்மை.

பரிபாஷை

சித்தர் இலக்கியங்களில் மறைமுகமாகக் கருத்துக்களைச் சொல்வது மரபு. இதனை இலக்கணத்தில் குழூஉக்குறி என்பர்[7]. பொற்கொல்லர் பொன்னைப்பறியென்றும், யானைப்பாகர் ஆடையைக் காரையென்றும், வேடர் கள்ளைச் சொல் விளம்பியென்றும் வழங்கும் இத்தொடக்கத்தன குழூஉக்குறி.

ஒரு குழுவிலுள்ளோர் யாதானும் ஒரு காரணத்தால் ஒரு பொருளினது சொற்குறியை யொழித்து வேருெருசொற்குறியால் கூறுவது குழூஉக்குறியின் இலக்கணம். 'மாமியார் வீடு சென்ருன்', 'கம்பி நீட்டினுன்' முதலிய எடுத்துக் காட்டுக்கள் புதியன. இவை நேரடியாகக் குறிக்கும் பொருள் ஒன்று; உணர்த்தும் பொருள் ஒன்று இவைபோன்ற பரிபாஷைகளை மிகப் பரவலாகச் சித்தர்கள் நூல்களில் காணலாம். எந்தக் காலத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் ஒரு சில பரிபாஷைச் சொற்களைத் தவருமல் குறிப்பதையும் காணலாம்.

இனி மஸ்தான் சாகிப் அவர்களின் பாடலில் வரும் இரு சொற்களை மட்டும் எடுத்துக்கொண்டு விளக்குவோம்.

கட்டிப் பிடிக்கினுங் கைக்கடங் காமனாங்
கவிவதிலலை யென்ற முவனே
கருவிகர ணம்பாய்கு வதுகணடு கண்கலக்
கங்கொண்டு நின்ற முவனே

வெட்டவெளி தன்னிலே விட்டகங் காரமென்ற
மேவிட்ட தறக ழுவனே
மெய்யாகி நானெனலு நாருனெனக்குளறும்
வெட்கந் தனககு ழுவனே
எட்டிரண்டறியாத மூட ஞ யிருவினைக்
கீடாகி நின்ற ழுவனே
என்னதான் செயவனடி யேனுமை நம்பினே
னிஷ்டம் வைத்தாளு தறகே
மட்டுரை நிஷ்டைநடு உளளநீ பின்தொடர
வள்ளலிற குலவ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மெனனிருகண
மணியே முஹியித் தீனே

*—90· முஹியித்தீன் சதகம்*

*இப்பாடலில் வரும் சொற்களில் இரண்டு சொற்கள் சித்தாகள் பாடல்கள் பலவற்றிலும் பரவிவருபவை. 'வெட்ட வெளி 'எட்டிரண்டு' எனும் இரணடு பரிபாஷைச் சொற்கள்.*

பாடுகின்ற சித்தருட நூல்களெல்லாம
பரிபாஷைத் தெரியாது பாவியோர்க்கு
தேடுகினற பொருளழியச் சொனனதல்லால
தினையளவும் பொனகாணச சொல்லவில்லை.

*—10: அகஸதியர் பரிபாஷை 500*

வெளிவருமாபேரிபாஷை புதையலதன்னை
விதியான வினையாளன் காணபதல்லால
தெளியாத மூடர்கு ஞானமகத்துவம்
செப்புகின்ற உபமான தியானமெலலாம

*—24. அம்பிகானநதர் முப்பூ சூத்திர*

*இப்படிப் பல' மேற்கோள்களைக் காட்டிச் செலலலாம்.*

*இவ்வாறு இவர்கள பரிபாஷையைக கையாணடதன் நோக்கம் போதிய மனப்பககுவததைப் பெற்றவரே இதனை அறிதல வேணடும் என்பதாம். அல்லாதார். தவருகப் பயன் படுத்தக கூடும்.*

சித்தாகளுக் காகவே இந்நூல் சொனனேன்
சிவயோகி மெயஞ்ஞானிக் கிந்நூல சொன்னேன்
பற்றறுய குருவுக்குத் தொணடு பணணி
பன்னிரண்டு வருஷம் வரைப்பாதம போறறிக்

கற்றேமென் றிருந்த கடைப்பிள்ளைக் காகும்
கல்வியறி வுள்ளோர்க்கு மீயலாகும்
மற்றுளளோர்க் கிந்நூலை யீதாயானல்
மாண்டிடுவாய மகத்தான சபமெய்தே

—521: ரஸவாத நூல

மேற்கண்ட பாடல் நல்ல விளக்கமாக அமையும்.

வெட்டவெளி

வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்குப்
பட்டயமேதுக்கடி ? —குதம்பாய்
பட்டய மேதுக்கடி ?

—1: குதம்பைச் சித்தர்

'வெட்டவெளி பினைச் சார்ந்து—ஆனந்த
வெள்ளததின் மூழ்கு மிகுகளி கூர்ந்து

—22: கடுவெளிச் சித்தர்

'வீச்சப்ப வெட்ட வெளி நன்றாய்ப் பாரு

—7: அகஸ்தியர் ஞானம்

'வேவா திருநதி . ப பாலகற—வெறு
வெட்ட வெளிகளே பாலகற

—107: இடைக்காட்டுச் சித்தர்

வெட்டவெளிக் குள்ளே விளங்குஞ் சதாசிவத்தைக்
கிட்டிவரத் தேடக் கிருபைசெய்வ தெக்காலம்

—200: பத்திரகிரியார் மெய்ஞ்ஞானம்

மாயப் பெருவெளி தன்னை லேறி
மாசற்ற பொருளினை எாய்க்கத்தேடி

—118: பாம்பாட்டிச் சித்தர்

வெளியைப் பற்றிக் குறிக்கும் சில மேற்கோள்கள் இவை 'வெளியில் இருத்தல்' என்பது தனிததிருககும் நிலையைக் குறிககும்—யாருட—எதுவும—இல்லாத நிலை இச்சொல்லுக்கு இரணடு கோணங்களில் பொருள கூறுதல் கூடும்:

ஒன்று, புறத்தே ஆரவாரம் மிக்க மக்கள் கூட்டத்தாரின் தொடர்பு இன்றி இருத்தல்.

"ஆத்ம ஞானப் பாதையில் செல்பவர்கள் கூடியவரை ஜனங் களுடைய சகவாசத்தைத் தவிர்த்துக கொள்ள வேணடும். ஜனங களோடு உரையாடலையும், கூடியிருத்தலையும் விலககவேணடும். ஜனங்களின் சகவாசததால் வீணபேச்சும, பாவமான கூற்றும், பேசவும் கேட்கவும் நேரும். உயரிய படிததரஙகளை அடைய விழைபவர்கள் மனைவி, மக்கள், நண்பர்கள் ஆகிய சகலரையும விட்டுத் தனித்து அல்லாவின் நாம தியானத்திலும் 'அவனைத் துதிததுப போற்றுவதிலுமே தன மனத்தைத தரிபபடுததுவா' இபபடித தனிததிருப்பதை 'சிலலா' எனக குறிப்பார்கள்.

"அப்துல் வாஹிது (ரஹ்) சொல்கிறுர். ஒருநாள் துறவி ஒருவா இருக்கும் பககமாகப் போன நான, 'அந்தத் துறவியிடம் தாங்கள் சதாவும் தனித்தே இருப்பது எனக்கு வியப்பாக உளளது. அதன் காரணம் யாது எனக் கேட்டேன? அவர் தனிதது இருப்பதன் இன்பத்தை நீ சுகித்திருந்தால் நீ தனிமையையே நாடுவாய். தனிததிருப்பது வணககங்களுக்கு சிரசாக இருக் கிறது' என்று பதிலளித்தாராம"[9].

ஜனங்களை வீட்டு நீங்குவதால் உணடாகும் நன்மைகளாவன முதலாவதாக இறைவனைப் பற்றிய வணக்கத்திலும, தியானத திலும் இருபபதற்கும், அவனைப் போற்றித் துதிக்கவும், மறைவான உலகங்கள் சமபந்தப்பட்ட அந்தரங்கங்கள் வெளியாகவும் வேறு பராக்குகள் இருக்கக்கூடாது. ஆதலால் ஜனங்களை விட்டு நீங்குவது நலமாகும். இரண்டாவதாக ஜனங்களோடு சேராதிருப் பதால் புறங்கூறல், கோள், பொருமை முதலிய தீமைகளை விட்டு பாதுகாப்படையலாம. வணககங்களைப பிறா கணடு மெசசு வதால் உண்டாகும் பெருமை உணடாக இடமிருக்காது"[10].

இவவாறு தரப்படுகினற விளக்கமெல்லாம் புறத்தில் தனித் திருப்பதன்—வெளியில இருபபதன—நனமைகளாகும்.

'இனிது இனிது ஏகாந்தம் இனிது' எனனும் ஔவையின் பாடல அடியையும் நினைவு கூறலாம.

இச் சொல்லுககுள்ள இரண்டாம் பொருளே தத்துவார்த்த மானது. 19ஆம் நூற்றுணடில் வாழநத பெரும் சித்தரான இராம லிங்க சுவாமிகளது தாரகமநதிரம் தனித்திரு, விழித்திரு, பசித் திரு எனபதை நமீக ரட்ட ள்ளவாகள' னைவ மஅறிவா

ஆன்மா தன்னைச் சுற்றியுள்ள தத்துவங்களை விட்டுத் தனித்த நிலையே தனிநிலை—வெளிநிலை, இந்நிலையில் வேறு ஒன்றுமே இருக்காது ஆன்மா மட்டுமே—'நீயும் நானுமாய ஏகபோகமாய், இருக்கும் சாயுச்சியநிலை.

> பட்டிப் பசுக்கள இருபத்தி நாலுள
> குட்டிப பசுககளோ ரேழுள ஐந்துள
> குட்டிப் பசுககள குடப்பால் சொரியினும்
> பட்டிப் பசுவே பணவற்கு வாய்த்ததே
>
> —2834: திருமந்திரம்

இருபத்தி நான்கு ஆன்ம தத்துவத்தையும், ஏழு வித்தியா தத்துவததையும்; ஐந்து சிவதத்துவத்தையும் இங்குத் திருமூலர் குறிக்கின்றார், இந்த முப்பத்தியாறு தத்துவங்களையும் இராமலிங்க அடிகளார் முறையே மலரோன் தத்துவம், மாலோன் தத்துவம், சுத்த தத்துவம் எனக் குறிக்கின்றார்.

> 'தஞ்சந் தருமலரோன் றத்துவமாம பூதங்க
> ளஞ்சும் பொறியஞ்சு மஞ்சறிவு—மஞ்செனுமோர்
> வாக்குமுத லஞ்சுமற்று மாலோன்றன் றத்துவமா
> மூககுங கலைமுதலா மோரேழு—நீக்கியப்பால
> மேவி விளங்குசுத்த வித்தைமுத லாதமட்டுந்
> தாவி வயாங்குசுத்த தத்துவத்தின்—மேவியகன்
> றபபா வருளகண் டருளாற் றமைத்தாங்கண்
> டப்பாற் பரவெளி கண்டு அப்பாலுக் கப்பாலும்
>
> —680—683 நெஞ்சறிவுறுத்தல்—திருவருட்பா

என வருதல் காண்க.

ஆன்மாவைச் சதசத்து என்பர். சத்தும் அன்று, அசத்தும் அன்று என்பது இதன பொருள். சார்ந்ததன் வண்ணம் பெறும் ஆன்மாவின் இயல்பு தனித்திருத்தல் அன்று. தத்துவங்கள் சூழ நின்ற ஆன்மா அவற்றின வயமாக நிற்கும். அந்நிலையையுடைய ஆன்மாவினால் தத்துவாதீதமாகிய இறையை அடைதல் இயலாது. அறிவிக்க அறியும் அறிவுபெற்ற ஆன்மா தன்னைச் சூழ்ந்த தத்துவங்கள் அனைத்தையும் தனித்தனியே கடக்கும். இவை அனைத்தும் கடந்த அதீதநிலையே—தத்துவாதீத நிலை என்பர். இதனையே 'தனித்திருத்தல் என்றும்—'வெளியிலிருத்தல்' என்றும் குறிப்பர்.

'ஆருறு தத்துவத்தும் ஆணவத்தும் கன்மத்தும்
மாருதெந் நாளும் மயங்காமற்—பேருக
நித்தனே நினமலனே நின்பதத்தில் ஆளமதுரை
அத்தனே சொக்க நாதா'

—30 குருஞான சம்பந்தர்—சொக்கநாதர் வெணபா

'ஐயாறும் ஆறும் அகன்று வெளிவெளியில்
மையிருளில் நின்றமனம் மாளவது இனி எககாலம்'

—224: எக்காலககணணி — பத்திரகிரியார்

'இல்லல்லா குநீயெங்க ளிருதயத் தெழுந்து வாழும
அல்லிரா பகலுமின்றி ஆருறுக் கபபாலநின ரேனே'

—201: ஞானபபுகழசசி

இவை முப்பத்தாறு தத்துவங்களைப் பற்றிய சில மேற்சோளகள.
இனி இவற்றைக் கடப்பது பறறிச் சில.

'தத்துவ மனைத்தும் தனித்தனி கடந்தேம்
தத்துவா தீதமேல் நிலையில
சிததியல் முழுவதும் தெரிந்தனம் அவைமேல்
சிவநிலை தெரிந்திடச் செனறேம்

—7: அருட் பெருஞ்சோதி அட்டகம்—திருவருட்பா

'தத்துவம் அனைத்தும் தவிர்த்துநான தனித்த
தருணததில் கிடைத்த தொனறெனகோ'

—8: இறைவனை ஏத்தும் இன்பம

இராமலிங்க அடிகளாரின இவ்வரிகள் 'தனித்திரு' எனும் சொல
லுககுத் தகக விளககமாகும.

'உரைமனம் கடநத ஒருபெரு வெளிமேல
அரைசுசெய் தோஙகும அருட்பெருஞ்சோதி'

—6: அருட் பெருஞசோதி அகவல்

'தத்துவா தீதத் தனிப்பொருள் வெளிஎனும்
அத்திரு அம்பலத் தருட்பெருஞசோதி'

—24. அருட பெருஞசோதி அகவல

'ஏரு நிலைநடு ஏற்றிஎன் றனைஈண்
டாருறு கடத்திய அருட்பெருஞ்சோதி'
—156· அருட பெருஞ்சோதி அகவல்

எனவே, வெளி என்பது முப்பததியாறு தத்துவமும் நீங்கிய தனி யிடம்—வெற்றிடம—எனனும் பொருள் தருவதாகும்,

'தனித்திருந்து சக்திசிவ பூசை பண்ணு
தனிமையுடன பாலமுதந்தானே கொளளு'
—200 இராயதேவர் பூஜாவிதி 200

'என்னோடு உடனபிறநதார எலலோரும் பட்டார்கள்
தன்னம் தனியே தனித்திருக்க மாட்டேன்டி'
—5: அருட் புலம்பல்—பட்டினத்தார்.

'ஆருமில்லா வேளையிலே
குத்துவிளக கேறறி—என கண்ணம்மா
கோலமிட்டுப் பாரேனோ'
—9: அழுகணிச் சித்தர்

'எழுந்திட்டா ரெல்லாரு மோடிப்போனார்
எனன செய்வேன் தனித் திருந்தே ஏங்கினேனே'
—29: கருவூரார் பூஜாவிதி

மேற்கண்ட அடிகளை மேற்போக்காகப் பார்க்கும்போது யாரோ ஒருவர் தமக்குத துணையாக இருந்த பெற்றோர், உற்றார், உடன பிறந்தார் முதலியோரை இழந்து தனித்து நின்று புலமபுவ தாகத் தோன்றும்.

அணடத்தில் உள்ளது பிண்டத்திலும், பிண்டத்தில் உள்ளது அண்டத்திலும் காட்டுதல் கூடும்,

அண்டத்தில் சிதம்பரத்தையும் பிண்டதகில் புருவ நடுவை யும் வெளி என்பர்.

சிற்சபை, விந்து, முச்சுடர், முச்சந்தி, சபாத்துவாரம், மணிமேடை, நெற்றிக்கண், கபாடம், சிதமபரம், அம்பலம் எனப் பல்வேறு சொறகளில் இராமலிங்க அடிகளால் குறிக்கப்பெறும் புருவநடுப்பகுதியைச சூன்யபபகுதி, மகாமேரு, மயானம், சாம்பவி முதலிய பெயாகளில் சிததாகள் குறிககினறனர். இது தான் வெளி.

எட்டிரண்டு

எட்டிரண்டு என்னும் சொல்லைப் பக்தி இலக்கியங்களிலும், சித்தா இலக்கியஙகளிலும் காணலாம்.

'கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ
றிட்ட வனபரொ டியாவருங் காணவே
பட்டி மணடப மேறறினை யேற்றினை
எட்டி னொடிரண டுமறி யேனையே'

—49: திருசசதகம்—திருவாசகம்

'எட்டிரன் பிரிவித் தெனைத்தனி ஏற்றிப
பட்டிமண டபத்தில பதித்தமெய்த தநதையே'

—566: அருட் பெருஞ்சோதி அகவல—திருவருட்பா

இவை பக்தி இலககிய ஆட்சி.

எட்டுடன் இரண்டு மாகி இருந்ததோர் எழுத்தைக்
காணா
விட்டதோர் குறியுங காணா வீதியின்றன விவரங்காணர்'

—7· நெஞ்சறி விளககம

'எட்டிரண்டு மொனறுமது வாலையென்பசா
இதுதானே பரிதிமதி சுழுனையென்பசர்

—25. கருவூரார் பாடல்

'எட்டிரண்டு அறிந்தோர்க்கு இடரில்லை குயிலே—மனம்
ஏகாம னிறகிறகதி யெயதுங் குயிலே

—86: இடைக்காடர் பாடல

எட்டிரண்டும் கூடியே இலிங்கமான தேவனை
மட்டதாக உம்முளே மதித்துநோக்க வலலிரேல்'

—485 சிவவாககியர் பாடல

'எட்டுரெணடு மறிந்தவர்ககே எய்துமெயதும்
இல்லாட்டா லிங்நூற்ருன் கிட்டாதபபா'

—51, இராமதேவர் பட்சினி

'எட்டிரண்டு மின்னதென்று மேழையறியாதபடி
வெட்டவெளிப் பேதையென் விட்டாய் நிராமயமே
—247 · நிராமயக்கண்ணி—மஸ்தான் சாகிப்

இவை யோக இலக்கிய ஆட்சி.

பக்தி இலக்கியங்களில

வரும சொல்லுணர்த்தும் பொருள் யோக இலக்கியங்களில் வரும பொருளின் வேறுபட்டது.

எட்டு என்னும் எணணைக் குறிக்கத் தமிழில் 'அ' என்னும் வடிவம் பயன்படுகிறது.

'எட்டேகால் லட்சணமே எமனேறும் பரியே' எனவரும் ஔவையார் பாடலில் எட்டு என்பது 'அ' என்னும் எழுத்தையும், கால் என்பது 'வ' என்னும் எழுத்தையும் குறிப்பது ஆதலின் எட்டேகால் லட்சணமே என்றால் அவலட்சணமே என்னும் பொருள உணர்த்தி வருவது காணத்தககது.

எனவே எட்டைக் குறிப்பது அகரம், இரண்டைக் குறிப்பது 'உ'கரம்—இவ்விரணடு எழுத்தோசையும் சேர 'ஓ' கரம் பிறக்கும். ஓகரத்தை உச்சரித்து வாயை மூடும் நிலையில் மகர ஒற்றோசை (ம்) பிறக்கும். எனவே அஉ (ம்) சேர 'ஓம்' ஆதல் தெளிவு. சமய இலக்கியங்களில ஓம் என்பதைப் பிரணவம் என்பர் ''இதன பெருமையைக் கூறுமிடத்து ஆலம விதையில் இருந்து சாகோப சாகைகள் தோன்றுமாறு போல இதில் மந்திரம், புவனம் முதலிய சராசரங்கள் எலலாம தோனறும்'[11] இது இரணடு வகைப் பெறும், ஒன்று தூல பிரணவம், மற்றொன்று சூக்குமப் பிரணவம் ஹரீம்' என்பது தூல பிரணவம. ஓம் என்பது சூக்குமப் பிரணவம் அகரம் பிரம்மாவையும், உகரம் விஷ்ணுவையும், மகரம் ருத்திரனை யும குறிக்குமெனபாரும், அகரம் விஷ்ணுவையும், 'உகரம் ருத்திரனையும், மகரம் பிரம்மாவையும் குறிக்குமென்பாருமாக, சைவ, வைணவ சமயிகள் இப்பிரணவப் பொருளியே தம்முள் மாறுபடுவார்கள் அகரம் பிரம்மத்தைக் குறிதது நிற்றலால் அந்தப் பிரம்மத்தை விஷ்ணுவென்றும் சிவனென்றும் தத்தமக் கிஷ்டமான பெயர்களால்வழங்கும் இருவர் குறிககோளும ஒன்றே, பிரணவ சொரூபத்தை இது எனறு எடுத்துரைத்தல கூடாது எனறு சாததிரஙகளெலலாம் கூறுதலின் உண்மை யுணர்ந்த ஞானி களுக்கே அதன பரப்பெல்லாம் புலனும். மந்திரங்களுள் பிரண வமே சிறந்ததும் மோக்ஷ சாதனமாயுள்ளதும், முண்டகோப நிஷததில் பெபிரணவமாகிய ஓம் காரத்தைக் குறித்து

சொல்லப்பட்ட ஒரு வாக்கியம் 'ஓம' என்பது வில்லு. ஆன் பாணம், பிரமமே குறி. இடையரு தியானத்தினுலேயே குறியை யெய்தல் கூடும். குறியில புதைந்த பானம் போல ஆன்மா பிரம்மத்தில புதையும்'பிரணவம்என்பதன பொருள்அழியாதது. அழிந்ததும், நிகழவதும் வருவதுமாகிய முக்கூறுபட பிரபஞ்ச மெல்லாம் ஓமெனும பொருளே,' அகரம் ஜாக்கிர உலகமாய் யாவரும் வசித்தற்கிடமாக உள்ளது. இதனை உணர்பவன் இஷ்டமோகத்தை அடைகிருன் உகரம் சொப்பனமாய்ப்பிரகாச மாகவுள்ளது. மகரம் சுஷீப்தியாய் முடிவிடமாக உள்ளது என்பது மாணடுககிய உபநிடதக கூறறு.

ஓம என்னும பிரணவமே இவ்வுலக, உயாத தோற்றத்தின் மூலமாய் நின்றது என்பது சமயத துறை சாாநதாா வாதம எனவே 'எட்டிரணடு அறியாது' எனறல உலகம—உயிர்— உயிருள் உயிா இவற்றை அறியாது, அலலது சிவன்—சீவன் ஆகியவறறின உணமையறியாது, அலலது படைததல, காததல் அழித்தல அனைததும ஆற்றும் பரம்பொருள பற்றியறியாது என்னும பொருளகள பல கூறுதல கூடும் இந்த விளககம் பக இலககியஙகளுககுப பொருநதும.

ஆனுல், சமயமத ஆச்சாரஙகளைக் கடந்த சிததர்களின இல கியங்களில யோகம, வைத்தியம, வாதம் ஆகிய துறைகளில இ சொற்கள வெவவேறு பொருளில கையாள்வது காணலாம்.

**யோக மார்ககததில**

யோக மாாக்கத்தில், வாயுக்கள் முககிய இடம் பெறுகி றன. இவை பதது என்பதை அனைவரும் அறிவா. இவறற் இன்றி யமையாதன எட்டாவது வாயுவாகிய தனஞ்சயனு இரணடாவது வாயுவாகிய பிராணனும ஆகும். தனஞசய எனபது உடலைவிட்டு உயிர்ககாறறு பிரிந்த பினனரும இரு உடல அழியுமபோது உடலை விட்டு நீஙகுவது பிணத் எரிககும்போது கபாலம வெடித்து வெளியேறும் காற்று இதுவே இககாற்று உடலுள் இருககுமவரை உடலுக்கு அழிவிலலை. ஒ கும் உயிாக்காற்று தளிர்க்க சாய்ந்த உடல் மீணடும் உயி தெழும. வேனில காலத்தில் காய்ந்ததுபோல் காட்சியளிக சில தாவர வகைகள் மழைக் காலததில தளிாத்தல் போ ஆகும் இது

இரண்டாவது பிராணன என்னும் உயிர்க்காற்று. மூக்கு நுனிக்கும் நாபியின மேற்புறத்திற்கும இடையிலாட இயங்கிவரும் மினவிசையும் சார்நத இயல்பும் பொருந் ப

காற்றினம் சாதாரணமாகப் பிராணுயாமம் என்னும் சொல் லுக்கு சூரிய, சந்திர கலைகள் வழியாக ஓடிக்கொண்டிருக்கும் காற்றைக் கட்டுவது என்று பொருள் கொண்டு மூச்சுப் பயிற்சியை வலியுறுததுகினறனர். உண்மையில் பிராணுயாமம் என்பது தசவாயுககளில் ஒன்ருகிய பிராணனைக் கட்டுதல என்று பொருள் படும.

இதனைச் சித்தர்கள் வேகாக்கால் அல்லது சாகாக்கால் என்ற பரிபாஷையில குறிப்பார்கள்.

சாகாத தலையறியேன் வேகாத காலில்
தாமறியேன போகாத தண்ணீரை யறியேன்'

—8 : முறையீடு - அருட்பா

'சாகாத காலது தானறியாய் மக்காள்
சமுசயங காளனெண்ணுதே சனனமில்லை'

—23: சட்டமுனிவாத காவியம் 1000

'சாகாத கால்தானே சவுக்காரந்தான'

—21· அகஸ்தியர் பரிபாஷை 500

'வேகாத காலது சாகாக்காலு
வெந்தக்கால அண்ணமெல்லாம் விருப்பமாச்சே'

—144 : யாகோபு சூத்திரச் சுருக்கம் 155

இவை சில எடுத்துக்காட்டுக்கள். இநதப் பிராணுயாமத்தைத் தான் 'கால் பிடிததல்' எனற சொலலால குறிப்பர்.

'காலைப் பிடித்துமூ லப்பிரா ணன்றனைக்
கட்டிவைத் தருள்பு ரியவும்'

—10; தொகைநிலை - மஸ்தான் சாகிப்

'பாசங் கிளைந்து பதியி லிருந்துகொண்டு
பேனிய காலைப் பிடித்திரக்க நேசமுடன்
நாமிருவ ருஙகூடி நாதாந்த ஞானத்தைத்
தாமொருவ ஞயிருக்கத் தங்கு'

—46: பட்டினத்தார்

எனவே எட்டும் இரண்டும் என்பது யோக மார்க்கத்தை பொருத்தவரையில் இவ்விரு வாயுககளின இயல்பறிதல குறிகக பெறும்.

வாதத்தில்'— வாதத்தைப் பொருததவரையில இவை முறையே அப்புவையும உப்புவையும் குறிசகும. முன்னர் கூறியது எடடு எனபதற்கு 'அகரமும' இரணடு என்பதற்கு 'உகரமும்' குறிப்பது மரபு. எனவே வாததில் அகரஉகரம் என்பது அப்புவையும உபபுவையும குறிப்பன அப்பு என்பது அமுரி உப்பு என்பது தசதீக்ஷை பெறற காரம. இவறறை முறையே சாரம எனறும் காரம் குறிபபா. ரஸவாத முறைகளில இக்கார சாரததைப பயன்படுததுவா எனபதைச் சித்தர் நூல களில காணலாம.

வைத்தியததில:— வைத்தியத்தில் வரும் எடடு என்பத அகரம் என்ற பெயர் பெற்ற 'பூரத்தையும', இரணடு எனபது உகரம எனற பெயர் பெற்ற 'வீரததையும் குறிககும் இவற்றை வைத்திய முறைகளில் மணியாகக் கட்டிப் பயன்படுத் துவா. மணிமந்திர ஔஷதம எனனும் வழக்கில மணி என்பது வீரம், பூரம முதலியவற்றில இருந்து தயாரிபபதுவே.

இவ்வாறு எட்டும் ரெண்டு எனனும சொற்களுக்குப் பக்தி யோக, வைத்தியவாத நூலகளில ஒவவொரு வகையான விளக்கம தருதல கூடும.

**வேறுசில:**— இப்படியே எந்தக் காலத்திய சித்தராக இருந்தாலும் அவர்களின பாடலகளில மிகுதியான பரிபாஷை இருககும. சிததாகளுக்கு ஓா இலக்கணமே பரிபாஷை ஆட்சி எனலாம் இததகைய சொற்களுக்குப் பொருள காணபது எனபது ஓா இனிய அனுபவமாகும. சிததா இலக்கியஙகளில அதிகமாகக் காணலாகும சிலவரிகள ஸூஃபி இலக்கியஙகளில் இடம பெறறுள்ளன. அவற்றில சில வருமாறு

'அன்பத்தோ ரட்சரம் யறியநீ சொல்லடி சிங்கி—அது
வஞ்ச மகார நடுசசுழி மூனறுமே சிஙகா'

—40 ஞானரத்தினக குறவஞசி

'இலலலலா குநீயெங்க ளிருதயத் தெழுந்துவா ழும்
அலலிரா பகலுமின்றி ஆறுறுக் கபபால நின்றேனே

—201: ஞானப்புகழ்சசி

'உச்சிக்கு நேரே கிழக்கே—நந்த
 மூருக்கு மேலே பெருவெளி தன்னிற்
பச்சைப்பு ருவந்து மேயும்—அதைப்
 பாங்குடன மெலலப் பழகிப் பிடித்துக்
கச்ளசக் கயிற்ருலே கட்டிக்—கலி
 மாவுடன் தேனைக கலந்து புகட்டி
அச்சமில் லாக்கூட்டி லடைத்து—நநதம்
 ஆதியை நனருகக கணடு கொண்டேனே

—ஞான ஆனந்தக் களிப்பு

'எண்சா ணுயரத் திருக்கும் பனங்க
 ளிறக்கி யுளளேன் மனக்கண்ணே

—கீர்த்தனைகள்

கருவுற்ற எழுததை யுன்னிக் கமலத்தி னழுக்கை நீக்கி'

—83. ஞானமணிமாலை

'பட்டிப் பசும் பாலைப் பக்குவத் துடனகாலைக்
கட்டிக கறந்தளித்தார் கணணே பராபரமே

—59: பராபரககணணி

'மூலாதா ரத்துன் மூனைகொண் டுயர்ந்தெழுந்த
காலாற் கனலெரிததாள கண்ணே பராபரமே

—63; பராபரக்கணணி

தனனை யறிந்து தவம் புரியாத் தன்மையினுற
கன்னெஞ்ச ஞனேனென் கணனே ரகுமானே

—96; ரகுமான் கணணி

'தூஙகாது தூங்கிச்சிவ யோகநித் திரைவந்து
 தூங்கிடற் கருள புரியவும்
சுடருண்ட காபபூர உணடைபோல் நினறுடல
 சோபிகக அருள் புரியவும'

—3. தியானநிலை

'மூலமுத லாறுவரை தாண்டிமேற் ருண்டவு
 முயறதிதந தருளபு ரியவும

—3. காடசி நிலை

'அஙகென்று கும்பித்து வஙகெனறு நேசித்து
தடஙகெனறு னருள புரியவும

— 6. தொகை நிலை

முப்பாழ் கடத்திவைத தப்பால் நடத்துமுறை
முறையாக அருள் புரியவும்

— 10: பொறைநிலை

காற்றைப் பிடிக்கவும் கரசத் தடைககவும
கட்டிவைத் தருளபுரியவும

— 9· வளி நிலை

மேலே காட்டப்பெற்றவை சூஃபி இலக்கியங்களில் வரும சில வரிகள். இவவரிகளை மட்டும கொடுத்து எந்தச் சித்தர் பாடல எனக் கேட்டால, சித்தர் பாடல்களையெல்லாம் கரைத்துக் குடித்துக் சொப்பளிக்கும் ஆழநத புலமையுடையவாகளால்கூட இவை சூஃபிகளுக்குச சொந்தமானவை எனச் சொல்லச சறறு நேரம் ஆகலாம்.

இந்த அளவிற்குச சூஃபிகள் தமிழச் சித்தர்களுடன் கலந்து விட்டவர்கள. தமிழ்ச சிததர்களின் பாடலகளைப படிதது ஆழ்ந்த அனுபவம் பெற்றமையாலேயே இந்நிலையை இவர்கள் பெறறா களோ என எணணத் தோன்றுகிறது.

சந்த இனபம்:- பீா முகம்மது அப்பா அவர்களின் பாடல் கள் சந்த இனபம் மிக்கன. அவறறில் மூனறைக காணபோம்

{ நேர் = — தேமா = — — இக குறியீட்டால
{ நிறை = பப புளிமா = ப ப — விளககுக.

1 ''இறைவா உனக்கு நிகரா ரெவர்க்கும்
இனிதா எழுந்த முதல்வா
மறையா தனைத்து மனமீ திலுற்ற
வடிவே சலித்துன னடியேன
அறவே மெலிந்து முனையான் மறந்தும
அலைந்தே னுவநது னருளால
குறையா தசெலவங் தருவாய் நீயென்றுங்
குறையே துமற்ற பொருளே''

—ஞானப்புகழச்சி

மெய்ஞ்ஞானப் பஃறொடை—விணணப்ப—மாலையாக 109 பாடலகளாக விளங்குகிறது.

அஹதத்து மாலை 55 பாடல்களால் அஹதே ஹீ ஹீ ஹீ என முடிவது.[47] அஹதான = ஒருவனுன அல்லாஹவை ஞானப் பாககளால் பாடுவதாய் அமைந்துள்ளது. பீரப்பாவின் ஞான நடனமும, ஏட்டுப் பிரதியாக இருககும் ஞான விகட சமததும் ஹீ ஹீ ஹீ என முடிதல் இவண காணக.

உஹதத்து மாலை—''றசூலுல்லாவே'' என 48 பாடல்களில் ஆதியின் தூதர் அஹமது றசூலிடம் ஞானம் வேண்டுவதாய் அமைவதாம்

ஞானக்கண் மாலை—ஞானம் பகரும் கொச்சகம் 3+கலி விருத்தம் 108 கொண்டு 'கண்மணீ'' என ஈற்று முடிவுறுவது.

ஞானப்பெண் மாலை—'ஞானப் பெணணே' என ஈறறு முடிநது 81 பாடலகளால் ஞானம் கூறுவது.

**பாடல்களில் ஒரு கணணோட்டம்**
**[கவியினபம்]**

**சரியை—கிரியை—யோகம்—ஞானம்—விளக்கம்**

ஞான மாாக்கததின் (சூஃபித்துவத்தின்) பாதையை ஆன்மாக் கள் இறைவழிபாட்டில பக்குவம் அடைய — அபபயிற்சியினைப் பெறுவதற்கு நானகு நிலைகளை வகுப்பர். அவைகளை சூஃபித்துவத் தில் ஷரீஅத—தரீக்கத்—ஹிக்கீகத்—மஅரிபத் என்பர். சிததர்கள் இதனை சரியை—கிரியை—யோகம—ஞானம் என்பர், வடமொழி யாளா தாசமாாககம்—சற்புத்திர மார்க்கம—சகமார்க்கம—சன மார்ச்கம என்பா. இதனை சலோகம்—சாமீபம்—சாரூபம்—சாயுச் சியம் என்பதும் உண்டு சிததர் கணத்தில கூறப்படும இத்தவ நிலைகளுககும் சூஃபித் தத்துவததில் கூறப்படுவனவற்றிற்கும ஒப்புமை உணடு என்று கூறுவாரும் உணடு இங்ஙனம கூறுதல் எங்ஙனம் பொருந்தும என்பது பற்றி எளிதில் கூறிவிட இயலா. இரண்டு தததுவார்தத முறைகளையும் ஒப்ப நோக்குவதற்கு இரு துறையிலும் ஆழ்ந்த அறிவு இனறியமையாதது. இரண்டு துறை களிலும் பயிற்சியுள்ளோர் இவற்றை ஆராயப்புகின ஞாலம் பெரிதும பயனடையும் எனில் மிகையாகா.

ஷரீஅத்—தரீக்கத்—ஹக்கீகத் மஅரிபத் இவற்றினை விளக்க முறையே பால்—தயிர்—வெண்ணெய்—நெய் எனறு விரிப்பா

அரும்பு—மலர்—காய்—கனி என்றும் விளக்குவர். கப்பல்—கடல்—சிப்பி—முத்து பெறல் எனவும் காட்டுவர். புலவர் ஞானி கலேமானுல் காதிரிய்யி, சரியை—தோல்; கிரியை—சதை; யோகம்—எலும்பு; ஞானம்—மூளை என்றும் (11—திருமணி நடன அலங்காரப் புஞ்சம்) மண், தண்ணீர், ஹவா, நெருப்பு என்றும் (112—திருமணி நடன அலங்காரம்). நபிசொல் நபிசெயல, நபியின் ஹால், நபிஸிற்று(113)என்றும் விளக்கம் தருவது அறியலாம்

பஞ்ச பூதங்களின் நிறங்களை
மண்ணினிறம் வெண்மையாம்
தண்ணீர் நிறம் சிவபபாம்
காற்று நிறம் பச்சையாம
கறுப்பு நிறம் நெருப்பாப் பாரு (121)

(திருமணி நடன அலங்காரம்)

என விவரிக்கிறார். இதனை பிஸ்மில் குறமும்[48] விளக்குதல் காணலாம். (மண்ணின் நிறத்தினை, விதது முளைத்தால் வெள்ளையாக முளை தெரிவதாலும், தண்ணீர் விட்டு இலை வளர ஆரம்பித்ததும் ஏறபடும் சிவப்பு நிறத்தாலும், காற்று வீச வீச அதன் நிறம் நாளடைவில் பச்சையாக மாறுவதாலும், நெருப்பிலிட்ட பொருள் கறுப்பாக மாறுவதிலிருந்தும் பஞ்ச பூதங்களின் நிறங்களை உணரலாம் என எடுத்துக் காட்டுவர்).

பஞ்ச பூதங்களின் மஅரிபா விளக்கங்களை — அதன் விரியும் பகுப்பினையும், பீரப்பா மஅரிபத்து மாலையில 150 முதல 167 வரையிலுள்ள பாடல்களில் விளக்குகிறார், ஞானி கலேமானுல காதிரி.

மண்—மண்ணிரல்—அபூபக்கர்—வாய்—ஜிபுரீல்
தண்ணீா—கண்—உமற்—கண்—மீக்காயில்
காற்று—நுரையீரல்—உதுமான—மூக்கு—இசிறயீல்
நெருப்பு—பித்து—அலி—காது—இசுறயீல்
ஆகாசம்—மெய்—அஹ்மது—சுல்தானஸீற்—நூறுயீல்

எனும் விளக்கத்தினை திருமணி நடன அலங்காரப் புஞ்சத்தில் 114 முதல் 117 வரை விவரித்துள்ளார்[49].

ஏழு நரகம்; எட்டு சுவர்க்கம? தலைமை மலக்குகள ஐவா? எவைகள், யார், எவா எனின அதனை,

''ஏழு நரகமுண்டும் எட்டு சுவர்க்கமுணடும்
வாழு மலக்கை வருண்டும் வகுத்து அறிந்து பாரு''

(தி, ந அ.பு. 187)

என்று விட்டுச் சென்றுள்ளார். மேலும், 'உனஞேடு இருக்கின்றன' என சூக்குமம் கூறியுள்ளார ஞானததுறை போக்கிய வரே நரகமும் சொாக்கமும் நம்மோடு இருப்பதனைக காட்ட இயலும. ஐந்து மலக்குகள் பஞ்ச பூதங்களாக அமைவது. (மலககுகள் ஐவர் முன் பத்தி காணக.)

ஏழு நகரங்கள்: ஜஹன்னம், லளா ஹூத்தமா, ஸசர் ஸக்கர், ஜஹீம், ஹாவியா, என்பவைகளேயும், எட்டு சுவர்க்கங் களாக ஜன்னதுல் பிர்தெளஸ, ஜன்னது அதன ஜன்னதுல் மஃவா, ஜன்னதுன் நசம், ஜன்னதுல் குல்த தாருஸ ஸலாம, தாறுல ஜலால், தாறுலகறுர் என்பனவற்றினேக் கூறுவா.

உவமைகள

புலவர் ஞானியின் ஞானப் பாக்களில் வரும் அழகிய உவமைகள் சில.

''ஆமையதிஞட்டம் ஒப்ப''[50]—வாஹிதிய்யா மாலே 54
''ஆமையது நாட்டம போல''[50]— ''

''அணடத்தை மச்சமது
அன்பாக நோக்குமது போல'' — திருத்தோத்திர குருமாலே 31

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ''நலலாளேத் தேடியே'' நாய் போல'' | — | '' | '' | '' | 30 |
| ''மீன் நீர் தேடுவது போல'' | — | '' | '' | '' | 30 |
| ''தேனீ போல'' | — | '' | '' | '' | 37 |
| ''பாசி போல'' | — | '' | '' | '' | 16 |
| ''உலேயல் மெழுகது போல'' | —றஹ்மான் கணணி | | | | 41 |

''ஆட்டி வருஞ் செக்கில்
நெய் போல'' —திருமணி ந.அ.பு. 193

''எள்ளாடும் செக்கில நெய் போல''

—மெய்ஞ்ஞானப் பஃறொடை 60

| | | |
|---|---|---|
| ''உலையில் மெழுகாய்'' | —ஞானப் பெண் மாலை | 53 |
| உலையிட்ட மெழுகு'' | —வாஹ்திய்யா மாலை | 11 |
| ''கையில கண்ணாடியைப் போல'' — | '' '' | 42 |
| ''பஞ்சதுவே வன்னியினுட் பட்டது போல'' | | |
| ''கஞ்சியில இட்ட உப்பது போல''— | '' '' | 44 |

தன்னையறிதல்

''*தன்னையறிதல்*'' *என்பது ஞானத்தின் உயர் நிலை—இறுதி நிலை. தன்னையறிந்தவன பேரின்பம் பெறுவான். இதனைப் பரிந்துரைக்காத ஞானிகளே இல்லை. தன்னை அறிய ஆங்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் தன்னை அறிந்த மாத்திரத்திலேயே நிர்மலமாகிவிடும். தன்னை அறிவது என்பது நம் மனததுக்குள்ளேயேயிருக்கும் சோதியை உணர்வது ஆகும். எனவே தான'', தன்னையறிந்தவன் 'தன் தலைவனையறிவான், என்றனா. இதனை உணர்த்துமாறு,*

தன்னையறிவது பறுலாம் தலைவனறிவது சுன்னத்தாம்
முன்னே நாமிருந்த வகை முற்றும் நீயறிந்து பாரு 83

பிறக்குமுன்னேயிருந்த பிரிவை யறிந்திவ்வுலகில்
இறக்குமுனனே தெளிந்தா லிஙகுதனனையறிவாய் பாரு 84

தன்னையறிந்தாலலலவோ தலைவன் தனையறிவான்
மணணில தனனையறிந்த பினபு மெளஜ் தெல்லா மறிவான்
பாரு'' 85

காணலாம்.

சரக்கலை

*புலவர் ஞானி சரக்கலை ஓர்ந்துணர்ந்தவர் என்பது அவர் களின பாடல்களால் பெறப்படும். எடுத்துக்காட்டாக சரக்கலை தத்துவங்களை திருமணி நடன அலங்காரப் புஞ்சம 217 முதல் 239 வரை கண்ணிப் பாடல்களால் எடுத்தியம்புகிறது, பீரப்பாவின் மெய்ஞ்ஞானச்சர நூலினை நினைவூட்டுகிறது. மேற்குறிப்பிட்ட பகுதியும் மெய்ஞ்ஞானச சர நூலும் ஒப்பாய்விறகுரியது. மேலும் பல பாடல்களில் சரக்கலைத தததுவங்களை இழையோட*

பச்சைப்புரு? கயிரீராறு?

''பச்சைப் புருவதனைப் பாங்காய்ப் பிடித்திருக்க
கச்சை கயிற்ராறைக் கமலமதி லொன்ருககி
அச்சமில்லா தேரெழுதுதி னறை திறந்தகத்துள் வைக்க
நிச்சயததை யருளும் எஙகள நீதி றசூலுலலாவே''

(உஹதத்து மாலை 25)

மேலும் இதே கருத்தமைந்த இப்புலவரின் 'பச்சைப் புரு ... மகனே' (திருமணி நடனவலங்காரத் தாய் மகனேசல் 1) என்ற பாடலையும் காணலாம. இவ்விரு பாடலகளோடு, பீரப்பாவின ஞான ஆனந்தக களிப்பினையும்

''உச்சிக்கு நேரே கிழக்கே —நந்த
 முருக்கு மேலே பெருவளி தன்னிற்
பச்சைப்புரு வநது மேயும் — அதைப
 பாங்குடன மெலபை பழகிப் பிடித்துக்
கச்சைக கயிற்ருலே கட்டிக் — கலி
 மாவுடன தேனைக கலநது புகட்டி
அச்சமிலலாக கூடடிலடைத்து — நநதம்
 ஆதியை நனருகக் கண்டு கொணடேனே!''

பச்சைப்புரு?; கயிறு ஈராறு (பனனிரணடு) ஓரெழுதது?—சூஃபி ஞான பரிபாஷைச சொறகள (Gode words), ஞானியாா பாடல் களில மறை பொருட சொறகள் பற்றி கணடோம் இதன பொருள அறிவதும கருத்து விளஙகுவதும எளிதல்ல அது ஒரு சுவையான ஆராய்ச்சி. சூககுமம விளங்கின பெரும் புதையல் பெறறவாறு பேரினபப்படுவா.

மேறகுறிபபிட்ட பாடலின கருத்தினைக காணபோம். சரககலை தததுவததினை (பிராணாயாமம) நுழைந்து நுடபமாக பாடபபெறற பாடல இது இநத பசசைபபுரு காறறு (சுவாசம) மனித நாசியில இநத சுவாசம 12 அஙகுலம் வெளியே போகினறது. 8 அஙகுலம்தான உளளே செல்கினறது. எனவே சாதாரணமாக 4 அங்குலம வீணாகிறது. சிததர்கள் இநத வாசியினை பக்குவப்படுததி பலன கணடனர். எனவே இவண அந்த பனனிரெணடு அஙகுல சுவாசத்தினை பக்குவித்து (சுவாசத்தினை கயிருக உருவகபபடுததியுள்ளார்.) ஒன்ருக்கி கமலத்திருததி அலிபென்ற (அலலாஹு) ஓரெழுததில இருதத— நிசசயததையருள வேணடுகிருா ஞானி சுலைமானுல காதிரி.

பீரப்பா அந்த சுவாசத்தினை பழக்கிப் பிடித்து கலிமாவி ஞுடன் கலந்துதேனைக் கமலத்தினுள் பூட்டியடைத்துப் பயின்றால் நன்ருக ஆதியைக் கண்டு கொள்ளலாம் என்கிறுர். மூச்சுவிடுமுன் சித்தனைக் காணலாம், காண்பதுவே இயலும் எனபது சித்தர் கொண்ட தத்துவத்தோடு ஒப்பாய்விற்குரியது.

பாம்பாட்டி சித்தர் இறைத் தத்துவத்தினை 'ஒருகாலும் விண்டிடார்கள், விண்டவர்கள் ஒரு காலும் கணடிடார்கள்'' என்கிறுர். சுலேமானுல் காதிரி ஸ்ரீதனை 'கணட பொருள் விண்டிடார், அ ண ட ம து கணடிடார்' (திருத்தோத்திர மாலே 18) எனப் பாடுகிருர்.

'அவனன்றி ஓரணுவும் அசையாது' எனும் மொழியினை உஹதத்து மாலே 23இல பயன்படுத்திய பாங்கையும் காணலாம். பாடல் = ?!

''கை காலில்லாத வேடன்
காணும விலலம்பில்லாமலே
துய்யவுரு மானை யெய்து வாட்டின சீா தலைமேல் பாரு''

(திருமணி நடன அலங்காரப் புஞ்சம் 160)

''கை காலுமற்ற ஒரு வேடன்னிதம்
காணரிதாகிய விலலுமிலலான்
துய்ய ஒருமானை எய்து நஸீற் வைதது
பையவே பார்த்து நில ஞானப் பெண்ணே''

(ஞானப் பெண மாலே 62)

இந்தப் பாடலுக்கு என்ன பொருள்!!

எல்லா இறைவனுக—'நீயாக' அஹதத்து மாலே 22வது பாடல பாடுகிறது.

'கஞ்சாபுகை பிடியாதே—வெறி .....படியாதே' (கடுவெளிச் சித்தா) பாடலோடு வாஹிதிய்யா மாலே 61 'கஞ்சாவுட........ தீனே' எனும் பாடல் ஒப்ப நோக்குதற்குரியது.

உடல

எள்—எண்ணெய் = உலகம்—இறை

இறைவன் அங்கு இங்கு எனுதபடி எங்கும் ஒளியாக இருக் கிறுன். நம்மோடு இருக்கிறுன்—ஒன்ருகி வேருகி நிற்கிறுன். இதனை மிகச் சிறிய எள்ளினுள் எவவாறு எணணெய் மறைந்து

இருக்கிறதோ அதுபோன்று மறைந்தும் மறையாததுமாக இலங்கும இறையின் இனிய வல்லதன்மையினை விளக்குகிருா இதனை பாம்பாட்டிச சித்தர் 'எளளிலெண்ணெய் போலவுயிா எங்கும நிறைநத ஈசன' என்றும, இடைக் காட்டுச் சித்தர் ''எள்ளிற்றைலம போலெங்கு நிறைநத பொருளை உள்ளிற்று தித்தே யுணாவடைநது போற்றீரே'' என்று பாடுகினறனா;

''என்னுள நிறைநது மிகுநதது போல
எனனுள நிறைநதவனே''—ஞான நடனம்

—(கோட்டாறு செய்குந் தம்பி ஞானியார்)

''எலலாவுயிர்க்குள் நிறைந்தது எப்படி மயிலே
எள்ளுககுள் ளெண்ணெய போலாகி
யிருக்குமாங் குயிலே''

—ஞானக குயில் மயிலேசல

குஞ்பி சலேமானும் ''எள்ளாடும் செககில் நெய் போல எங்கும் சோந்துஞ் சேராது நிற்கும் ஹககான மெய்பபொருளே என மெயஞானப் பஞ்ரெனடயிலும், இறைத் தனமையினை தத்துவ விததகததினை,

''உளளாகி வெளியாகி உற்ற பொருந்தாணுகி
விளளாத வீட டிலுறை விளக்கொளிவே உட்கருவே
எளளாடுஞ செக்கினெயபோல எவ்விடமு ஆடிநினற
களளறையை யெற்கருளும் ஹாமீம றசூலுலலாவே

(உஹதத்து மாலை—13)

என விரித்துரைக்கிறுர்.

நாநீ

''நானென்றும் நீயெனறும் நடுவேயிருந்தெனது, நாட்டம் தறிந்தவனு நீ'' என ஞானப்புகழ்ச்சி இசைக்கிறது. புலவா ஞானி சுலேமான்,

நானெனறும் நீயென்றும நாவினுற பேசுவாா
நானெனற பொருளறிகிலாா
தானெனற பொருளதைத் தாரணியின மீதிலே
தர வேணு மிது சமயமே
தாஞக நினறகுரு தனனிதயம் தன்னிலே
தனதாக அருள புரிகுவீா.''

(திருததோத்திர குருவடி மாலை 24)

என்றும்,

> ''நானெனுஞ் சொல நீயொளிய நாடு பொருள் வேறில்லை
> மெய
> கோன் பொருளைக் காண வருள குருவே றஹ்மானே''
>
> —றஹ்மான் கண்ணி—31

என்றும்,

> நீயொழிய நானில்லை நிச்சயங் கண்டேயிருக்க
> மாயிலலாக் கபபல் நிலை பகர்வாய றஹுமானே
>
> (றகுமான கண்ணி—40)

என நிச்சயம் பகர்கிறார்,

உன்னுடைய 'நான் என்பதை நிர்மூலமாக்கி அல்லாஹுவின் 'நான் என்ற பண்பை உணர்ந்து கொள்ளல் 'ஸிபாதத—பாஸிலிய்யா' ஆகும். இது ''முராகபா'க்களில ஒன்று, நான் என்பது அகப்பற்று — இது அகங்காரம் என்ற நான, கெட்ட இடத்தில பரவொளி தோன்றும் என்பதனை ஞானியார்கள மரபாகப பாடிப் பரவுகிறார்கள்.

இறை தத்துவத்தினை புலவர் ஞானி பலவாறாக பணபுற பாடியளித்துள்ளார். அவற்றுள் சில அழகுறு அடிகளாக அமைந்துள்ளன. அவைகள்,

> ''எங்கு எங்குந் தானாகி என்னிலும் பொருளாய்
> இலங்கு மெய்ப்பொருள்'' (தி. தோ மா. 41)
>
> இருளிலே வெளியாகி
> எங்குந் தானாகி இலங்கும
> மெய்ப்பொருள்'' (தி. தோ. மா. 22)
>
> ''அல்வலஹு தாயிருந்தவனே
> யரூபப் பொருளே''

போன்றவைகளாகும்.

ஞானியின் பாடல்களில் பின்வரும், சிவமயப் பொருள் சிவான அருள் (நிராமயக் கணணி 44) சோம சுந்தரப் பொருள் (நி.க. 17); நமசிவ (நி.க. 35); திருக்கூத்து (நி க 37) சிவ எனக் கணமணீ (ஞானக்கண்மாலை 104) சிவஞானம் (ஞா.க மா 104) சிவஞானி (ஞா.க.மா. 105), சிவமுத்தாரம் (ஞா.க;மா. 106),

சிவபத்தராம் (ஞா.க.மா. 106). சத்தியான சிவப்பொருள் 100 ஞா க.மா. சிவஞான சிற்பரம(34வாஹிதியயா மாலை); நந்திபதம (21 உஹதத்து மாலை) சத்திசிவன் (ஞானப்பெண் மாலை 2): சத்தியாம சிவம், சிவமான பொருள(61 ஞானககண மாலை);சத்தி சிவமானவனே (மெய்ஞ்ஞானப் பஃறொடை) போனற இந்தச் சொற்றொடாகள் ஆயவுசகுரியன.

சுமமாயிரு

சும்மாயிருக்கின்ற சுகததினை ஞானிகள் விரும்பி ஏற்றனர் அதனின் சுகம் பெரிது எனக் கண்டு அறிவுரை பகர்ந்தனா. "சொலலுமமெய்ஞ்ஞானசசுகக்கடலையுணடுயான சும்மாயிருக்க வருள்வாய" எனககுணங்குடியார் அருள் வேணடிய தனமையினை காணபிக்கினறோம், தன்னில் சும்மாயிருச்சினற சுகமதே மோனம் ஞானத்திற்கு மோனம வேணடும்; புலவா ஞானி காதிரியும்.

> "சொலலாம லொனறையும் சுமமாவிருககினற
> சூட்சமது தாருங் குருவே
>
> (திருத்தோததிர மாலை 9)

> "பேச்சைப் பெருககாது ஒடுசகுதலாக்கியே
> பேரினபம் பெற"
>
> (ஞானப்பெண மாலை 57)

எனப் பாடுகிறா.

மூவாசை—பெண்ணாசை

மூவாசைகள் இறைககாதலுககுப் பெரும் பகை இதனில் பெணணாசை நீங்க—மூவாசை ஒழிச்க வேண்டுவதனை,

> "பெணடாசை வைத்து நான் பேதலித்தலையாமல்
> பேரின்பமதனை யருளவீா
>
> (திருத்தோத்திர மாலை 15)

> "செப்பு முலையா ராசை சிந்தை விட்டு நீஙகிடவும்
>
> (திருததோததிர மாலை 26)

> "பெண் மண் பொன் ஞசைப் பெருமயககம விட்டொழியக
> கணணொளிவுக சாடடி எனைக காப்பாய டராடமே"
>
> (பராபரக கணணி 29)

,'பெண்ணுசையால பேதலிக்காமல் நீயும்
பெண்ணுசை பொன்னுசை விட்டொழிந்து
மண்ணுசையை நீக்கிக கண்ணெளியை நோக்கி
குன்னொளிவில் நிலலு ஞானப் பெண்ணே''

(ஞானப் பெணமணி மாலை 35)

''கும்ப மத மல முலையர் கண் வலை யிற் சிக்காமல்''

(வாஹிதிய்யா மாலை 26)

''வலை வீசும முலையாரின் வஞ்சசத்தை விட்டொழிந்து''

(வாஹிதியயா மாலை 14)

''வலை வீசும முலையாசை உந்தென்னைச் சூழாமல்

(உஹுதத்து மாலை 6)

இருக்கக் கேட்பதினைக் காணலாம்.

பிழை பொறுக்கத் தேடுதல

பக்தனின்—சித்தனின்—முக்தனின் முதல்நிலை பிழை பொறுக் கத் தேடுதல். இந்நிலையினைக் கொண்ட பாடல்களை ஸூஃபிப் புலவர் களின் பா மரபிலும் காணலாம் இதனை, புலவர் ஞானி,

''கலலாதவன் பிளழயைக் கசடறவே நீக்கியருள்
பலலாயிரங கோடிப் பாவப பிழை நீஙக'

(வாஹிதிய்யா மாலை 37)

''கல்லாப் பிழையுஞ் சொற் பிழையுங் கருதும்
பிழையும் பொறுத்தருள் வாய்,

(அஹுததது மாலை 23)

''என் பிழை பொறுத் தாண்டரு யகா
முன பிழை பின் பிழை பொறுத தாண்டருள்
கண் பிழையுங் கருதும் பிழை பொறு
மண பிழை பொறுத் தாண்டருள் கணமணி''

(ஞானக்கண் மாலை 101)

''தொழுகாப் பிழைகளு முழ்காப் பிழைகளும்
தொடராய்ப் பொறுக்க வருள்வீர.'

(திரு.தோ.மாலை 13)

மன்னவனே என் பிழைகள் மனனிததே யாண்டருள்வாய்
முன்னோர் பின்னோர் பிழை முற்றும் பொறுப்பாய்- என்னையருள்
தநதை தாயின் பிழையை தாபரனே நீ பொறுப்பாய்''

(மெய்ஞ்ஞானப் பஃறொடை)

''அபபன் பிழை பொறுத்து ஆண்டருள வேணுமென்று
எப்பொழுது முன் பாலிருக்கின்றேன—தபபிதமாம
தாயின பிழை பொறுத்துத ஈாபரனே காத்தருளவாய்
நாயடிமை கெஞ்சுகிறேனுயனே—தூயனே
சேயாமக்கள் பிழையுஞ் சேர்ந்த பெணடீர் பிழையும்
தேயமதி லென் சீடர் செய் பிழையும போயொழிய
முனனோ பின்னோ பிழையு முஸலீமெலலாா பிழையும்
முனனோனே நீ பொறுதது முத்தியருள '

(மெய்ஞ்ஞானப் பஃறொடை)

*ரஹ்மான் கண்ணி 63 பராபரக் கணணி 54 முதலியவைகளிலும் தன் பிழை மட்டுமின்றி எல்லோா பிழையும் கேடகும தவநேய நிலை தான் எனனே!*

**காபகவ்ஸய்னி**

*காபகவஸய்னி எனும் சூஃபி ஞான சூக்குமச் சொலலிற்கு ''விற்போல வளைந்த இருபுருவமத்தி,'' ''கதிாமதி நடுவழி'', ''இறைதரிசனம் பெறும் ஓரிடம்'', ''விற்புருவமத்தி'' எனறெல லாம் பொருள் கூறுவர்.*

*ஞானியா—சித்தர் பாடலகள, குழூஉக்குறிகள்-மறைபொருட் சொற்கள், பரிபாஷைச் சொற்கள்—*code words *பெற்றுத் திகழ்வன. விரவி வருவன முஸலிம் புலவர் ஞானிகளின பாடல களில் இது பெரும்பாலும அரபிச் சொற்களாக அமைந்துள்ளன. எனலாம். மேலை நாட்டினா இவற்றினை ஆய்ந்து* ''A survey of Mystical Symbalism' (Mary Anits Ewar) *என்ற நூல வெளி யிட்டுளளனர் ''சூஃபியாக்களின் கலைசொல அகராதி''—அப்துர் ரஸ்ஸாக் என்பவரால் இயற்றப்பட்டுள்ளதை அறிவோம் (ஆனால் இவ்வகராதி பற்றிய விபரம் சரிவரத் தெரியவிலலை) இஸலாமிய தமிழிலக்கியததில் பெரும் பகுதி சூஃபி (ஞான)ப் புலவர்களின் பாடல்களாக மிளிருகினறன. இககுழூஉககுறிகள் அனைத்தும் தொகுக்கப் பெறல் (அகராதி) வேணடும. சிததர் பாடல்களின தனிச்சிறப்பு இக்குழூஉக் குறிச்சொறகளுக்குணடு. அத்தகு அருஞ சிறபபு—சூஃபியாக்களின சொற்களுககுமுணடு*

மேற்குறித்த காபசவ்ஸய்னி ஒப்பாய்வு (சித்தர் பாடல் களோடு)க்குரிய சொல் சித்தர்கள் "புருவத்திடை வெளி" என்று பாடியுள்ளார். புலவர் ஞானிகளும் இதுபற்றி பாடாத வரில்லை

இச்சூஃபி ஞான சூக்குமச் சொல்லினை, சுலைமானுல் காதிரி பயன்படுததிய பாங்கினை,

"சதிரொலி வீசிடுங் காபகவுசைனி
மதியொளி வான வஸ்தைத் தெரிந்து
துதியுடனே யொருதூய்மைப் பொருளதைப்
பதித்துக் கொளளடி ஞானப் பெணணே.'

(ஞானப் பெண் மாலை 12)

ஞானக்கண்மாலை 51; தமிழ் பொருள் தர எக்காலக் கண்ணி பாட "நூறொளிவைக் கண்ணிடையிற் காண் கவிதை காப்பு" எனப் பாடுகிறா மனோன்மணிக கணணிபாட 'இருளையறுத்து இருவிழி நடுவிலிருந்த பொருளறிந்தோர்க்கு அருளை அளித்து அனுதின மெய்யருள் ஆதி ரஹ்மானே? எனக் காப்பு வேண்டுகின்றார்.

"காபகவுசைனியைக் கமலவீதிடையிலே
காட்டி வைத்தருள் புரிகுவீா
தாப தாப வொளிவை கண்ணிடை மத்தியில்
தாரையா யருள் புரிகுவீா.'

(திருத்தோத்திரமாலை—3)

என இறைஞ்சுகிறார்.

இல்

"இல்லல்லாஹ்" என எங்கும் நிரம்பி நின்ற எழுத்தினை இரு தயத்தினுள் இருத்தி, உலகாசை நீக்கி, மனம், மெய், வாயினால் "திக்று" செய்யின கலபினூரடே இரு கண்ணிடை கதிரவனொளி யினைக் காணபீர்சள் என்றும் மிஸ்டிக் கருத்தினை புலவர் ஞானிகள் மரபாகப் பாடியுள்ளனர். அதனை சுலைமானுல் காதிரி திருத் தோத்திர குருவடிமாலை—28ல்:

"இல்லெனுஞ் சொல்லொன்றென்று இருத்தயதிற்
கண்டறிந்து
சொல்லாமற் சொலலி மிக்காஞ் சுகம் பெறுவதெக்காலம்"

(எக்காலக் கண்ணி 46)

"இலலெனற மெயப்பொருளை இருதயத்திற கண்டறிந்து
சுலத்தான வீருவில சுகம பெறுவதெககாலம".

என ஏங்குகிறுர்

கனஜீல கருமாத்து மாலை—ஓராய்வு

நாகூரொலியினைப பாடிபபரவும் பாமாலை 'அருள் கவிதை (106), "பொருள மாலை" (106). அவர் தம் வரலாறு வழஙகும் வற்றுத பாமாலை. மேனமையாகிய காரணங்கள (காரமதது) மிகு5மாகச் சொலலும் சொற் பாமாலை, புலவர் ஞானி நாகூரரின் அநத மிகவுள்ள அறபுதங்கள் அறிந்தமட்டிலும சோததுரைத் தேன " (242) எனகிறா. நூல பெயர் பொருத்ததிற்கு ஏற்ப காரணம் நூற்றிமுபபததொகைறைக் கருதியுரைததனன்" (243) எனப பாடுகிறா காரணம் கூறும சில பாடல்கள (18, 19, 21 24 25, 26, 27, 42—50, 52, 57, 58, 161, 162, 164, 165, 170, 171) நாகூரார் ஹிஜ்ரி 910இல பிறந்ததனை (13)யும ஹிஜரி 9 8 சுவனபதி சார்நததனை (17, 175)யும கூறுகிறுர்.

நாகூர் ஒலி முஹமமது கௌது குவாலியர் (ஒலி) அவர்கலிடம் முரீது தீட்சை பெறறதனை (30)யும், நாகூரொலி மகன யூசுப் சாகிபின் எட்டு மகனகள பெயர்களை (211,212)யும் மறைந்த பின காரணங்களையும் (215—230), புலம்பல கணணிகளாக (178 —192)வும பாடியுளளாா. நாகூரொலியின பயண வாழ்வினை பாங்குறக காட்டும் பாடலகள் பல. அவற்றுள் காயல பட்டணம் 118, கீழைக் கரை 119.மேலப்பாளையம121தெனகாசி123ஆயக குடி 124, பொதியமலை 125,திருச்சி127, தஞசாவூா 122 முதலிய ஊாகளுக்கும் சென்றதனைப் பாடுகின்றுா. சுலதான இஸ்கந்தர் கிணறு தோணடியதனை 147, செஞ்சிபிரபு, செல்வர் ஹிபுருகீம் கட்டிய மினுரா 231, பரங்கிப் பேட்டை தாவூதகான் மினுரா237 மலாககா பீரு நெயனுா மினுரா 234, பிரதாப் சிஙகன மினுரா 239, செய்து மரைக்காயா மினுரா 235, துளசி மகராஜா 14 கிராமங்களை நன்கொடை ஈந்ததனையும் பாடல்களில அழகுற தெரிவித்துளளார்.

இறுதிப் பகுதி, பலவாறுக இரந்து நன்மை வேணடியும் உற்றுர் உறவினர் மற்று அனைவோர்களுக்கும் உருகி அவாதம் நன்மைக்கு நாடும் பாடலகள் நிறைந்திருககினறன.

திருநதோததிரக் காரணமாலை

முஹையத்தீன அபதுல காதிறு ஜீலானி பேரில பாடிய புகழ் பாமாலை. இதனை "நீத மெய்ஞ்ஞான மாலை" (5) எனகிறுர்.

''சுந்தரமுடன் என் நாவாற் செந்தமிழ்க் கவிதை பாடினேன் 97 என இசைக்கிறார். பிறந்த நாள ஹிஜரி 470 றமளான்(8)என்றும் காரணங்களை 22, 23, 24, 26, 37 போன்ற பல பாடல்களில் பாடி, பெருமைதனை, அருமைதனை காட்டுகிறார். அருள் வேண்டுவன, ஞான நிலை கேட்பன இம்மாலைப் பாடல்கள் திருக்காரண அஹ்ம தியா மாலை. அஹ்மதுல் கபீறுநாயகத்தின் மீது'செந்தமிழ்ம ாலை' (7)யாக—மெய்நிலை, அருள வேண்டிப் பாடும் மாலை. கபீர்நாயகத்' தின புகழ் விரிப்பன, பற்பல காரணங்காட்டி (36, 38, 40, 49, 53, 60, 62, 63, 64, 65, 69, 81, 82) பெருமை பகர்வன, பிறப்பு ஹிஜ்ரி 500இல் (16) எனப் பகருகிறது, மரபு காட்டும் பாடல்,

''எங்களினிற சூல் மரபினிலுதித்த
ஏந்தலாம் ஹுசைன் மகவாய
திங்கள போல வந்த செய்த புல் ஹசனின்
திருமக வாயுதித்தவரே
மங்களமாக ஹுசைன வழி கிளையில்
மகமக வே பதினெட்டில
அங்கமே வெளியாய் வந்த ஆரிபுவே
அஹ்மதுல் கபீறு நாயகமே!''

என விளங்குகிறது.

கடுந்தவம் புரிந்ததனை (27)யும மாமனார் செய்கு காமிலும் மன்சூரிடத்தில் றபாயீதரீகா லீபா ஆனதை (21)யும் கூறுகிறது. ஹிஜ்ரி 578ஆம வருடம் ஜமாலுல் அவ்வல் 22தேதிநல்வியாழனில் துனியாவை விட்டும் நலமாயாகிறம்'' போனதினை (91)யும் பகருகிறது.

சூபி மெய்ஞ்ஞானி—சித்தர் சுலைமானுல் காதிரியின் ஞானப் பாடல்கள் ஆயவு இத்தோடு நின்றுவிடவில்லை. இது ஒரு அறிமுகமே, பத்தொன்பதாம் நூற்றுணடில் வாழ்ந்த சித்தா சுலைமானின்—பத்தரின பாக்களில் அமைந்துள்ள தர்க்கங்கள் பிற நல்லாய்வுகள், வெளிவராத நூல்கள் கிடைக்காத நூல்கள் இவை பற்றிய பல்வேறு ஆய்வுகள் மேலும் நடத்தப்படல் வேணடும், அதற்கு இககட்டுரை துணைபுரியின் நனறு.

# எண் விளக்கம்

1. கோட்டாறு ஞானியர் சாகிபு (றஹ)
   IIஇஸலாமியத் தமிழ இலக்கிய
   ஆராயச்சி மாநாடு-ஆய்வுக கடடுரை
   ,, நற்சிந்தனை செப்74.
2 திருமணி நடன அலங்கார புஞ்சம் 293 பாடல்கள
3. திருக்காரணப் பதங்கள் 5
4. ஷிபா மாலை 15
5. மெய்ஞ்ஞானத் தாயமகள் வினவிடை அநதாதி 101
6. திருமணி நடன அலங்காரப் புஞசம 292
7. திருக்கோட்டாறு ஈரட்டகமாலை 16
8. கட்டை ஹஜ்ஜாஜு செய்கு முஹமமதொலிப் பதிகம 14
9. உஹததது மாலை 46
10. ஞானப் பெண் மாலை 73
11. மெய்ஞ்ஞானப் பஃறொடை
12. பராபரக்கண்ணி 52
13. திருமணி நடன அலங்காரப் புஞ்சம் 5
14. கலிற் நபிமாலை 24
15 திருததோத்திரக் காரணமாலை 63
16. திருக்காரண அஹ்மதிய்யா மாலை 107
17. எந்நாளோ கணணி 29
18. ஒட்ட மன்னுன் ஷெய்கொலிப் பதிகம 10
19. பாவா காஸீம் (ஒலி) பதிகம் 11
20, வேம்படிப் பள்ளி திருக்காரணப பதிகம் 11
21. பேறு முனஜாத்து 11
22. ஷிபா மாலை 70
23. திருக்காரணப் பதங்கள் 10
24. ,, 6, 7

25, நாகூர் ஹமீதொலி நாயகப் பதிகம் 10

26,27. கன்ஜுல் கறமாத்து மாலை 251

28. அடியேன: அஹதத்துமாலை 34
வாஹிதத்துமாலை 28
கிலுற்நபி மாலை 10

29. அறியாதான். மெய்ஞ்ஞானப் பலுைடை 105

30 கல்லாதவன்; வாஹிதிய்யா மாலை 37

31. கல்லாத பாவி: வாஹிதிய்யா மாலை 64

32. கல்லாத புல்லன்: வாஹிதிய்யா மாலை 10
ஞானப் பெண்மாலை 71

33 கல்லா மூடன். அஹதத்து மாலை 32

34. சின்னவன: மெய்ஞ்ஞானத் தாய்
(அ) மகள் வினுவிடை அந்தாதி 101
(ஆ) எந்நாளோ கண்ணி 29
(இ) திருததோத்திரக் காரணமாலை 63

35. சிறியேன்: உஹ்தத்து மாலை 46
திருத்தோத்திரக் காரணமாலை 55
திருக்காரணப் பதிகங்கள் 6
கிலுற் நபி மாலை 18

36: மிகச் சிறியேன்: பகுறு மன்னுன் முஹம்மது (ஒலி)
பதிகம் 10

37. சிறியன்: கிலுற் நபி மாலை 19

38. சிறு பயல்: நெஞ்சொளிவு மாலை யந்தாதி51

39. பையல. வாஹிதிய்யா மாலை 41
திருமணி நடன அலங்காரப் புஞ்சம் 282

40. பைதல்: வேம்படிப்பளளி-திருக்காரப் பதிப்பகம்-II

41. நாயடியேன: வாஹிதிய்யாமாலை 9

42. நாய்போலடியேன்: அஹதத்து மாலை 32

43, பாவி (அ) மெய்ஞ்ஞானத் தங்கப்பாட்டு மாலை 142
(ஆ) திருக்காரண அஹ்மதிய்யா 2,11, 107
(இ) மெய்ஞ்ஞானத் தாய்மகள் வினுவிடை
அந்தாதி 94
(ஈ) வாஹிதிய்யா மாலை 66
(கூ) கலிற் நபி மாலை 10 13, 44

(ஊ) திருததோத்திர குருவடி மாலே 14, 15, 41;22
(ஏ) பகிறு பதிகம் 10
(ஏ) ஷிஹா பதிகம் 3
(ஐ) திருமணி நடன அலங்காரப் புஞ்சம் 264

44 புல்லன். வாஹிதியயா மாலே 58

45. Asbrry A. J. Sufism-an account of the Mysties of Islam 1956 P 75 to 83

46. குலாம் காதிறு நாவலர்—ஆரிபு நாயகம
அபதுல் கனி —பாதயிஹிப் பதிகம்

47 ''அஹ் தத்தெனும மாலையையமபத் தைந்தாய்
உஹததெனும் மாலேயேரெட்டும நாறபதுமாய்
(சுலேமானுல் காதிரி)

48 "எழுத்திரண்டு மண்ணுக இருககும் வெளளேயாக
இலாஹவென்றால் மூனறுந் தணணீரிலங்கச
சிவப்பாக

இல்லா வன்றால் மூன்றும் பச்சை இதுதானே காற்று
.... அட்சரமே அக்னியாம் அது நிறமே
கறுப்பு.'' (பிஸமில் குறம)

49. ''அஞ்சிர் மண் மண்ணீரலாம் அதின் மன்னர பூபக்கராம்
துய்யவழிவாயாம் வாசல காவல ஜிபுரீலாம்
பாரு (114)

தண்ணீர் கருவிரலாம் தரிப்பு உமறகத்தாபாம
கணபார்வை வாசல் மீக்காயீல காவலாமென்று
பாரு (115)

காற்று நுரையீரலாங் கனத்த வுதுமானரசாம்
பார்த்து இசுறுபீல் காவல மூக்கு வாசலெனறு
பாரு (116)

நெருப்புப் பிதநெனறு வீடாம் நேசசரலியதிலரசாம்
வாசல் கரிதனறதிலே காவலிசுறுயீல் பாரு '(117)

ஆகாசம பூவென்ற தாம் அதிலிருபப தஹமதுவாம்
வாசல் சுல்தானஸீறக காவல் நூறுயீல பாரு (118)

50. கடலிலே திரியும ஆமை கரையில்
ஏறி முட்டையிட்டுக
கடலிலே திரிந்தபோது ரூபமாணவாறு போல.''
–சிவவாக்கியர்

# கடையநல்லூர் புலவர் ஞானி ஷெய்கனு ஷெய்கு உதுமான்

அரபகத்திலிருந்து தமிழகத்திற்கும், கேரளத்திற்கும், தமிழக கேரளக்கடற்கரையோரப பட்டினங்களின் வழியாக, கி.பி ஏழாம் நூற்றாண்டு இறுதியிலிருந்து இஸ்லாமியர்கள் வரலாயினர். இதற்குத் தகுந்த அரிய சான்றுகள் கிடைத்த வண்ணமிருக்கின்றன.[1] இவவாருகப் பல காலக் கட்டங்களில் வந்துற்று உறைந்தோர்களுள் திட்டுவிளை (கன்னியாகுமரி மாவட்டம்) ஷெய்கு உதுமான் மஷாயிக்(ரஹ்) எனும் "அப்பச்சி அப்பா" அவர்களும் குறிப்பிடத்தக்கவராவார். இவர் கேரளத்தின் கொச்சி போன்ற பிற பகுதிகளிலும், தமிழகத்தில் நாகர்கோவில், கோட்டாறு போன்ற பிறஇடங்களிலும் தங்கி, பின்பு, திட்டுவிளையில் உறைந்த தவச் செம்மலாவார். இஸ்லாம் இங்கெல்லாம் இனிது தழைத்தோங்க அறப்பணி அருட்போதனை புரிந்தவருமாவார். இவ்வருட் செம்மலின் மகனார் ஷெய்குமீரான் லெப்பை. இவர் தம் அருமை மகனார் புலவர் ஞானி ஷெய்னு ஷெய்கு உதுமான் ஆவார்.

"கைத்தறிக்குக் கடையநல்லூர்" என்பது புகழாரம். இஸ்லாமியச் சூஃபி (ஞானி) பக்தித் தமிழ் பூத்ததும், வளர்ந்ததும் இந்நல்லூரே. 'திருமதிலூர்' இதன ப ழ ை ம ப் பெயர். இவண் ஹிஜ்ரி 1111இல் முஹர்ரம் பிறை 10ஆம்[2]நாளில் செய்கு உதுமான் பிறந்தார். இவர் முஹையத்தீன அப்துல்காதிர் ஜீலானி அவர்களின் பதினைந்தாவது தலைமுறை ஆவாா. இளமையிலேயே இறைத் தேட்டத்திலும் நாட்டத்திலும் ஈடுபடலானார். தந்தையார் இவர்தம் முதல் குருவாக இருந்தார். பின் காதிரிய்யா தரீக்கா அஷ்ஷெய்கு முஹம்மது (ஸபிய்யிரஹ்)விடம் 'பைஅத்' பெற்றார். எனினும் நெஞ்சம் நிறைவுறாது, கௌதுல் அஃலம முகியத்தீன் அப்துல்காதர் ஜீலானி அவர்களிடம் இறைஞ்சி வேண்டி நின்றார். இவர்களின் ஆக்ஞைப்படி ஸய்யிது மஸ்ஊது (ரலி) அமர்த்தப்பட்டார். இவர்தம் சோதனைகளில் வெற்றி பெற்று இவரையே தம ஞான குருவாகப் பெற்றார்.

இவர் அரபு, உருது, பார்ஸிமொழிப் புலமை மிக்கவராக விளங்கினார். ஹிஜ்ரி 1143ஆம் ஆணடு ஆற்காடு நவாப் முஹம்மது லி ம ' பூஸ்கான் புலவர் ஞானி புகழறிந்து, போற்றி நிலங்களை

மானியமாக வழங்கினுர் நவாப் இஃதிபாருகானும ஷெய்கனு மேன்மையறிந்து சிறப்பித்தார.

தமிழகததின பல பகுதிகளில, இலங்கையில், தீன்சுடர் ஞானச் சுடரொளி பரப்பினுர் பல அற்புதங்கள் புரிந்து[2] இறை ஞானப் போதங்களை[3] தம் இலக்கியங்கள் மூலம் அறிவித்து ஹிஜ்ரி 1191இல் மறைந்தும மங்காச் சுடரொளியுடன் இலங்கு கிருர்கள.

**கலீபாக்கள**

இவர்தம் கலீபாக்களாக (அ) ஸெய்யிது அஹ்மது ஆலிம் (ஆ) தாஹா முஹம்மது (இ) தக்கடி பஸீர் லெப்பை (ஒலி) ஆகி யோர் விளங்கினுர்கள. இவர் பாடிய நூலகளாவன:

**ரஹ்மான் முனுஜாத்து, ரசூலுல்லா முனுஜாத்து, முகையத்தீன் ஆண்டகை முனுஜாத்து, துஆ இரப்பு, மெய்ஞ்ஞானக கும்மி, பதங்கள [இசைப்பாடலகள்]: ரசூலுலலா மீது 23; முகையதீன் ஆண்டகைமீது 11, ஸெய்யிது மஸவூது நாயகம் மீது 23; பல வகைப் பாடலகள 7.**

**புகழ்ப் பாககள்**

'ஷெய்கனு ஷெய்கு உதுமான் [ஒலி] அவர்களின் மீது கா. ப. ஷெய்குத் தமபி பாவலர் பாடிய 'தோத்திரப பதிகம்,' கோட் டாறு மாதிஹுல பதூல் S S. ஜமாலியா ஸெய்யிது அபுல்காஸிம் ஹுஸைனிய்யில் காதிரியயி பாடிய'வளளலே ஒலியுலலாவே சிவராமங்கலம் முஹம்மது இப்ராஹிம கலீபா சாஹிப் பாடிய 'உதுமான் ஒலி முனுஜாத்து' முதலியன புகழ்ப பாக்களாகக் காணக கிடைக்கின்றன.

**நூல—பரப்பும விரிப்பும்:** *ரஹ்மான் முனுஜாத*

இருபத்தொன்பது அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தப பாக்களால் ஆயது. அரபுச சொற்கள் மிக அதிகம். காப்புப் பாடல் தவிர, மீதி இருபத்தெட்டுப் பாக்களின் இறுதி யடி 'ரஹமானே' என முடிகிறது. இறைவனை ஞான நோக்குடன் இறைஞ்சுவதாய் அமைவது இம் முனுஜாத்து, அதனுள் ஒரு பா;

தால் ]ஆணவம்-காமம், ஹவா-பேராசை] கவரப் பெற்று மாழ்கி வீழ்கின்றனர் இதனை அழகிய உவமையான, 'பேய்த் தேரைப் புனலென்று எண்ணித் திரியும உளைப்போல'-கானல் நீரை நாடி ஓடிச் செலலும மானைப்போல என்பதனுல் விளக்குகின்றுர்கள். இந்த உவமையினை' சிததர்கள், புலவர் ஞானிகள் பயன்படுத்திய பாஙகும் அறிந்துணரததக்கது.

பாலைவனத்தில் நீர் இருக்கிற மாதிரி ஒரு ஏமாற்று ஜாலம் நடக்கிறது. அதுதான் கானல் நீர்' (Mirage) என்பது. பிரதிபிம்பம் (Reflection) ஒளிச்சிதறல் (Refraction) கொள்கைகளைக் கொண்டு அறிவியலில இதை விளக்குகிறுர்கள். இது என்ன வென்றுல, பாலைவனம மாதிரியான ஒரு பரப்பு வெளியில் மிக உஷ்ணம் ஏறிப்போய்க் காற்றுப் பிரதேசம் லேசாகி விடுகிற போது தூரத்திலிருந்து பாரப்போர்க்கு நீரிலே பிரதிபிம்பம் தெரிகிற மாதிரி மண்ணிலேயே தெரிகிறது. தூரத்திலிருந்து பார்க்கிறபோது வெறும் மணற்பாங்கான பூமியே ஒரு நதிஓடுகிற மாதிரி தெரியும். அதைநோக்கிப் போகப்போக-அதுவும் தள்ளித் தள்ளிப்போகும். இப்படிப்பட்ட கானல் நீரைப் பார்த்து மான்கள உண்மையான நீர் எனறு நினைத்து அதைத் தேடி ஓடி கடைசியில் ஓட முடியாமல் களைத்து, வெயிலின் உஷ்ணம தாங்காமல, மிகவும் பரிதாபமாக உயிரை இழக்கும். 'லோகமெல்லாம் மாயை' என்கிறது அத்வைத சாஸ்திரம். இந்தக் கானல் நீர் உவமானம் 'ம்ருகத்ருஷ்ணு'—மானின் தாகம்-அநதத் தாகத்தினுல்தேய்படும் கானல் நீருக்கே பெயராகி விட்டது. கானல் நீரைத்தேடி ஓடி ஓடிப்போய் பாவம் கடைசியில் வெயில் தாளாமல் பிராணனை விடுகிற மான்கள் மாதிரி, இந்திரியங்கள் ஒவ்வொன்றும் ஒவவொரு விதமான அற்ப சுகத்தைத் தேடித் தேடி ஓடி வீணுகப் போகிறது. மும்மலத்தினுல் அழிகிறுன்—வீழ்கிறுன்—ஆணவம்— காமம்—ஹவாமுதலான கானல் நீரோட்டம்தான், நமமை இழுக்கடித்து, அலையாக அலையவைத்து நாசமாக்குக்கிறது. எனவே புலன்களின் இந்த வேட்கையை (விஷயம்ருகத் ருஷ்ணு) அடக்கவேண்டும். இந்திரியங்கள் பல விதமான ஆசையைக் கானல் நீரை—நோக்கி ஓடாமல் இருக்கும் படி—அவற்றின் தாகத்தை அடக்கச் சொல்லி வேண்டுகிறுர். அவ்வணமே அடக்கிய ஞானி ஷெய்கு உதுமான் ஒலி ஆவார். இனி அப்பாடலைக் கேட்போம்.

"தவாபை அறிந்தும் அறியார்போல்
தணுமாய் கையும் ஆணவ காமம்
ஹவாவில் மனதைச் செலுத்திவரும்
கபலந் தனில்ல வீழ்ந்தடைந்து

செவ்வான்பேய்த் தேரைப் புனலென்றெண்ணி
திரியும உளப போலே திரிந்து
ஹவாவை அகற்றி உனகிருபை
அருள்வாய் ஆதி ரஹ்மானே!'' (4)

இவரின் மெய்ஞ்ஞானக் கும்மிப் பாடலிலும புலன் வேட்கையை விரட்ட,

''ஆணவ மாயை ஹவாநபுஸுக்
காதாரமான—அஜாசீலாம
வீணன புலையாள னைத்துரத்தி
மெயசொலலிக் கும்மியடியுஙகடி''

எனப் பாடுகிறுர். இவைகள் அஜாசீல்--இப்லீஸ்--ஷைத்தான் எனகிறுர். தீமை ஷைத்தானிய குணஙகளை வீணன புலையாளன் என உருவகித்து--அவற்றை விரட்டியடிதது மெய்யினை நிலை நாட்டி மகிழ்ச்சியினை வேணடுகிறுர்

றஸூல்லா முஞஜாத்து

இருபத்தொன்பது தொங்கிசைக் கொச்சகப் பாக்களால் அமைவது றசூலுல்லா முஞ்ஜாதது. 'றசூல் நபியே' என ஈற்றில முடிவுறுவது. செந்தமிழில் பெருமானாரின மாண்புகழ் விரிப்பது, ழுகமமதொளி*, படைப்பினங்களின் ஆதாரம் எனும் தத்துவ வித்தகத்தினை புலவர்கள, ஞானிகள், ஒரு மரபாகப் பாடிப் போற்றியுள்ளனர். அதனை உதுமான ஒலி,

'அஹறதி லொளிவாக உதித்து
அஹ்மதாய் முன் பணிநது
ஸுஹறுதி லிருந்தே மயிலாய்த்
தோனறி வியர்வு பொழிந்ததனுல்
மிகுதிக் கலகு வான்புவியும
விண்ணா மனுஜின னெவ்வுயிரும்
தகுதிபெறவுண பாகநின்ற
செய்யிதுர் ரசூல் நபியே''

என்று பாடியருளியுள்ளார்.

முஹையத்தீன் ஆண்டகை முஞஜாத்து

இருபத்தொன்பது ஆசிரிய விருத்தப் பாக்களால் ஆயது. 'முஹையித்தீனே' எனப் பாடலகள முடிவுறுவது. காதிரிய்யா சூஃபி தரீக்காவினை(குழு)நிறுவிய ஷெய்கு அப்துல காதர் ஜெய்லா

அஃலம் முஹைஹயத்தீன் அப்துல்காதர் ஜீலானி(கி.பி 1078—1166) அவர்களின் புகழ் பெருமை பாடுவதும் இம் முனஜாத்து.

துஆ இரப்பு

ஆசிரிய விருத்தம் 1; பஃறொடை வெண்பா, இவைகள் இறைவனிடம் இறைஞ்சும தமிழ்ப் பிரார்த்தனைமாலை, நபிமார்களுக்கு அளித்த பலவேறு பேறுகளை-நல்லருள் நிகழ்ச்சிகளை-வேத மருளியதைக் கூறியும் துஆ இரக்கின்றார், ஆதம்முதல் ஆரம்பிக்கின்றார். இப்பா மரபும், புலவர் ஞானிகளிடம் காணப்படும் ஒன்றாக இருக்கிறது. ஒரு சில அழகு அடிகள் காண்போம்.

> ''இபுருஹிம் நன்னபிக்கு எரிநெருப்பைப் பன்னீராய்
> புவிமீதில கொடுத்த புண்ணியனே–ஹபீபான
> இஸ்மாயில் நன்னபிக்கு இடரும் கருவியைஉன்
> வசமாகக் காத்தருளும் வல்லவனே— நிசமாக
> ஸககரியயா நன்னபியைத் தருவினுள் ளேவைத்து
> பூக்கியமுடன் காத்தருளும் வேந்தனே.''

இங்ஙனமாகப் பாடும் பாவண்மை கற்றுணரத்தக்கது. பிழை பொறுக்கத் தேடுகையில் பாவியாக—புல்லனாக—பொய்யனாக—நின்று இரந்து—கசிந்துருகி இறைஞ்சுகிறார.

இரணம்' என்ற சொல்லை முஸ்லிம் புலவர்கள் மட்டுமே தம் பாடல்களில் வழங்கக் காணலாம். அது 'ரிஸ்க்' என்ற அரபிச் சொல்லிற்குரிய தனிப் பொருள்தரும் திருமிகு தமிழ்ச் சொல்லாய் அமைந்து விட்டது. [ரிஸ்க் = ஆகாரப் பொருட்கள் அத்தனையும உட்பெறும்]. சோலி—ஜோலி—வேலை எனும் பழகு தமிழ்ச் சொல்லையும் பயன் படுத்தியமை காணலாம்.

மெய்ஞானக் கும்மி:

கும்மி— நாட்டுப்புறப் பாடல் வகையைச் சார்ந்த இலக்கிய மரபுடைய பாவகை. கருத்துக்களை எளிய முறையில் இசையோடு தருவது. இதனைப் 'பெண்கள் இலக்கியம்' எனலாம். ஏனெனில் பெண்கள் பாடி ஆடுவதற்குரியதாக அமைந்துள்ளன. மேலும் ஞானம் பகரும் கும்மிப் பாடல்கள் பெண்களும் ஞானத்தை அறிதற்கு விரும்பத் துணைசெயத் தோன்றியதோ என்ற வினவும் எழுகிறது[9]. ஞானக்கும்மிகள் தமிழிலக்கியத்தில் பல அழகுக்கு அணிசெய்கின்றன.

ஞானக் கும்மி ஞான சூட்சுமங்களை உட்பொதிந்து உயரிய அரிய ஞானங்களைத் தருவது. உட்பொருளறிந்து கொள்ளக்

கடினம். இக்கும்மி, காப்பு வெணபா-1; 98 கண்ணிகளால் ஆனது. முதல் சில [1—13] கணணிகள் காப்பாக அமைந்துள் ளன. நூரே முஹம்மதிய்யா—இறசூல் பாதம்—ஆதம முதல, அன்பியாக்கள், அபூபக்ா—உமர்—உதுமான்—அலி—ஹஸன—ஹுஸைன்—வள்ளல் முஹியத்தீன—ஷாகுல் ஹமீது—குரு மஸ் ஊது—ஆகியோர்களின் துணே வேணடுகின்ருர்[7]. முஸ்லிம் புலவர் கள் பாடிய காப்புப் பாடலாய்வு தனி ஆயவிற்குரியது. அரபுச் சொற்கள் இக்கும்மியில் கலந்துள்ளன. இறைத் தததுவததினே,

''துவக்க ஆதி அறுதியுமாய்ச்
சொலலிய ஆணபெண இலாததுவாய்
எவர்ககும் எட்டாப் பழம்பொருளே
இறைஞ்சிக் கும்மியடியுங்கடி.'' (53)

என்கிருர். ஐந்தெழுத்து தத்துவத்தினே,*

அஹதுவாகி அஹமதுவாய்
அல்ஹமதுலில்லாஹ் வெனும பொருளாய்
உஹதத்தாக வருகின்ற ஸிபத்தை
உவந்து கும்மியடியுங்கடி [54]

என இரததினச் சுருக்கமாகப் பாடியருள்கிருர்.

பிராணத் தத்துவத்தினே ஓர்ந்துணாந்த யோகி,

''இருள்வெளியும் ஒன்ருய்க் கலந்தே
ஏகாந்த மாகிய மைதானில
வரும் பிராண தத்துவம தன்னே
மகிழ்நது கும்மி யடியுங்கடி.'' . [58]

என சரதத்துவம் பேசுகிருர். ஒன்றிறையோனே,

வெளியிலே யொளிவா யிலங்கி
மெய்ப்பொருளாய், அருமைப்
பொருளாய்த் தெளிய வோரலியானவன் [40]
வாக்கு மனதிற்கும் எட்டாத வான் பொருள் [70]
மெய்யன் [80] வானபற்றி நின்ற மறை பொருள் [73]

எனப் பலவாருகக் கூறி மகிழ்ந்து கும்மியடிக்கச் சொல்கிருர்.

கும்மி இசையோடு—நடன இசையூட்டும் பாவடிகளாக, ஞானப் பொருளேயும் பூட்டி வைத்துள்ளார். அதனே.

''திமிதித்தி தித்திமி தித்தியெனத்
திரு நடனங்கள புரிநதாடும்
இமைக்கும புருவ நடுவில நினருனே
இணங்கிக குமமியடியுங்கடி''

என்பதில் புருவநடு- காபகவ்ஸய்னி என்பர். சூஃபிஞான சூக்கு மங்களில் முககியமானது[9] இதனைப்பற்றிப் பாடாதபுலவர் ஞானி களே இலலே. இதனை 'கதிர்மதி நடுவழி' [இறை தரிசனம் பெறும ஓரிடம்] 'விற்போல் வளைந்த இரு புருவ மத்தி' என்பர். சித்தர்களும் இதனைப் பாடியுள்ளனர். இஃது ஒப்பாய்விற்குரியது. ()தனைத் 'தன்னையறிந்தவம' என்றும் கூறுவர். இதனை மேற் கோள் பாடல்களும் ஒருவாறு விளங்கும்.

இங்ஙனமாக மெய்ஞ்ஞானக் கும்மி கற்கக் கற்க ஞானத்தினை தருவதாக அமைந்துள்ளது. அவற்றினை ஓர்ந்துணர்ந்து அறிவது சுலபமல்ல. இக்கும்மியினை,

',விறகு நான்கு தரீக்கத்திலும்
ஷஹீஹாய்க் கும்மிக கவிதை செய்தேன்.' (96)

எனப் பாடுகிருர்.

இக் கும்மி 'நற்கருத்து' (98) என்றும் இதனைப் படித்து உண்மை கொண்ட தீனவர்க்குத் தினமும் இறைதிருவுளமாகும் என முடிக் கிருர்,

நற்கருத்தாக பக்கீர் உதுமான் மெய்ஞ்
ஞானக்கும்மி படித்ததையும்
எக்கீன கொண்ட தீனுனவர்க்கு நிதம்
இலாஹி திருவுளமாக ஆமீன.'' (98)

பதங்கள்

பதம் எனின் இசைப்பாடல்; இசைப்பாடல்கள் இன்னிசை யுடன், கருத்திசைவும் கொண்டு விளங்குவன.

றசூலுல்லா பேரில இசைப்பாடலகள் தரும் செய்திகள்

பெருமானுரின் பண்புகளை—புகழினை—பொழியும் அமுத மொழிகளில் அவர்களது வடிவினை.

''பாரில் பாதம் தோயாத நடையும்
பரிமளம் வீசிய குங்கும உடையும
சீரமையான கார்மேகக் குடையும்
காதம் நிறை வீசும் கஸ்தூரி மணத்தி...''

எனப் பல பாடல்களில் பாடுகிறார். (நினைவாய் எனதுள்ளம்) மானுக்குப் பின்நின்றதனை வேடனுக்கு 'தீன' தந்ததும (அங்கம் கஸ்தூரி) பாடுகிறா.

> **''எல்லா நபிக்கும் ஒருமுததே —இல்லல்லாஹ் எனும்**
> **வலலோன் திருவொளிவில—வித்தே**
> **''ஈரேழு லோகம் மெய்ககவே ஒரு குடைக்குள்ளே**
> **கலிமா நடக்கவே அருள புரககும இரசூலே''.**

(சாஹிபின யோகமே பதம்)

எனும் அடிகள் திருமபத் திரும்பக் கற்றுணரத்தக்கதன்றோ!

**உவமைகள்**

புலவர் ஞானி பயன்படுத்திய சில உவமைகள்,

> **'மழைக்காய் வருந்தும் பயிர் போல'**

(கருணை புரிநதவொருபோது—பதம்)

> **''பஞ்சு நெருப்புப் போல'** (கும்மி 33)
> **'கனல உலைக்குள மெழுகது போல'** (அடிக்கடி ஆசை)
> **'வானில் இடிகொணட மயிலபோல'** அடிக்கடி ஆசை)
> **'உலைவாய் மெழுகது போல'** (வருவீர்-பதம்)

அபூஜஹலினை வென்றதனையும்—மிஃராஜ் வளத்தினையும் பாடியுள்ளார். அவைகளெல்லாம் இசையோடு கற்றுணாந்தறி வதற்குரியன.

இங்ஙனமாக அவரது இசைப்பாடல்கள் தொகுப்பு முஹியத் தீன் ஆண்டகைபேரில—11, குருமஸ்வூது பேரில் 23 பல்வகைப் பாடலகள்— 7 என இசையூட்டும இனபப் பாக்களாக இலங்கு கின்றன.

மேலும் புலவர் ஞானி ஷெய்கனா பாடிய பார்ஸிப் பாடல்கள் மூன்றும், ஆற்காடு நவாப் மஹபூஸ்கான் மீது பாடிய அறபுப் பாமாலையும் காணக் கிடைக்கிறது.

இங்ஙனமாக சூஃபி ஞான இலக்கியத்திற்கும் இஸ்லாமியப் பக்தி இயக்கததிற்கும் தொணடாற்றியப் புலவர் ஞானியாக —சூஃபியாக—ஒலியாக—மறைந்தும் வாழ்வாங்கு வாழ்பவர் கடைய நல்லூர் ஷெய்கனா உதுமான் (ஒலி).

## எண் விளக்கம்

1. i-Fresh Light on Arab Trade with South India: Page 69 A Abdul Majeed M.A, Damlica Vol II Part III.

   ii-இஸ்லாமியத் தென்றல்: பேராசிரியர் கலாநிதி உவைஸ், M.A ; ph.D

   தென்னகத்தின் தொன்மை: கே.பி.எஸ் அமீது, B Sc ; B L ;M Litt.

2. ''இறந்திடும் மையித்தினொடு மொழிந்தீர்
   இரும் பெரும் புனலிடை நடந்தீர்
   சிறந்திடு நதியில் சீடர்களிருவர்
   செல்லுரு தருங்கரை சேர்த்தீர்
   அறந்தரும் அரசன் அவையிடைப் பல்லக்கு
   ஆளிலா தேகிட வினைந்தீர்
   திறந்தரும் அரிய கடையநல லூர்வாழ்
   ஷெய்து உதுமான் எனும் ஒலியே''.

   (தோத்திரப் பதிகம்

3. ''ஹக்கொடு நபிகள் நாயகம் அப்துல்
   காதிறு பெயரினுக் கழகாய்
   மிக்குறு முஞ்ஜாத்துடன் உயிர்ப் பதமும்
   மேன்மைசேர் கும்மியு மருளி
   ஷக்கற எவரும் பலனபெறச் செய்த
   தகைசொல வாயதும் உளவோ
   திக்கெலலாம் புகழும் கடையநல் லூர்வாழ்
   ஷெய்குது மானெனும் ஒலியே.''

4. (அ) கானலே.. ஆடாய் பாம்பே! [பாம்பாட்டிச் சித்தர்]

   (ஆ) ஏட்டிலே...நெஞ்சே! [கணபதிதாசர்—நெஞ்சாதி விளக்கம்.]

   (இ) பேய்த்தேரை...தரித்து! [ஞானமணிமாலை (100) பீரப்பா

   (ஈ) ஞானமணி மாலையிலிருந்து ஒரு கவிமணி—கானல் நீா—கட்-எம்.எஸ். பஷீர் [முழக்கம் 5-9'70]

5. *முகம்மது-படைப்பினங்களின் ஆதாரம்.*
   (1) *சீறுப்புராணம்—'' கலைமறை ..*
   (2) *ஞானப்புகழ்ச்சி—'' பரமாநபி...*
   (3) *மஅரிபத்து மாலை—'' நபியைப்...*
   (4) வேத புராணம்—''நாமங...
   (5) ஞான தோத்திரம்—''திங்கள உடுக்...

6. கொங்கண நாயனுர் வாலைக்கும்மி
   மதுரை வாலை சாமி ஞானக்கும்மி
   சையப்பமுதலி அத்வைத ஞானககும்மி
   பாலவானந்த சுவாமிகள
   கோட்டாறு ஞானியார சாஹிபு
   கோட்டாறு ஷெய்குத் தமபி சாஹிபு
   செய்கு முஹம்மது அப்துல்லா சாஹிபு

7. *இஸலாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பி யங்கள்—டாக்டர்* M.M. *உவைஸ* M.A,Ph D, *ஆய்வுக் கட்டுரை-1973.*

8. *'ஐந்தெழுத்து'- ஆய்வுக்கட்டுரை* M.S , *பஷீர்-1978.*

9. (1) இருவரும்...ஹீ! *[ஞானவிகடசமத்து—பீரப்பா-18]*
   (2) கலைகளான...இருளே! *தௌஹீது மாலை தர்வேஸ் மீராலெவி]*
   (3) தனனை சிங்கா! *[ஞானரத்தினக் குறவஞ்சி— பீரப்பா]*
   (4) நெற்றிக்கு...மந்திரம்! *[திருமூலர்]*
   (5) நுதல்நடுவே ..அறிவீரே! *[பிஸ்மில் குறம்—பீரப்பா]*
   (6) நெற்றிக்குநேரே...உடம்பு! *[ஔவைக்குறள்]*
   புருவத்திடை—உடம்பு! *[ஔவைக் குறள்]*

# சூரங்குடி ஷெய்கு தர்வேஸ் மீராஒலி

இலக்கி ய வானிலே பல முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் அறியப் படாது இருக்கின்றனர். அவர்களுள் முற்றும் துறந்து, இறை யினைப் பற்றியொழுகிய தவச்செம்மலாக — தியானத்திலும் மோனத்திலும்தொழுகையிலும் ஈடுபட்டுத் தன்னையே உயர்த்திக் கொணட நாதாவாக-ஞானம்—பக்தி-யோகம் ஆகியவற்றின் மூலம் முக்திபெற்று-உள்ளும்புறமும் ஒளி பெற்று இலங்கும் இறையன்பர் சூரங்குடி புலவர் ஞானி மீராஒலி அவர்களின் அறிமுகப்பாங்கில அமைவுறுவது இக்கட்டுரை.

சூரை என்னும் ஒருவகைக் கொடிகள் அழிக்கப்பெற்று மக்கள் குடியேறியது, குமரி மாவட்டத்தின்கண் அமைந்த சூரங்குடி என்னும் நலலூர். இப்பதியிலே ஹிஜ்ரி 1085 இல் அரபி நாட்டி லிருந்து வந்துறைந்து, ஹிஜரி 1121, ஜமாதுல் ஆகிர் 13இல் மறைந்தும் மங்காச் சுடரொளியுடன் இலங்குபவர் மகான் செய்கு தர்வேஸ் மீராஒலி அவர்களாவார். இவர்தம் இயற்பெயர் ,ஷெய்கு மீரான்,. 'தர்வேஸ்' எனபது அன்னாரது சிறப்பு அடைமொழிப் பெயர். இவர்தம் வாழ்க்கை வரலாறு முற்ற முழுதும் தொகுக்கப்படவில்லை. பாடிய பல பாடல்களும் ஏட்டுச் சுவடியாகவே பல்வேறு இடங்களில உள. அவற்றினை எல்லாம் தொகுத்து-ஒன்று சேர்த்துப் புதுப்பித்தல், நமது தலையாய இன்றியமையாத கடனாகும்.

இப்புலவர் ஞானியைப்பற்றி அன்னாரது பாடல்களிலிருந்தே அறியக் கிடைக்கும் வாழ்க்கை [Bio-Data] குறிப்புக்களாவன. ''சாதி மரபினிலுதித்த அபுசாலிகின் மகமே தமியேன்'' [சூரிசனைப் பத்து பாடல் (1)] எனும் அகச்சான்று அவர்தம் தந்தையார் பெயரினைச் சான்று பகருகிறது. ''அறபி நாடதில் நின்னுறை சூர நன்னகரில் பேறு பெயர்மீரான்'' [நாகூர் ஷாகுல் ஹமீது புகழ்பாடல் (9) [என்பது அவர்கள் அரபு நாட்டவர் என்பதற்குச் சான்றாகும். ''வேதத்திலுயர் கோடை சற்குருவான தான் தன் ஹம்ஸாவெனும்;ஷெய்கு'' [முஹிய்யத்தீன் முனாஜாத்து

பாடல் (4)]; ''குருபரனும் கோடை நகா லெப்பை ஹம்ஸா குறித்த உபதேசம்'' [முகையிததீன் அகவல் பாடல (10] எனும் அடிகளில இருந்து கோட்டாறு ஹமஸா லெப்பை லெப்பை ஷெய்கினை, மீராஞெலியின குருவாகக கொள்ள இடமுணடு.

தனனை அடககமாகக் கூறும அழகிய பணபு சூஃபிப் புலவா களிடையே காணும் மரபாகும். அதற்கொப்ப மீராஞெலியும் தமது பாடல்களில 'அடியேன்' [முகை-முஞ-17,18; தரி-பத-2], 'சிற்றறிவுஎடையோன்' [முகை முஞ-காப்பு 3] 'பரதேசி' [தெளஹீது மீது 20] என்று கூறக் காணலாம்

'‚ஆசு மதுரகவி சித்திரவிஸ் தாரமென்ற
அழகுக் கவிதைகளை அடியே னறிவனோ
தேசமதில நிகண்டு அக ராதிசினனூல நனனூல்
சிறக்கும் கவிதைகளைச் சிறியன் அறிவனோ
பேசுவுரை யறியாச் சிறியோனுக்காக இரங்கிப்
பீரே எழுந்தருளி வாரும் முகியயத்தீனே
மாசரும் புன்சொலலதை வணமைசெஞ் சொலலாக்கி
வருசையுடன் தருவீர் வளளல முகியயத்தீனே ''

[முகை-முஞ]

என 'அடக்கம் அமரருள் உய்க்கும்' எனும் மொழிக்கேற்பப் பாடுந்திறன உய்த்துணர்வதற்குரியது.

புலவர் ஞானி மீராஞெலி பாடிய நூல்களாகக் கிடைப்பது முகைய்யத்தீன முஞஜாத்து, முகைய்யத்தீன அகவல், தரிசனைப் பத்து, தௌஹீது மாலை, நாகூரார்ப் புகழமாலை என்பனவாகும. இவற்றை ''முகையத்தீன புகழ'' எனற தலைப்பாக இரணடாம் பதிப்பு 1967இல், நாகாகோவில கவிமணி அச்சகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. இப்பதிப்பில் கனியாபுரம் ஷெய்கு அப்துல் ஹஸன் மௌனமணி மஸ்தான் ஆலிமின் சாற்றுக் கவியும் [விருத்தம்] காணக் கிடைக்கிறது. மீராஞெலி பேரில கோட்டாறு அரிப்புத்தெரு A. M. மீரான் முகிய்யத்தீன் இயற்றி பாடிய வாழத்துப் பாக்கள் [1+10] அணி செய்கின்றன.

முகைய்யத்தீன் முஞஜாத்தில் காப்புப்பாடல, மூன்று விருத்தங்களாலும், இருபத்தொரு பாடலகள் முகைய்யத்தீன புகழ் மாலையாகவும் விளங்குகின்றன. இதனை 'முஞஜாத்து' காப்பு விருத்தத்திலும் (2) 'பைத்து' என்ற புகழ்ப் பாடலிலும் (2) குறிப்பிடுகின்றார்.

முகைய்யத்தீன அசவலில் காப்புப்பாடல் வெண்பா இரு பாக்களாலும், ஏனையவை இருபத்தொரு பாக்களாலும் ஆயது.

தரிசனைப்பத்து, பன்னிரணடு பாடல்களின் ஒவ்வொரு இறுதி அடியிலும், முகைய்யத்தீனின் பாதார விந்தத்தில் "தெணடனிட்டேன் திருக்கழலைத தெரிசித்தே" எனப்பாடி உருகுகிறார். முகைய்யத்தீன அடைக்கலமாகப் பத்து பாக்கள், இறைப்புகழ்ச்சி பத்து, முகைய்யத்தீன் நயினாரே என பத்து, முகைய்யத்தீனே எனப் பத்து, இறைஞானம் முதலியன பற்றிப் பத்துப் பாக்கள எனப் பல பகுதிகளாகக் காணக் கிடைக்கினறன.

தெளஹீது மாலையில் காப்பு ஒரு பாடலாகவும், மற்றும் இருபது பாக்களுமாக விளங்குகின்றன. பாடலின இறுதிச் சீர் அடுத்த பாடலின முதற் சீராக இலங்குகின்றது, நாகூர் ஷாகுல் ஹமீது அவர்களைப் போற்றிப்பாடும் ஒன்பது பாடல்களுமுண்டு.

**கவியின்பம்**

காதிரிய்யா சூஃபி தரீக்காவை-நெறியினை [order] நிறுவிய ஷெய்கு அப்துல் காதிர் கவ்துல் அஃலம் ]கி.பி. 1078—1166] முகைய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி [ரலி] அவர்களைப் போற்றிப் புகழவது சூஃபியாக்களிடையே [Sufi poets] ஓர் இனிய மரபாக மலர்ந்துள்ளதைக காணலாம் மீராஞெலியும் முகைய்யத்தீன [ரலி] அவர்கள் மீது பல புகழ்ப்பாக்களைப் பாடியுள்ளார்.

முகைய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்களின் மீமிசைப் புகழினைப் பத்தி பத்தியாகப் பாடிய நயங்கள் கற்று அனுபவித்தற்குரியது. முகைய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்கள் தம் வாழ்வில் நிகழ்த்திய அற்புத நிகழ்ச்சிகளை வணணத் தமிழில் எளிமையாகப் பாடி அவர்தம் அருள் வேண்டுகிறார் மீராஞெலி. அவற்றுள் சிலவற்றை அவர்தம் பாடலடிகள் மூலம் காண்போம்:

[அ] "நேமித்திருந்த மங்கை பெண்பிள்ளை பெற்றதனால்
நினைவு கலங்கி வந்துநும் பாதத்தில் விழவே
ஆமென று பெண்பிள்ளையை ஆண்பிள்ளை யாக்கியவள்
அருமைக் கணவனோடங் காக்கிய ஆணடவரே

(மு. முனு-7)

[ஆ] ''பகுத்தாய் சில காபிர் படையை அணிவகுக்கப்
பாரத்துக் குர்ஆன ஓதும பாலரைத தானழைத்து
மிகுந்த ஆறறு மணலைக குவிததுக் கனியாக்கி
மிக்க மதனை பசியாறி........ ............ ''

(மு. முனு-8)

[இ] ''கபுறிலிருந்து ஒருவன் தனனை எழுப்பிபணக்
காரனவ னுக்கிக கருணையுடன் அனுப்பி
புவியில் நிக்காஹ் செய்து மனைவியும் மாப்பிள்ளையும்
பொருந்தும்படியே செய்த புகழ்சேர் முகியித்தீனே''

[ஈ] ''பாவாநீர் கருபாவைச சுற்ற கருபாவுமைச் சுற்றிட
பல்லாயிரம மலக்குகள பார்த்துப பதமபணிய''

என இங்ஙனமாகப் பல குறிப்புகளைப் பெய்து வைத்துப் புகழு கிருர்,

புலவர் ஞானியர்களிடையே பிறிதொரு மரமாக இலங்கும், இறைவன் நபிமார்களுககு உதவி புரிந்த நனனிகழசசிகளைப் பாடும பணபினையும்,

''வரிசைநபி முகம்மதை அறுஷில
வருத்தி முத்திரை வழஙகினேனே
பிரியமுடன ஆதம ஹவ்வாதனனைப்
பிரிததுக் கூட்டிய பெருமபொருளே
உரைசோ யூனூஸை மீனவிழுஙக
உகநது உன்னுதவியால் மீட்டும் கோவே
தரையில தாவூது நபிக்கு இரும்பைத்
தகக மெழுகாககும தனிமையோனே
ஒழுகு சுலைமான் நபி தனக்கு உவநத
வரிசையும் இராஜதமும
பழுதிலலா வாழ்வும் கொடுததாய்
எலலாம் படைத்தோனே உந்தன் திடத்தினுலே
முழுதும் அய்யூபு வேதாம்பாககு
மூணட பிணிபலாய நீககினேனே
அழுது தொழுது நினனே டிரநதேன
ஆதியோடு நடுமுடி விலலானே.''

என்றும், மேலும் இத்தன்மையதாய்,. .ஒளிக்கு உள்ளொளி ......அறபுதனே'' (மு. அகவல்-20) எனும் இறையினைப் புகழும்

புகழ்ச்சிக்குரிய பாடல்களைக் காணலாம். இப்பாடல்கள், பீரப்பா வின் ஞானப் புகழ்ச்சியின் பாடலகளோடு [315 முதல் 321+ 'ஆதநபிக்கரசா—.........துஆப் பேறீ டேற்று வாயே'—103] ஒப்பிடடுக் காண்பதற்குரியது.

பீரப்பா,ஞானப் புகழ்ச்சியில்

''முன்னொரு நாலு ஹறுபானே
முதல்வா யுனது திருவானே
மன்னுயிர் ஞானப் பொருளானே
வருகை அறுசு குறுசு ஆனே
உன்னுரை நாலு மறையானே
ஒளிசேரிறை றசூல் திருவானே
என்னுயிர் காமத் துயரறிந்தே
இரங்கு வோர்க்கு மிறையே''

என ஆணையிட்டு இரக்கும் பாடலோடு, செய்கு தர்வேஸ் மீரானொலி.

அஹதி ஹூஹதாகி அஹமதான
ஆலநபி யானே யார்களானே
மிகவுமருள சஹாபாக்கள ஆனே
மேலோன் குதுபுகளானே வோரானே
பகரு முறுசல மாநபிகளானே
பாரிலுயர் மறைநானகினானே
தகை சேரடிமை நின்னோடு இரந்தேன்
தங்கிக் கைக்கொள்வாய் தகையோனே.''

என இரங்கும் நிலையும் ஒப்பிட்டுக் காணலாமன்றோ!

''நீ உன்னில் இறந்துவிடும்படி இறைவன் உன்னைச் செய்து, அவனில் உன்னைவாழும்படி செய்தலே''சூஃபியம் என்ப.''தன்னை அறிநதவன் தலைவனை அறிகிறான்'' [நபிமொழி]. தலைவனை அறிந்து தலைவனோடு ஒன்றுபட்டு விடுகிறான். ''தன்னையறிந்தல் அல்லவோ தனது பொருளறிந்தால், தானேதான் தானேதான் தம்பிரானுமாகும்'' [பிஸ்மில்] குறம். எனவே, நான்வேறு நீவேறு என்பது நாயனுக்குப் பகையாம். [பிஸ்மில் குறம்] இறைவனே, தான்வேறு நீவேறு அல்ல எனும இந்நத்துவ நிலைபறறி மீரா னொலி பாடும் பாவனைத்தை,

''என்னைப் படைத்த ஆதி இரணம் நல்கும்
இறையோனே உனைப் போற்றுவதற்கு
இன்னபடி வகை என்று அறியேனே ஏழைக்
கருள்செய்வாய் இணையற்றோனே
முன்னே நீவேறே நான வேறே முகப்பத்
தொன்றலலோ முதல்வனே
வன்னம பிறந்தால் நானநீ என்ற
வழககைக் கழல் செய்வாய வரிசையோனே.''

எனும் பாடலின்கண காணலாம்.

நாகூர் ஹலரத் ஷாகுல் அமீது அவர்களின்பால் அமைந்த பேரன்பு மேலீட்டாலும், அவாகள் தரிசனையில் கூறியதாலும் மீராஞெலி கூரங்குடியில் ஒரு பள்ளியினை நிறுவினா. இதனை,

தனது தரிசனமதில் வந்த தேசிகர்
உரையது போலப் பளளியிது
கட்டினேன் பலன பெறவே கூடும்
அவருள்ளமது போலக் கிருபையுறருளிப்பீர் ''

என்றும், மேலும் பலவாருககூறி ஆவர்தம்அருள் வேண்டுகிறார்.

நாகூரொலி ஷாகுல் அமீது ஆண்டகையின வரலாற்றுக் குறிப்புகளைத் தமது புகழப் பாமாலையில் இடைமிடைநது இனிது பாடியுள்ளார்.

[அ] தஞ்சை மன்னனுக்கு உதவிய நிகழ்சசியினை,

''தஞ்சை மன்னனைப் பிடித்த தக்க பலாயைத் தீர்க்க
கெஞ்சினதால அனறவன கேடறவே ரஞ்சிதமாய
புருவொனறழைத்து முனபு வைததிருந்த சூனியத்தை
அறவே வெளியாககி விட்ட ஆணடகையே.''

]ஆ] கடலில் தவித்த கலத்தினிற்கு நாகூரொலி தனது கரத்திலிருந்து கண்ணுடியை வீசியெறிந்து உதவியதனை,

''கைக்கண் ணுடியை விடுத்தே
கடலி நுகா வங்கவளை
நண்ணுமலே அடைத்த நற்றவமே.''

[இ] மற்றொரு அற்புதந்தனை,

"எண்ணுமல் புதல்வனின்கை
தலபீகு பொங்கு கடலில் விழ
அதையுடனே நீட்டு கரத்தில்
வருந்தி மதலையிடம்
அளித்துக் கரந்த ரட்சகரே!"

எனறும் பலவாறுக அவர் தம் புகழ்விரித்துப் பாடியுள்ளார்.

உண்மை குருவினை-ஷெய்கினைக் கண்டுகொள்ள சிறப்பாக 'தௌஹீது மாலை 9, 10, 11, போன்ற பாடல்களில் அறிவுரைக்கிறார்.

கலிமாச் சிறப்புப் பற்றி தௌஹீது மாலை 5, 14 போன்ற பாடல்களில் கூறியுள்ளார். எனினும், கலிமாவின் சூட்சம எழுத்தினை உளளுணர நாலெழுத்தான அல்லாஹு - ஹுவில் தனித்திருக்க-ஒன்றியிருக்க உரைக்கும்,

"அட்சரத்தில் ஐந்தெழுத்தை அறிய லாயிலாக
அதுபளு எனறகற்றி பகாவேழ மகத்திருத்தி
நிச்சயமாக நாலெழுத்தில் நின்று உறுதி கொள்ள
நினைக்கும் எழுத்தொனறிலும் தனித்திருப்பது வுஞ்சரி."
[தௌ-மாலை-6]

எனும் பாடல் ஞான நயந் தோன்ற விளங்குகிறது.

சரக்கலை, அது தனிக்கலை, நாசியில் சுவாசம் பன்னிரண்டு அங்குலங்கள் ஓடுகிறது, அவற்றில் எட்டு அங்குலம்தான் உள்ளே செலகிறது என்றும, நான்கு அங்குலம் வீணுகி விடுவதால் ஆயுள் குறைகிறது. "இடகலையும் பிங்கலையும் வெறுங்காற்றென்று, எண்ணுதே நான்கு சத்தும் இதற்குள்ளாச்சு" [விஞ்ஞான தீபம்) எனவே இந்நானகு அங்குலத்தையும், பக்குவப்படுத்தி யோக சாதனை புரிந்து, சாதனையில தரிசிக்க வேண்டும். சுவாசம் எனனும் புரவியினை அடக்கி ஆளவேண்டும். கதிர்மதி நடுவழியில் (காபகௌசைனி)-விற்போல வளைந்த புருவ மத்தி. "தன்னையறியும் தலமெது சொல்லடி சிங்கி—அது-கண்ணிடையான நடுநிலையல்லவோ சிங்கா" (ஞான-ரத்-குறவஞ்சி-பீரப்பா) "நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி-உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடும் மநதிரம்" (திருமூலர்) இதனை இறை தரிசனம் பெறும இடமென்று கூறுவர். 'நுதல் நடுவே காப கௌ சைனி கண்ணுன் பார்வையொளி ஹக்கென்றறிவீரே" (பிஸ்-குறம்). அதனில் ஏற்றமுறக் காண வேணடும். அடியானின் இஷ்கின்-முஹப்பத்தின் முன்

-'உலைவாயின் கண் உருகும் மெழுகு போல' அல்லாஹு கல்பினில் ஒளியாக இருக்கிறன. 'குலூபுல் முஃமினிய்யன் அர்சுல்லா'- 'கல்பே-இறைவன் இருக்கின்ற சிம்மாசனம் (நபிமொழி) நெஞ்சுட் சோதியாக நின்றிலங்குவோனே (ஞானப்புகழ்ச்சி-97)-இறைவன் உற்றறிந்திடாத பேர்களுக்கு என்றென்றும இருளாகவே இருக்கிறன். இதனைத்தான, 'ஆதிக்குமுன அநாதிககுமுன கருக்குழி முந்த இருளறை' (ஞான-ரத-குற) என்றும, பிற சித்தர்கள் இதனையே ''ஒளிக்கு'' ஒளிதரும் இருள உரு'' என்றும் கூறுவா. இவறறையெலலாம் சூட்சமாக — யோக இரகசியங்களைப் பொதிந்து,

'தகையான வாசி நாலு மூன்றில் நான்கு பாழே
கண்டிப்பாயிதில் அகறறி நிறுத்தல தரிசிகக வேணும்
கலையே'' (18)

''கலைகளான குதிரையோட்டங் கடந்திடாமலதனை
கதிரமதி நடுவழியில ஏறறக காணும நலலருளே
உலையின வாயின மெழுகைப்போல உருகும கலபில்
ஒளிவே
உறறறிந்திடாத பேர்களுளம எனறெனறும் இருளே''
(தௌஹீது மாலை—19]

என்றும் மீராஞெலி பாடுகிறர். 'உலையின் வாய் மெழுகைப் போல' எனும் உவமையினை இரு இடங்களில் (தௌ-மா 19; முகை—அகவல் 14) அமைதது்ப் பாடியுள்ளார்.

முஹ்யித்தீன் ஆணடகையினை 'காதிர், முகியித்தீன்' ''மெய் ஞானி', 'அருள் யா முகியித்தீன, ''பகதா முகியித்தீன்' வள்ளல முகியித்தீன்', குத்பு முகியித்தீன' [மு பைத்து-12-13-14-15-17 -19]எனறும். 'வரிசை முகியிததீன' (முகை-அக-7) எனும் அடைமொழிகளில் பாடியுள்ளமை காணலாம்.

வாசியினை (சரம், சுவாசத்தினை 'பேசா எழுத்து, எனப) மீராஞெலி 'ஊமை எழுதது' என (ஞானப்பாடல்-3] குறிப்பிடுவதைக் காணலாம். சுவாசக் கலையின் இட, பின், சுழிமுனை பற்றி தௌஹீது மாலை-14இல் குறிபபுரைக்கிறர்,

இற்றை ஞான்று யோகம் (yoga) பற்றிய அருமை பெருமை பேசுவது, அதனை அலசி ஆராயவது நாகரிகமாகக் கருதப்படுகிறது. அதனை இஸலாமிய சூஃபி ஞானியாகள், அன்றே

ஓர்ந்துணர்ந்தறிந்திருந்தார்கள். தொழுகை, திக்று போன்ற வற்றினூடே இக்கலையின் துணைகொண்டு, மனமொன்றி-இறைத் தேடலிலும்-முடுகுதலிலும் வெற்றி கண்டனர் என்பது கணகூடு, மீரானொலியாரும, பிற தமிழகத்துப் புலவர் ஞானியர்களான 'பீரப்பா'', குணங்குடியார்'' 'ஞானியாரப்பா', 'பஷீரொலி' போன்றோரின் வாழ்வும் வாக்கும் யோக தத்துவம். (yoga Philosophy) பற்றிய அருங்கருத்து வளங்களைத் தருவனவாய் அமைந்துள்ளன. அவற்றினை ஒழுங்கு படுத்தி வெளிக் கொணரு வது நமது தலையாய கடமையாம்.

குமரி மாவட்டத்தில் சூரங்குடி சூழ் பகுதிகளெல்லாம் இஸ்லாமியமும். அதன்ஞான போதமும் தழைத்தோங்க. பக்தித் தொண்டு புரிந்தோர்களுள மீரானொலி குறிப்பிடத் தக்கவராகத் திகழ்ந்தார், இஸ்லாமிய சூஃபி ஞான இலக்கிய வளர்ச்சிக்கும் இவர் ஆற்றிய அரும்பணிகள் மறந்தலாகாது. அவர்தம் வாழ் வும் வாக்கும் தொகுப்போம்; வகுப்போம் நல்வழி!

# மேலப்பாளைய ஷெய்கு பூஅலி ஷாஹ்மதார் ஆலிம்

ஆதநபி வாழையடி வாழையாக வந்துதித்த நபி இத்ரீஸ் கால்வழி—அலிஇப்னு அபீதாலிப் (ரலி) பரமபரையில — பானி பட்டில (Panipet) மறைந்த மகான பூஅலி கலந்தர் ஷரீபுத்தீன (ரஹ்) சந்ததியில தோனறிய பூஅலி முஹம்மது மஸதான (ரலி) அவர்களுககும் ஸீ அய்பு கிளையில உதித்த பாத்திமாவிற்கும திருமகனாக ஹி. 1289 ரபியுல அவ்வல திஙகள் பிறை ஒனறில ஷாஹமதார் பிறந்தார்.

ஷாஹ்மதாரின் பத்தாவது வயதினில் தந்தை தாயர் மறைந் தனர். இவரது மூத்த சகோதரியை மணந்த வங்கன் முஹமமது அபுபககர் லெப்பை இல்லத்தில் நெசவுத தொழிலில ஈடுபட்டார. இளமையிலே அருங்குணங்கள் அமையப் பெற்றவராகத திகழந் தார். இறைவழி ஒழுகுதலும், தீனநெறிப் பேணலும் மிக்கவராய் விளஙகினார. திருககுர்ஆன் ஓதுதல், நாளும் ஐவேளைத தொழுல, நோன்பிருத்தல், திக்றுகளில ஈடுபடல் எனபனவறறில கருத தூனறியவராகக் காணப்பட்டார, இறைநாட்டததிலும் தேட் டத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொணடார்.

ஷாபிய்யா உலமாக்களில் சிறந்தவராகத் திகழ்ந்த அலஆலி முல்பானில் முகம்மில் விஸ்வா அப்துர் ரஹ்மான ஆலிம் சாகிபு கலீபத்துல் புகாரிய்யா அவர்களிடமும், ஜமால் அஹமத அலி ஆலிம் சாகிபு புகாரிய்யா இவர் (அல் ஆலிமுல் உரூஸ மாப்பிள்ளை லெப்பையின் கலீபா ஆவர்) அவர்களிடமும் பிகஹ. ஹதீது, தப்ஸீர் முதலியவைகளைக் கற்றுத் தேர்ந்தார் பின் பெரமபூர் ஜமாலியா மத்ரஸா ஆசிரியரும் சூஃபிகளுள் தலைசிறந்தவருமான ஹஸ்ரத் மதார் ஆலிம் சாஹிபிடமும, ஹாபிஸ ஹஸரத் பக்ருத்தீன் ஆலிடமும் இஸ்லாமியக் கலை ஞானங்களைக் கற்றார். ஆதமீகத் தந்தையாக இலங்கிய அல் ஆரிபு ரப்பானி மதார ஆலிம் சாஹிப் கபரல்லாஹு லெஹு அவர்கள் ஷாஹ்மதாரின ஒளிமயமான எதிர் காலம் கண்டுணர்ந்து ஆசிாவதித்தார். ஹிஜரி

1130இல் பாளையங் கோட்டை புகை வண்டி நிலையத்திற்கு அண்மையில் அடககமாகியுள்ள மெய்ஞ்ஞானி அஷ்ஷெய்கு முகமமது லெப்பை (ஒலி) அவர்கள் வாழ்ந்தபோது, ஷாஹ் மதார் இவர்களை தரிசித்து வாழ்த்தப்பட்ட நற்பேறும் பெற்ருர்.

இளமையிலேயே கைவல்லிய நவநீதம். விசார சாகரம் ஞானவாசிட்டம. ஒழிவிலொடுக்கம, வேத புராணம், பீரப்பா பாடல்கள குணங்குடி மஸதான பாடல்கள், மணி, முத்துமாலை போன்ற ஞான நூல்களை ஆய்ந்த வண்ணமிருந்தார. மணிமுத்து மாலை' இயற்றிய ஷெய்கு முஹம்மது அப்துல் காதிர் ஸெய்னுத்தீன ஷாஹன ஷாவின* வாழ்வியலை—வளமார்பேறுகளை அறிந்து தென்காசிக்கு நேரில் சென்று சந்தித்து அறிவுரை பெற்ருர. சில காலங்களுக்குப்பின் மேலப்பாளையத்தில பூஅலி பொத்தையன் தரகனுர இல்லததில் ஹஸரத் ஷெய்கு ஷாஹன் ஷா (ரஹ) காதிரிய்யா; ஷாதொலியயா, நக்ஷபந்திய்யா மூன்று தரீகா வழிகளிலும் ஷெய்கு பூஅலி ஷாஹ் மதார் ஆலிம் சாஹிப் அவர்களுக்கு கிலாபத் கொடுத்தார். 'வஹதத்துல் உஜீது'' என்ற ரிஸாலாவையும் அக்மல் ஹுஹுதென்ற ரிஸாலாவையும் அன்பளிப்பாக கொடுத்து ஆசீர்வதித்தார்.

ஷெய்கு பூஅலி ஷாஹ்மதார் ஆலிம் சாஹிப் தன் சீடரான கான்சாபுரம் பீர் முஹம்மது ராவுத்தருடன் கீழ்க்கரை சென்று கல்வத்து ஆண்டகையினை தரிசித்து அவர் தம் நல் அருளும் திட்சையும பெற்ருர. அடிக்கடி செனறு தனது அகமிய ஐயங்களை தீாத்து வந்தாா. கலவத்து நாயகத்தின் பாட்டனுர் தைக்கா சாஹிபு அப்பா கையால எழுதிய ''உலூமுத்தீன் மஸாயிலுஸ்ஸாலிகீன' கிரந்தத்தினை கல்வத்து ஆண்டகையின் திருக்கரங்களால் பெற்ற பெருமை இவருக்குணடு கலவத்து ஆண்டகை தன புதலவி ஆயிசா நாயகியிடம் இவரைச் சுட்டி, கூடப்பிறந்த சகோதரர் எனக் குறிப்பிட்ட சிறப்பும உணடு.

---

ஹஸரத் ஷெய்கு முஹம்மது அப்துல் காதிரி ஷெய்னுத்தீன் ஷாஹன் ஷா (ரஹ) தென்காசியில பிறந்தவராவர். வேத ஞானத் திறவுகோல், மணிமுத்துமாலை, முபீதத்துல் மூமினின் முரீது விளகக இரத்தினச் சுருக்கம, மளாஹிருத்தீன போன்ற பல அரிய நூல்களை இயற்றியவா ஷாதுலிய்யா, காதிரிய்யா, நக்ஷபந்திய்யா தரீகா ஷெய்குமார்களின் குருவாக—மஅரிபததின் மாமேதையாக விளங்கியவர். அவர் மறைந்த நாள் ஹிஜ்ரி 1345 ரபியுல அவ்வல் 9 தேதி (கி. பி. 1926 செப் 18 தேதி) இவரின் தந்தையார் ஹஸரத் ஷெய்கு முஹம்மது ஹனீபத்துல் காதிரி ஷாஹன்ஷா (ரஹ்).

தமிழக சூஃபி ஞானிகள் நடுவண் சிறப்போடு இலங்கும் பெரியார மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா அவர்களாவார். 'பீர்முகம்மது' என்னும் தொடரில இடம்பெறும் 'பீர்' என்னும் பாரசீகச் சொல்லுககு ஆத்மீக குரு' எனபது பொருள் 'முஹமமது' எனனும் அரபுச் சொல 'புகழப்பட்டவர்' எனனும் பொருளைக் கொணடது. 'முஹம்மது' எனனும் பெயரை முதலிற் சூட்டப்பெற்றவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களேயாவர். கள். தமிழகம், கேரளம ஆகிய மாநிலங்களைப் பொறுத்தவரை ,பீர் முஹம்மது' எனற தொடராட்சியை முதலிற் கொண்டவர் மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா அவர்கள் ஆவாாகள்.

'பீர்முகம்மது' என்னும் பெயர் இறைவனல் தமக்குச் சூட்ட பட்டதாக இப்புலவர் ஞானி குறிப்பிட்டுள்ளார்கள்.

''பாருலகும் வானுலகும் பார அறுசும் குறுசும்
தாருலகும் ஒன்ருய்ச் சமைத்த நாள பீாமுகம்மது
என்றழைத்துப் பேசி அவர் இருத யத்தில
உன்னொளிலைக் கணடுவரச் சொனனுய் என் காவலனே.''

இறைவன் அமைத்த பெயரைக் குருவும் தமக்கிட்டதாக இன்னெரு பாடலில் அவர் குறிப்பிட்டுள்ளார்,

''சிறுமலுக்கர் சிகரமெய்த்தருள் செல்வனிரு கண்ணற்றவன்
பிறகு நட்பொடு குருவெனக்கிடு பேர்பீர் முகம்மது.''

மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த தென்காசியில் தோன்றினுர்கள். அவர் தந்தை சிறுமலுக்கர் என்பவர்; பாட்டனுர் வாவாஞ்சி என்னும் பெயருடையவர். மெய்ஞ்ஞானியார் இச் செய்திகளைத் தமது நூல்களில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்:

...ஞான வல்லபம்
சிந்தையுட் டெளிந்த
சிறுமலுக்கர் செலவன்யான்''

''தென்காசி நாடு சிறுமலுக்கர் என்னுமவர்
தன்பாலன் இக்கதையைச் சாற்றினன்''

"வேதகுல வாவாஞ்சி பேர ஞன
வேந்தரெனும் சிறுமலுக்கர் ஈன்ற பாலன்
நீதமிலா திந்நூலைப் பொய்யென் ருமல்
நிலைநிறுத்தப் பீர்முகம்ம தென்போன யானே.''

இப் பெரியாார் பிறந்த ஆண்டு தெளிவாகத் தெரியவில்லை. காயல்பட்டினத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கியிருக்கும் மெய்ஞ்ஞானி சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்களின் சமகாலத் தவா மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா அவர்கள் என அறிய முடிகினறது சதக்கத்துல்லாஹ அப்பா அவர்கள் தம்மை வாழ்த்திய செய்தியைப் பீர்முகம்மது அப்பா அவர்கள்,

> ''மனமது மகிழ அறிவையு மறிந்து
> வழுத்தினுர் சதக்கத்துல்லாவே.''

எனப் பாடலொன்றில் குறிப்பிட்டுள்ளார். இரு ஞானியரும் சந்தித்த செய்தியை ஞானமணிமாலை உரையாசிரியர் எம். ஏ நெய்னு முகம்மது பாவலர் குறிப்பிட்டுள்ளார்கள். இச்செய்தியை மு, செ. மு. முகம்மது அப்துல் காதிர் என்பாரும் உறுதிப் படுத்துகின்ருர். இந்தியாவை ஆண்ட மொகலாயப் பேரரசர் அவ்ரங்கசீப்பின் காலத்தவரவார் ஞானி சதக்கத்துல்லாஹ. அவ்ரங்கசீப் கி. பி, 1658 முதல் 1707 வரை ஆட்சிபுரிந்துள்ளார். எனவே பீர்முகம்மது அப்பா அவர்கள கி. பி. பதினேழாம் நூற்ருண்டை ஒட்டி வாழ்ந்தவர் எனத் தெரியலாம். பீர்முகம்மது அப்பா அவர்கள் 'திரு நெறி நீதம்' என்னும் நூலை ஹிஜ்ரியாண்டு 1022இல் பாடியதாகக் கூறியுள்ளார்கள். அக்கூற்று,

> ''குருநபி ஹிஜ்ரத்தாகி குவலயத் தாயி ரத்தின்
> இருபத்தி ரெண்டாமாண்டில் இயம்பிடும் ரபியு லாகிர்
> கருமமென் றிருப தன்று காரண வெள்ளி நாளில்
> திருநெறி நீதம் பாடத் திருவருள பெருகத்தானே.''

எனும் பாடலில் இடம் பெற்றுள்ளது. இச் செய்தியும் மேற்கண் காலவரையறையை அரண் செய்ய உதவுகின்றது.

பீர்முகம்மது அப்பா அவர்கள் பிஞ்சு மனப் பிள்ளைப் பருவத் திலேயே பெற்ருேரையும் பிறந்த பெரும்பதி தென்காசியையும் பிரிந்து சென்ருர்கள். அவர்கள் வாழ்நாளில் அதிக நாட்களை— ஏறத்தாழத் தொண்ணூற்றைந்தாண்டுகளை காடுகளிலும் மலை முழைகளிலும் தங்கிச் செலவிட்டதாக தெரிய வருகின்றது. முன்னைய திருவிதாங்கூர் அரசின் மலைப் பகுதிகளிலும் அவர்கள் தங்கி ஆன்மீகப் பயிற்சிகளைப் பெற்றுள்ளார்கள். யானைமலைப் பகுதியில் பதினைந்தாண்டுகள் அவர்கள் நிட்டையில் ஆழ்த்திருந் திருந்த பகுதிதான் இன்று 'பீர்மேடு' (Peermade) என வழங்கப் படுகின்றது.

பீர்முகம்மது அப்பா அவர்களின் சமாதி தக்கலை என்னும் ஊரில் உள்ளது. அவ்வூர் கன்னியாகுமரி மாவட்டத்தலைநகராகிய நாகர்கோவிலிலிருந்து பத்துக்கல் தொலைவில—திருவனந்தபுரம சாலையில்—உள்ளது. அவ்வூரிலுள்ள தர்காவில் ஆண்டுதோறும் இஸ்லாமியத் திங்களாம் ரஜபு பதினன்காம் நாள் இரவு ஆண்டு விழா நடைபெறும். அவ்வாணடு விழாவில் பெருந்திரளாகக் கூடு கின்ற பல்சமய அன்பர்கள் மத்தியில் பீர்முகம்மது அப்பா அவாகள் பாடிய 'ஞானப் புகழசசி' எனனும் நூலின் பாடல்கள் இரவிலிருந்து காலைவரை பாடப்பட்டு வருகின்றன.

பீர்முகம்மது அப்பா அவர்கள் பல்துறைச் செல்வராக விளங்கி யுள்ளார்கள். சூஃபி ஞானியாம் பீர்முகம்மது அப்பா அவர்கள் இறைநேயச் செல்வர்களாம் வலியுல்லாக்களில் ஒருவராவார்கள். இஸ்லாமியச் சட்டதிட்டங்களைப் பாடல்கள் மூலம் அறிவிக்கும் இப்பெரியாரை இஸ்லாமியத் தமிழுலகம் 'மாாக்கமேதை' யாகவும் மதிக்கின்றது. பதினெண சித்தர்கள் அருளிச் செய்த 'பெரிய ஞானக்கோவை' என்னும் நூல் தொகுதியில் பீர்முகம்மது அப்பா அவாகளின் ஞானரத்தினக் குறவஞ்சியும் இடம் பெற் றுள்ளததாலின் அவர்கள் சிததராகவும சிறந்திருக்கின்றார்கள். சாதி சமயங்கடந்த நிலையில் அனைவராலும் 'அப்பா' என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுவதும அவர்தம் செல்வாக்கை எடுத்துக் காட்டுகின்றது.

மெய்ஞ்ஞானி பீர்முகம்மது அப்பா அவர்கள் பாடிய பாடல்கள் பதினெண்ணாயிரம் ஆகும். அவர்கள் பாடல்களில் இன்று நூல் வடிவில் கிடைப்பவை:

| | நூலின்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | ஞானப்பால் | 33 |
| 2. | ஞானப பூட்டு | 39 |
| 6. | ஞானப் புகழ்ச்சி | 687 |
| 4. | ஞானமணிமாலை | 242 |
| 5. | ஞானக்குறம் | 73 |
| 6. | ஞானரத்தினக் குறவஞ்சி | 64 |
| 7. | ஞான ஆனந்தக் களிப்பு | 16 |
| 8. | திருமெய்ஞ்ஞானச் சரநூல் | 30 |
| 9, | ஞான நடனம | 10 |
| 10. | ஞான முச்சுடர்ப் பதிகங்கள் | 238 |
| 12 | ஞான விகட சமர்த்து | 4 |

12. மஸ்ரிபத்து மாலை 12
13. மெய்ஞ்ஞான அமிர்தக்கலை 56
14. மிகுராசு வளம் 11
15. பிசுமில் குறம் 601
16. ஈடேற்ற மாலை
17. திருநெறி நீதம் 2991

மெய்ஞ்ஞானியார் அவர்களின் பாடல்கள் இடம் பெற்ற இன்னும் சில நூல்கள்:

1. ஞானத் திறவுகோல்
2. ஞான சித்தி
3. ஞான உலக உருளை
4. ஞானக்கண்
5. ஞான விகட சமர்த்து
6. ஞான மலைவளம்
7. மெய்ஞ்ஞான களஞ்சியம்
8. ரோசு மீசாக்குமாலை

எனப் பேசப்படுகின்றன. ஆயினும் இந்நூல்கள் இன்று அச்சு வடிவில் கிடைக்கவில்லை.

**ஞானப்பால்:** வெண்பா, ஆசிரிய விருத்தம், கலித்துறை யாப்பு முறை கொண்ட முப்பத்து மூன்று பாடல்களாலான ஞானப்பால் மெய்ஞ்ஞானக் கருத்துகளை மறைபொருளில் மலர வைக்கின்றது,

"விண்ணொளி காண வேண்டின்
மெய்யிறை யருளி னாலே
கண்ணொளி யுருகச் சோத்துக்
கருத்தொளி நடுவில் நோக்கிப்
பொன்னொளி மேவும் வாசிப்
பொருளரச மருந்தி மேலாற்
தன்னொளி கண்டு ஞானத்
தானவனாக லாமே"

என்னும் பாடல் ஞானப்பாலின் இலக்கியப் போக்குக்குச் சான்று.

**ஞானப்பூட்டு:** உசேனி ராகத்திலும், ரூபக தாளத்திலும் ஆன கீர்த்தனை ஒன்றனையும், வெண்டுறை, ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துறை, கலிவிருத்தம், கலிவெண்பா ஆகிய

யாப்புக்களாலான பாடல்கள் முப்பத்தெட்டனையும் கொண்டி லங்கும் 'ஞானப்பூட்டு' ஞானச் செல்வங்களைத் தன்னுளபூட்டி வைத்திருக்கிறது. காவலன் இறைவனிடம் காப்பினைநாடும் அப்பா அவர்களின் கருணை உள்ளத்தை,

''அஞ்சாமல் நின்றுள மைம்பூத மஞ்சு மறையி னின்றே
ஓஞ்சாம லோடிய வாசியைக் கண்டுள முடகலந்து
மிஞ்சாமல் நின்றவோர் மெய்வழி கண்டபின் மேலவன்றன்
எண்சாணுக்குள நின்றெனைக் காத்தருளுமென கண்மணியே'' ('9)

என ஞானப்பூட்டுப் பாடல் நவிலுகின்றது. இறைவனின் பெருமையை இநநூலில் 'ஏக ஆதி சோதி நீதியே', 'ஆளுமிறை யோனே' 'ஏட்டிலடங்காப் பொருளே', 'கண்மணியே' மனன வனே', 'தவ்வை பிதாவில்லாத தானவனே,' 'ஏகா', அரசர் கோவே', 'இணையொன்றில்லாத இறையோனே' எவ்றெல்லாம் பாடிச் சிறபபிக்கின்றார்கள். பீரப்பா அவர்கள், சுழிமுனைவாசியைக் 'ஏழி'களில நிலைபெறச் செய்யும் பீரப்பா அவர்கள் முயற்சியை முப்பத்தெட்டுப் பாடல்களில் ஐம்பத்து மூன்று இடங்களில் காண முடிகின்றது.

ஞானப் புகழ்ச்சி

'ஆருறுக்கப்பால்' எனத் தொடங்கி 'அறுஹமர் ருஹிமீன்' என முடியும் ஞானப் புகழ்சசியில் அறுநூற்று எண்பத்து ஏழு பாடல்கள் அமைந்துளளன. நேரிசை வெணபா, பஃறொடை வெண்பா, வெளிவிருத்தம், ஆசிரிய விருத்தம், கலித்துறை, கலிவிருத்தம், கொச்சகக் கலிப்பா, வஞ்சி விருத்தம், கண்ணிகள் முதலிய யாப்பு முறைகள் இநநூலில் இயன்றுவரக், காணலாம். நூலின பெயரை,

''புகழ்ச்சி துஆ அடியேன் புகலுதற்கு நீ மனதுன்
மகிழ்ச்சி தருவாயே மகிழ்ந்து''

எனப் பீரப்பா அவர்களே நூலின் கண் நினைவுபடுத்திக் காட்டு கின்றார்கள்.

ஞானப் புகழ்ச்சிப் பாடல்கள் தொடக்கத்திலிருநது இறுதி வரை இறைஞ்சுதல் (துஆ) பாங்கில் அமைந்திருப்பதைக் காண இயலுகின்றது. யாப்பு அவையடக்கம், அடைக்கலம், சரணம, துஆ இரப்பு எனச் செல்லும் இந்நூலின் பகுதிகள், பக்தி நலங் கனியும் திறத்தன, இந்நூலின் 43-வது பாடலிலிருநது 157-வது

பாடல் வரை ஆட்சி செலுத்தும் அடைக்கலப்பகுதியில் 265 சிறப்புப் பெயர்களால் இறைபுகழ் இயம்பப்படுகின்றது. நூலின் இறுதியிலுள்ள 'துஆ இரப்பு, என்னும பகுதியில் இறைவனின் எணணற்ற குணங்களில் 375 உணர்த்தப்படுகின்றது. இஸ்லாமியத் திருமறையாம் திருக்குர்ஆனின் 'தோற்றுவாய்' அதிகாரமான 'அல்ஹமது சூராவை' மெய்ஞ்ஞானியார் பீரப்பா அவர்கள் இப்பகுதியில் இணைத்துப் பாடியுள்ளார்கள். ஞானப் புகழ்ச்சியில இடம் பெறும்,

> "ஆதம்பெறு மக்க ளெல்லாரிலும் நம்மை அன்பு கொண்டே
> வேதநபி யிறசூல் உம்மத்தாகவும் வெகு நன்றிகளுப்
> பா தங்கள் மேலும் சிரங்கீழு மாய்ப்பத்து நூறுயிர மாணடு
> ஓதித் தவஞ் செய்தாலும் போதா தாமன் றுகந்ததுக்கே."

என்னும் பாடலில் வெளிப்படும் நன்றியை நவிலும் அப்பாவின் பாடலுக்கு ஒப்பே காணமுடிவதில்லை.

ஞானமணி மாலை

ஷரீஅத், தரீகத், ஹகீகத், மஃரிபத் என்னும் நான்கு வகை ஞான நெறிகளை விளக்கிச் செல்லும் ஞானமணி மாலையின் பாடல்கள் வெண்பா, ஆசிரிய விருத்தம், கலித்துறை கலி விருத்தம், கலிவெண்பா, கொச்சகக் கலிப்பா முதலிய யாப்பு நிலைகளைப் பெற்று வந்துள்ளன. மணியான ஞானக் கருத்துக்களை மலையாக்கிக் காட்டும் இந்நூலின பாடல்கள் பெரும்பாலும் அந்தாதியாய் அமைந்துள்ளன. 242 பாடல்களினால் இலங்கும் இந்நூலின் அருமையை அறியச் சான்று நல்கும் பாட்டொன்று,

> "குருக்களற்ற ஞானமும் குணங்களற்ற சீடனும்
> கருக்களற்ற வித்தையும் களங்கமுற்ற புத்தியும்
> உருக்கமற்ற நெஞ்சமும உணர்ச்சியற்ற வினவாயலாம்
> சுருக்கமற்ற சோதியைத் தொடர்ச்சியற்ற தொக்குமே."

ஆசானில்லாத ஞானமும் நற்குணவொழுக்க மற்ற சீடனும் போல்வன பெருஞ்சோதியைக் கண்டும் பயன்படுத்தப் பார்க்காத பேதைமை நிலைக்கு உவமை செய்யப்படும் திறன் சுவைத்தின்புறத் தக்கது.

ஞானக் குறம்

சிற்றிலக்கியப் பிரிவில் இடம்பெறும் குறவஞ்சி அமைப்பு லில் பி ... டு ... வெண்பாக்களும்,

ஐம்பது ஆசிரிய விருத்தங்களும், பதின்மூன்று கலிப்பாக்களும் மூன்று கீர்த்தனங்களும் இநநூலில இடம் பெற்றுள்ளன ஞானம் பாடும் இச்சிற்றிலக்கியத்தில் குறத்தியின கூறறு குறுககிடுவதால 'குறம்' எனப் பெயர் பெற்று வருகின்றன.

> ''ஊற்றமுள கலிமாவி னுரையெடுத்
> தோதினேன் குறம் பாடினேன் ''

என இறைவாழ்த்தின் முடிவில் பீரப்பா அவர்கள் இந்நூலின் பெயரை நிலைநாட்டியுள்ளார்கள. இந்நூலின் முதற் பகுதியில் முகையித்தீன் ஆண்டவர் புகழ் பொலிகின்றது. அடுத்து பொலிவு களும் நீம்மத்தும் பொருந்தும் மகுமூது 'மலைவளமும வனப்பும் பேசப்படுகின்றது. பின்னர் மெய்ஞ்ஞானி அப்துலகாதிர் அவர்கள் மாசுமறுவற்ற வாசல்வளம் பேசப்படுகின்றது. அடுதது மாநபியார் மக்கவளம் கூறப்படுகின்றது. இறுதியான திருக் காரண ஞானியார் கை பார்க்கப்படுகிறது.

ஆசையால் எழுவது அனைத்தும் அழிநது விடுவதை இந நூலின் பாடலொன்று உணர்த்துகின்றது :

> மீனைக் கண்டெழு பூனை மடிந்தது;
> வீசக கண்டெழு திங்கள பொதிந்தது
> ஊனைக கணடெழு நாய்கண் மடிநதது
> ஊரைக் கண்டெழு கூவன மடிநதது
> தேனைக் கண்டெழு வீச்சை மடிந்தது
> ஷெய்கைக் கணடெழு ஞால மடிநதது'

### ஞானரத்தினக் குறவஞ்சி

ஞானரத்தினக் குறவஞ்சி என்ற இந்நூல் 'பதினெண் சித்தர் பெரிய ஞானக் கோவை' என வழங்கலாகும் சித்தா களின் பாடல் தொகுப்பு நூலில் இடம் பெற்றுள்ளது. எனவே பீரப்பா சித்தர் வரிசையில் சிறக்க இத்தொகுப்பு காரணமாகி விடுகின்றது. இந்நூலில் காப்புப் பொருளில் உள்ள களப்பா வோடு 66 கண்ணிகள் உள்ளன. சிங்கன்—சிங்கி உரையாடல் மூலம் இந்நூலில் தத்துவங்கள் தெறிக்கக் காணலாம். குறுகிய அடிகளில் இரத்தினச் சுருக்கமாகக் கூறப்படும் கருத்துக்களைக் காட்டும் சில பாடல்கள் :

> ''தன்னை அறியுந் தலமேது சொல்லடி சிங்கி!—அது
> கணணிடை யான நடுநிலை யலவோ சிங்கா!
>
> என்னவிதமாகத் தன்னை யறிவது சிங்கி'—அது
> [illegible]

இறையை அறிவது மெப்படிச் சொல்லடி சிங்கி—அது
இறையெங்கு நின்றிடுந் தன்னிலை வாகுமே சிங்கா!

தன்னுள் விளங்கும் தவமென்ன சொல்லடி சிங்கி!—அது
தன்னை மறந்து தவத்தி லிருப்பது சிங்கா!

என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி!—அது
ஒற்றைப் பொருந்தி நடுங்கி யிருப்பது சிங்கா!

என்ன விதமாக ஒன்றைப் பொருந்தலாம் சிங்கி—அது
எல்லா மறந்து மிருளா யிருப்பது சிங்கா!

திருமெய்ஞ்ஞானச் சரநூல்

''பொன்னுன மெய்ஞ்ஞான சரநூ லென்னும்
புகழ் பெரிய சாஸ்திரத்தின் புதுமை தன்னை''

*கன்னல் ரகச் செந்தமிழில் கவிதையில் சொல்லுற்ற பீரப்பா வின் படைப்பே திருமெய்ஞ்ஞானச் சரநூல். ஆசிரிய விருத்தங் கள் முப்பதாலானது இந்நூல். இந்நூலில் பீரப்பாவின் கவிதை யுள்ளத்தையும், கணித ஆற்றலையும், உடற்கூற்று வல்லமையை யும், உளவியல் சிறப்பையும் உணர முடிகின்றது. சரநூலின் தத்துவத்தை மேலோட்டமாகப் பார்க்காமல் நுட்பமாயுணர நுவலும் ஆசிரியர் கூற்றை நினைவுபடுத்துகிறேம் :*

''உலகுவர்க்குச் சரநூலை ஒழிப்பில் லாமல்
ஓதும்வகை யோதனவே உவந்து கேளாய்
நிலைகருமம் நிலையாது நெறியாய்க் கூறும்
நீடுழி வாழ்வரசு நிலைப்பதோடு
விலங்குவதும் வருங்காலஞ் செய்கா லங்கள்
வியனுறவே நிகழ்காலம் மரண காலம்
கலைபெரிய இந்நூலின காரணத்தின்
காட்சிதனைக் கருதிப்பார் காணும் தானே.''

ஞான ஆனந்தக் களிப்பு

*இந்நூல் 16 பாடல்களின் தொகுப்பு; இறைவனைக் கண்டு கொண்டேனே என்னும் பொதுக்கருத்து பாடல்களில் மேவிவரக் காணலாம். சிறந்த பண் அமைந்த இந்நூலின் சீரிய பாட லொன்று :*

'கொள்ளைக் குதிரைகள் கோடி—அவன்
கோட்டை யழிக்க வருகுமே ஓடி
வெள்ளைக் குதிரை மேல் ஏறி—வீதி
தப்பாமற் சுற்றிப் பரிலைய நிறுத்திச்

கள்ளனைக் காவலாய் வைத்துத்—தானும்
களளனுக் குள்ளே கலந்தே இருநது
உளளுறறுக கோட்டையை ஆளும்—நமக்
குறற பிரானையான் கணடு கொணடேன.''

ஞான நடனம

துன்பக் கடலிலிருந்து விடுதலை காண இறையருளை நாட வேண்டும் என்னும முறையில் இயற்றப்பட்ட இநநூல ஆசிரிய விருத்தங்கள் பத்தாலானது.

ஞான முசசுடாப பதிகங்கள

காப்புப் பதிகம், ஹக்கு முருதுப் பதிகம், மயில வலம்புரிப் பதிகம முதலிய இருபது பதிகஙகளைக கொணட இநநூலில் ஒவ வொரு பதிகத்திற்கும 12 பாடல்கள இடம் பெறறுளளன. இரு பதிகஙகளில மட்டும் பதினொரு பாடலகள வீதம் உள்ளன. இந நூலும் இறை ஞான போதத்தை இயமபும ஆற்றல பெற்றவை.

ஞான விகட சமாத்து

ஆன்மீகப் படித்தரங்களை உருக்குறியீட்டு முறையில் உணர்த்தும் இநநூலிலிருந்து நானகு பாடல்களே கிடைத் துளளன அவறறுள் ஒன்று பஃறொடை வெண்பாவாலானது. ஏனைய நானகும ஆசிரிய விருத்தங்களாலானவை.

மஃரிபத்து மாலை

பூமான் நபிகள் நாயகம் (ஸல) அவர்கள் போதித்த ஞான விளககம் மஃரிபத்தினை முப்பிரிவுகளில் இந்நூல் குறிப்பிடு கினறது. அப்பிரிவுகள பொருட்பால, அருட்பால, காமபபால ஆகியன. ஆதம், ஹவ்வா (அலை) தொடர்புடைய கருத்துக்களும், உலகத்தோற்றம் பற்றிய செய்திகளும இநநூலில கூறப் பட்டுள்ளன.

மெய்ஞ்ஞான அமிர்தக்கலை

ஐமபத்தாறு பாடல்களை அந்தாதியாகப் பெற்றிருக்கும் இதனகண இறைவன் பணபுகள் இயம்பப் படுகின்றன.

மிகுராசு வளம்

'விணணகமும் மண்ணகமும் வியந்துரைக்க வந்துதித்த அண்ணல்' நபிகள கோமான் (ஸல்) அவர்களின் விணணேறறத்தை விளக்கும் இநநூலில ஐம்பத்தாறு ஆசிரிய விருத்தங்கள் அந தாதியாக அமைந்துள்ளன.

ஈடேற்றமாலை

இந்நூலில் காப்பு வெண்பாவும், சரணம் என்னும் இசை பகுதியும் விரவி வந்துள்ளன. இந்நூல் பேச்சுவழக்குச் சொற்க அதிகமாக இடம் பெற்றுள்ளன, சான்றுக்கு ஒரு பகுதி :

''உலகில மனுக்குலமாய்ப பிறநது மூஹம்மதுடைய
உம்மத்தி லானேமென்று ஒருபேரை வைத்துக்கொண்டு
தலையைச் சிரைத்துத் தாடி வைத்துத் தண்டு தோலறுத்துத்
தானும் சரிச்சரியாய் நானுமிஸ் லாமென்று
குலத்து வழக்கமென்றுங குடி நிக்காஹுஞ்செய்து
குட்டியும் குழந்தையுமாய்ப் பட்டணத்துப் பன்றி போல
பெலத்த இஸலாத்துககிது போதுமெனறு சொல்லி
பெரிய கிழவனுகி, நரையுந் திரையுமாகி
குலத்து வழக்கமான நிலைத்த ஷரகை விட்டுக்
கூத்தில துலுக்கர் வேஷங் கொண்டாடி வந்தாப் போல்.''

பிசுமில குறம்

மௌலானா ஜலாலுத்தீன் ரூமி (ரஹ்) அவர்கள் பாரசீக மொழியில் படைத்த கருத்துக்களைத் தழுவி இயற்றப்பட்ட நூலே பிஸ்மில குறம். இந்நூலில் ஒரு வெண்பாவும் பத்து விருத்தங்களும் 590 கண்ணிகளும் உள்ளன.

'குறத்தியர் பாட்டு' என்னும் இலக்கிய மரபின இலக்கணம் தழுவிய இநநூல் 'பிஸமில்லாஹிர் ரஹமானிர் ரஹீம்' என்னும் அரபுத் தொடரின் சிறப்பை விளக்குகின்றது. 'அளவற்ற அருளாளனும் நிகரற்ற அனபுடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்' எனபதே அத்தொடரின் பொருளாகும். அத் தொடரின் உள்ளடக்கத்தைக கூறத் தொடங்கும் பீரப்பா அவர்கள் கீழக்கண்டவாறு மொழிகின்றார்கள்.

''நினைவுடன் பொருளு நிறைந்திடும் வகையும்
நீதியும் பிஸமிலோடும்
அனந்தமும் தெரிய அஹமத ருரைக்க
ஆதிதான் கிருபையாலே
கனஜய மாரும் மவ்லான ரூமி
கழறினர் அஹதியத்திலே
மனமது மகிழ அறிவையு மறிந்து
வழுத்தினர் சதக்கத் துல்லாவே.''

திருநெறி நீதம்

இநநூல நான்கு படலங்களாலானது. இந்நூல் முன்னர் மூவாயிரத்தறுநூறு பாடல்களைப் பெற்றிருந்தது அவற்றுள் சில இப்போது கிடைக்கவில்லே. சமயச் சட்டவொழுங்கு களையும், மெய்ஞ்ஞானக் கருத்துக்களையும், நாட்டுவளத்தையும் நவிலும் திறத்தன இந்நூற் பாடல்கள. அரபு நாட்டின் சிறப்பை அறிவிக்கும் பாடலொன்று:

"நாடினு மதிய நாடு
நகரினுக கதிய நாடு
நாடிய பலன்கை கூடும்
நபிகளும பிறந்த நாடு
ஓடிய கதிா மதிமின்
உலாவியே விலகும் நாடு
பாடியே தமிழ்க்கவி வாணர
பாட்டினி லடங்கா நாடே,"

சுந்தரத் தமிழில் மெய்ஞ்ஞானக் கருத்துக்களை வாரிவழங்கும் சூஃபி ஞானி பீரமுகம்மது அப்பா அவாகள்தாம மேவும் மெய்ஞ் ஞானக் கருத்துக்களை வெளிப்படையாகக் கூறுமல் பல்வேறு இடங்களில உருவங்கள் மூலமாகவும் குறியீடுகள் மூலமாகவும் உணர்த்தத் தவறவில்லே.

'சொலலத் தகுமலல விப்பொருளைத்
சுருட்டி மறைககிறேன் ஷரகுக்காக

என்பது ஞானப் புகழ்ச்சித் தொடர்.

''ஆறுறுக் கப்பால அணுவணுவாய் வந்துலகில்
வேறுரு மொப்பில்லா மேலோனே.''

எனத் தொடங்கும் பாடலிலுள்ள 'ஆறுறு' சித்தர்கள் மத்தியில சிறப்புற்றுத் திகழும் பரிபாஷைச் சொல்லாயினும் ஆழ்ந்து நோக்கும போது அருமையான பொருட் செறிவைக் காட்டிக் கொண்டிருக்கிறது அச்சொல். 'ஆறு—ஆறு'—முப்பத்தாறு தத்து வங்களையும்கடந்தவன்; ஆறு ஆறு (66)—அலிபு—ஒன்று; இரண்டு லாம்—முப்பதுமுப்பது; ஒரு ஹே—ஐந்து: ஆக மொத்தம் அறு பத்தாறு; 'அல்லாஹு' என்னும் ஆண்டவன் திருப்பெயரைக் குறிக்கும் பெற்றியது; ஆறு+ஆறு; (12) 'லாயிலாஹ இல்லல்லாஹு' எனனும் தொடரில் அடங்கியுள்ள எழுத்துக களின எண்ணிககையாகும் இக்குறியீடு என்றெல்லாம் எண்ணத்

தொடங்கும் இதயங்கட்கு ஆழிய வியப்பை நல்கும் பீரப்பாவின் சொல்லாற்றல் அற்புதமானது.

'அஞ்சுமறியாமல் ஐபேரும் காணுமல்
'மூலமறு நான் கோனறினில் மோகந்தரு முதல்வர்'
'ஒன்ருகி ரண்டாகி யுருவாகி நின்ற பயல்'
'முன்னுன்கு முகந்தரு முச்சுடரை)

எனவரும் தொடர்களிலும் அப்பா முத்திரையை அறியலாம். மனிதப் படைப்பின் மாண்பினைக் குறியீட்டுப் பாடலொன்றில் குறிக்கும் பீரப்பா அவர்கள்,

'அஞ்சுமேல் மூன்று மாகி யதனுடன் நாலு மாகி
மிஞ்சியே நாலு மொன்ருய் விணணதில் நிறைந்த சோதி
கொஞ்சியே யொன்ருய்க் கூடிக் குலாவியே சரசஞ் செய்தாற்
பஞ்சஙகளில்லை தேனும் பாலுமே யருந்த லாமே.''

எனப் பாடியுள்ளார்கள். தலை கண், மூக்கு, செவி, வாய்—இவற்றை அமைத்து அவற்றின் இயக்கத்துக்குத் துணையாக இரத்தம், தோல், நரம்பு ஆகிய மூனறையும் மனிதனிடம் இறைவன் நிலைபெறச் செய்துள்ளான். மனித நிலையில் ஸ்தூலம, சூக்குமம், ஆன்மம், பிரம்மம் என்னும் நான்கு தத்துவங்கள் உள்ளன. இவை நான்கும் நான்கு தன்மைகளுக்கு உட்பட்டவை. ஸ்தூலம உடலையும், சூக்குமம் உள்ளத்தையும் (கல்ப்), ஆன்மம் ரூஹையும் பிரம்மம் 'ஸிர்ரீ' என்பதையும் குறிப்பவை. இந் நான்கு நிலையிலும் இறைவனை எண்ணுவோர் 'விண்ணொளி' காண முடியும்!

மனிதவுயிரைப் பறிக்கும் மரணத்தை வேங்கையா உருவகித்துப் பீரப்பா பாடும் பாடலொன்று ஞான மணிமாலை யில் இடம் பெற்றுள்ளது. உருவகத்தின் மூலம் கருத்தை உணர்த்தும் அப்பா ஆற்றலுக்கு இப் பா சான்று.

''இலங்கும பொருளதனை யெல்லவரும் காணகில்
நலங்குதினி யாவதனை நாடார்—விலங்கினங்கள்
பத்தாறு மீர்பத்து நான்நூ ருயிரத்தில
வற்ருமல் நிறகும் மறைப்பொருளைக் கற்ருர்கள்
காட்டினுர் பாரெனவே காதைவனைத் துட்பொருளைப்
பூட்டினு ரொனறெனவே போதமுற—வாட்டமது
சூழ வனத்திலொரு சோம்பியிருந் தாற்போல்
மாள விருக்கு மனிதர்காள—ஏழைதனை
ஐவாய் வெருட்டி அவனேடிப் போயினைத்து

மெய்யான வோர்க்கிணற்றி லேவிழ்ந்து பொய்யான
வேர்பிடித்துத தூஙகிடவே வேங்கையதன் மேலிருக்க
ஏர் பிடித்த வஃதீ ரெலிநறுக்கக்—காலதன் கீழ
அக்கினியும் தேளும் மரவு மறக்காய்ந்த
சக்கரக் கோடாலி தான் மழுஙக—நெககுமிதில்
வந்திருப்ப தெண்ணுமல மானிடரே யுஙகள் மனச்
சந்தோஷத் தாலேன றழுமபுகிறீா—முாதவரும்
வேங்கை மவுத்தாம் விழுங்கிணறு மேதினியா
மேங்கிப் பிடித்தகாடி இந்நாளாம—தூஙக
நறுக்கல் கதிா மதியாம் நான்றதன கீழவந்
துறுக்குமோளி தாங்கபுறுக் குட்படுதல்—பெருக்கமீது
பாாத்துணரும் போதுமக்குப பாருண்டோ—வாழ்வதுணடோ?
தோத்திர முண்டோ? துணையுண்டோ—வேற்றுமையொன்
றில்லானை நெஞ்சே யிரவுபக லற்றிடத்தில
நலலானைத் தேடாய் நய்ந்து'

மனிதனை ஒருநாள் அவனது உயிரைப் பறிககக் கொடும்பசி கொண்ட வேங்கை துரத்துகின்றது தப்பி ஓடிஞன மனிதன. அவனுக்குக் கிடைத்த புகலிடமோ ஒரு கிணறு உயிர் பிழைக்க வேங்கை துரத்தலிலிருநது தப்பிகக—கிணறறில அவன குதிக்கின்ருன். வெயிலின் கொடுமையால கிணற்றுச் சுவா வெடித்துக் கிடந்தது. வெடிப்பு வழியாகப் படாந்த வேரைப பற்றுக கோடாகப் பிடித்த அவன் அந்தரத்தில் தொங்குகிருன. மேலே துரத்தும் வேங்கை கீழே நெருப்பும் தேளும் பாமபும்! அப்போது அவனைத் தாங்கி கொண்டிருநத வேரை இரணடு எலிகள் நறுக்கிக் கொண்டிருக்கின்றன. நெஞ்சைப் பிளக்கும் இந் நிகழ்ச்சியைக் கண்ட அவன் உள்ளத்தை மேற்கண்ட பாடல நினைவுபடுத்துகினறது. வேங்கையை மரணமாகவுமம, பாழுங் கிணற்றை மேதினியாகவும், வேரை நாளாகவும், நறுக்கும் எலிகளைக் கதிர்மதியாகவும் உருவகம செய்து காட்டும் பாடலைப் படித்து முடித்ததும் நமக்கேற்படும் நிறைவுக்கு அளவே இல்லை!

சூஃபி ஞானி பீரப்பா அவர்கள் மெய்ஞ்ஞானம் பாடிய உலகக் கவிஞர்களுள் உயர்ந்து விளஙகுகிருர்கள். வாழ்க மெய்ஞ்ஞானம! வளர்க பீரப்பா இலக்கியம!

# குணங்குடி மஸ்தான்

அல்ஹாஜ் எஸ். எம். சுலைமான், ஐ. ஏ. எஸ்.,

ஆத்மஞானிகள் நாடு சமயம் இவற்றிற்கு அப்பாற்பட்டு உலக மக்கள் அனைவருக்கும் சொந்தமானவர்கள். "உலகம் உயர்ந்தோர் மாட்டே", என்று தொல்காப்பியம் இயம்புகிறது. "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்", என்ற பரந்த நோக்குடையவர்கள் ஆத்மஞானிகள். தங்கள் திருவருட்பாக்கள் மூலம் ஆன்ம சக்தியைப் பெருக்கியும், இதையசுத்தியைப் பேணி வளர்த்தும் வந்துள்ளார்கள். அருட்பாக்கள் அதிகமாக மலர்ந்தது ஈரான் நாட்டிலேதான். தமிழகத்திலும் ஞானிகள் பலர் தோன்றி தரமான பக்தி இலக்கியத்தைப் படைத்துள்ளார்கள். தமிழ் ஞானிகள் சித்தர்கள் என அழைக்கப்படுவார்கள். இஸ்லாமிய ஞானிகள் சூஃபிகள் என அழைக்கப்படுவார்கள். தமிழகத்தில் தோன்றிய முஸ்லிம் ஆத்ம ஞானிகள் இஸ்லாமிய அருட்பெரும் ஞானத்தைத் தமிழ் மரபுடன் இணைத்து அமுதப் பாக்களை யாத்துள்ளனர். குணங்குடி மஸ்தான் சிறந்த மெய்ஞ் ஞானி; சிறந்த சன்மார்க்க மேதையும் ஆவார். அவரது திருப் பாடற்றிரட்டு முத்தான பக்தி இலக்கியமாகும். அதைத் தமிழறிந்த எல்லாச் சமயத்தினரும் படித்துப்படித்து இன்புறு கின்றனர்.

குணங்குடி மஸ்தான் சாகிபின் இயற்பெயர் சுல்தான் அப்துல் காதிர். முகவை மாவட்டத்தைச் சேர்ந்த தம் தந்தையின் ஊரான தொண்டியில் அவர் பிறந்தாரென்றும், தம் தாயின் ஊரான குணங்குடியில் அவர் பிறந்தாரென்றும் வேறுபட்டக் கருத்துக்கள் நிலவுகின்றன. 'மஸ்து' என்ற பாரசீகச் சொல் மயக்கம் தரக்கூடிய பொருளை, உள்ளக்கிளர்ச்சியூட்டக்கூடிய பொருளைக் குறிக்கும். இறைவன் மீது மையலாகி, தம்முணர்வை இழந்து, தம்மையே இறைவனில் அழித்துக் கொண்ட இறைப் பித்தரை 'மஸ்தான்' என்ற சொல் குறிக்கும். மஸ்தான் என்ற பெயரோடு அவரின் ஊர்ப்பெயர் சேர்ந்து குணங்குடி மஸ்தான் சாகிப் என்று ஆயிற்று. இவரது காலம் கி. பி. 1787 முதல் கி. பி. 1835 வரை ஆகும். உலகச் சந்தடியிலிருந்து ஒதுங்கி

இருக்க விரும்பிய இவர் காடுகளிலும் மலைக்குகைகளிலும் தவம் செய்தார். பின்னர் பல ஊர்களில் அலைந்து திரிந்து இறுதியில் சென்னை வந்தடைந்தார். இராயபுரம் என்னும் முட்புதர்கள் நிறைந்த பகுதியில் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கி தவம் இயற்றி தமது 47-ஆம் வயதில் முக்திநிலை அடைந்தார். இவருடைய சமாதி இராயபுரத்தில் உள்ளது. சென்னை மக்கள் இவரைத் தொண்டியார் என்று அழைத்தனர். இவர் நடமாடிய பகுதி தொண்டியார் பேட்டை என்று வழங்கப் பெற்று பின்னர் மருவி தண்டையார் பேட்டை என்று ஆயிற்று.

மஸ்தான் சாகிபின் பாடல்கள் தத்துவார்த்தமான அறவுரை கள் நிரம்பிய ஞானக்கருவூலங்கள். இறைவனின பரிபூரணம், ஏகத்துவம், ஒப்பற்ற வலலமை, நிகரற்ற கருணை இவற்றைத் தெவிட்டாத தீஞ்சொற்களால் பன்னிப் பனனி பாடியிருக்கிறார். அவருடைய பலாச்சுளைப் பாடல்கள் பக்தித்தேன் குடததில் ஊறியவை. அவை எளிய இனிய நடையில அமைந்திருப்பினும், நுணணிய மறைபொருள் பலவற்றைத் தம்முள் அடக்கி நிற்கின்றன.

மஸ்தான்சாகிப் இறைநேசர்களின் நாயகர், வலிகள் கோமான் முகையித்தீன் அப்துல் காதிர் ஜீலானி அவர்களைத் தம் ஞானக் குருவாகக் கொண்டிருந்தார். அவ்வாண்டகையை முன்னிறுத்தி "இணங்கு மெய்ஞ்ஞானப் பேரின்பக் கடலில் இன்னமுது எடுத்து எமககு அளிப்போன்". தமது என்று குரு வணக்கப்பாடலைத் துவங்குகிறார். 'இணங்கு மெய்ஞ்ஞானம்' என்ற தொடரால், வாழ்க்கையின் பல்வேறு துறையினரும் ஏற்றுக் கொள்ளுதற்குரிய மெய்ஞ்ஞானம்என்ற ஆழ்நத பொருளை வெளிப் படுத்துகிறார். குருபரனை ஒருபரனுகக் கொண்டாடிடும் அவர் சமநோக்கோடு "மதபேதம் ஓதி மதிகெட்டவர்க்கு எட்டாத வானகருணை வெள்ளம்" என்று போற்றுவார். மகாவித்துவான் சரவணப் பெருமாளையரவர்கள் தனது நானமணிமாலையில்,

> "கடல் சூழ் புவியில உளத்து இருளைக்
> கருணை ஒளியினுல களைந்து
> விடல் சூழ் பவரிற் குணங்குடியான்
> மிக்கோன் எனற்கோர் தடையுளதோ",

என்று பரவியுள்ளார். மஸ்தான் சாகிப் தன் குருபரனைப் பரவிய பாணியில் அவரது மெய்யன்பர்கள் அவரைப் பரவியிருப்பது

இறைவனை உடல், பொருள், ஆவி, அகம், புறம் எல்லாமாக வும், காணும் பொருள் அனைத்துமாகவும், காணாப்பொருள் எவை இருப்பினும் அவையாகவும் காண்பது இறையடியார்களின் இயல்பு. மஸ்தான்சாகிப் பாடுகிறார்:

''ஊனாகி ஊனில் உயிராகி எவ்வுலகுமாய்
ஒன்றாய் இரண்டும் ஆகி
உள்ளாகி, வெளியாகி, ஒளியாகி, இருளாகி
ஊருடன் பேருமாகிக்
கங்குல் பகலாகி மதியாகி ரவியாகி, வெளி
கண்ட பொருள் எவையுமாகி
நானாகி, நீயாகி, யவனாகி, யவளாகி
நாதமொடு பூதமாகி''

'கண்டபொருள் அத்தனையுமாகி நின்று, அவைகளுங்
காணாத காரணத்தைக்
கருதரிய சித்தாய், விசிதரமாய், நின்று
இலங்கா நின்ற காரணத்தை,''

என்று நயம்பட இசைக்கிறார்.

பக்திப் பாடல்கள், தம் மனத்தில் மண்டிக்கிடக்கும் மாசுகளை அகற்றித் தூய்மைப்படுத்தி, தொண்டு செய்யும் பரிபக்குவத்தை யும், இறையருள் நாட்டத்தையும் ஊட்டி வளர்ப்பன. மனதைப் புனிதப்படுத்த மஸ்தான் சாகிப் கூறும் அறிவுரையைக் காண் போம். வேட்டை மேற்செல்வோர் தம்முடன் வேட்டை நாயைக் கொண்டு செல்ல வேண்டுமே தவிர வெறி நாயை அல்ல. வெறி நாய் வேட்டை மீது பாய்வதை விடுத்து இட்டுச்செல்பவர் மீது பாய்ந்து கடிக்கும். இறையருளைப்பெற தவம், அன்பு, அருள், தொணடு ஆகிய பணபுகளைப் பொருந்திக்கொள்ளாமல், அகங் காரம், ஆசை, வெகுளி, அழுக்காறு முதலிய வெறிக்குணங் களுக்கு இடமளிப்பது வெறி நாய் கொண்டுவேட்டைக்குச்சென்று தம்மையே அழித்துக கொள்வதற்கு ஒப்பாகும். பாட்டு இதோ:

''வேட்டை பெரிதென்றே வெறிநாயைக் கைப்பிடித்துக்
காட்டிற் புகலாமோ கண்ணே றகுமானே''

மஸ்தான் சாகிப் எவ்வுயிரும் தம்முயிராய்க் காணும் தகைமையாளர். உலகிற் காணும் தீமைகளை அவர் தம்மீது ஏற்றி எழுப்புகின்ற உயிர்ப்புக் குரலைக் கேட்போம்:

'நஞ்செலாம் ஒன்ருய்த் திரண்டு உரு எடுத்த
கெடுநாகச் சரீரவம்பன்,''

என்பார்.

நம் குற்றங்களை அவர் தம் தலைமீது போட்டுக்கொண்டு நாம் உய்ய விழைகிருர். உலகைப் பற்றியுள்ள கொடுமைகளைக் கண்டு கணகலங்கி அழுகிருர். உலகம் உய்வது எககாலம் என்று ஏங்குகிருர். குறைகளை இறைவனிடம் முறையிட்டு ஈடேற்றம் பெறுவோம் என்கிருர்.

''உடல் குழைய நெக்குருகி விழிநீரும் ஆருக
ஊறுவதும் எக்காலமோ?''

என்று குழைந்து உருகுவார். நிராமயக்கண்ணியில்,

''கடலின் மடைகண்டதெனக் கண்ணீர் கரை புரளும்
அடியன் முகம் பார்த்திறங்கி அருளாய் நிராமயமே''

என்று கனிந்து உருகுவார்.

''அன்போடு உருகி அகங்குழைவார்க்கன்றி
என்போல் மணியினை எய்த ஒண்ணுதே''

—என்பது திருமந்திரம்

ஆசை பெருகப் பெருக உயிருக்கு நேரும் துன்பங்களும் அதிகரிக்கும். குறையக் குறைய துன்பங்களும் குறையும். ஆசைக்கு முற்றுப்புள்ளி வைக்கும்போது இன்பநிலை வந்தெய்தும். இதை அழகிய எடுத்துக்காட்டு மூலம் மஸ்தான் சாகிப் விளக்குகிருர். குளிருக்காக ஆடையை அதிகமாகப் போர்த்தப் போர்த்தக் குளிரும் அதிகமாகத் தோன்றும். ஆடையைக் குறைக்கக் குறைக்க குளிரும் குறையும். ஆடையைத் தைரியமாகத் தூக்கி எறிந்துவிட்டால் குளிரும் இல்லாது ஒழியும. எல்லாம் பழக்கம் தான். கந்தல் துணிகூட இல்லாத ஏழை மககள் குளிரைத் தாங்குவதை நாம் பார்க்கவில்லையா? ஆசைகளை அகற்றுவது முதலில் கடினமாகத் தோன்றும். ஆயினும் முயன்ருல் மாயையாகிய குளிர் சிறிது சிறிதாகக் குறைந்து முடிவில் வலுவுற்று விடும். இப்போது பாட்டைக் கேட்போம் :

''மெத்த துணி போர்க்க மெத்த மெத்தக் குளிரும்
சறறு துணி போர்த்து வரச், சற்று குளிர் — இற்றதுணி
இலலை—குளிருமிலை, யிலலை யிது தானுளமே
செலலக குணங்குடியார் சீர்.''

மஸ்தான் சாகிபின் இறைஞ்சுதலில், ஏக்கமும், இரக்கமும் உருக்கமும் இழையோடுகின்றன.

"காகமாய் நின்று கதறிக் கதறி அழும் எனைக்
கை அணைத்து அருள் புரியவும்."

என்று நெக்குருகப் பாடுகின்றார்.

அந்தக் காகம் எது? அது கதறக் காரணம் என்ன?

ஓர் அமாவாசை இரவு. நடுநிசி. மையிருட்டு. பனியோ மழைபோல் கொட்டுகிறது. பம்பரம்போல் ஆடிய அலைகடல் ஆய்ந்து ஓய்ந்து அமைதியாகத் துயில்கின்றது. நெஞ்சின் சலன எண்ணங்கள் போன்று பாய் மரக்கப்பல் ஒன்று ஆடி ஆடிச் செல்கின்றது. அது மாலையிலே புறப்பட்ட கப்பல். இப்போதோ கண்ணுக்கெட்டாத தொலைவில் அசைந்து செல்கிறது. அக்கப்பலின் கம்பத்தில் ஒரு காகம் தன்னந்தனியே பரிதாபகரமாக அமர்ந்திருக்கிறது. அது வாட்டும் குளிரால் வெடவெடென்று நடுங்குகிறது. இந்த நேரத்தில் அக்கப்பலின் பணியாள் காகத்தை விரட்டி அடிக்கிறான். அந்தோ பரிதாபம்! காகம் வெருண்டு பறக்கிறது. எங்கு பார்க்கிலும் பயங்கர இருள். பார்வை தெரியவில்லை. இரைந்து கரைந்தவாறே திசை தெரியாமல் அங்குமிங்கும் பறந்து அலமருகிறது காகம்.

"ஏகப் பெருவெளியில் இருட்கடலில் கம்பமற்ற
காகம் அதுவானேன் கண்ணே றகுமானே!"

என்று றகுமான் கண்ணியில் அந்தக் காகத்தின் பரிதாப நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறார். "இறைவா அந்தக் காகத்தைப் போன்று நானும் இக்காசினியில் கரை சேரும் வகை தெரியாமல் கரைந்து கண்ணீர் மல்கி திக்கற்று நிற்கிறேன்; என்னை அணைத்து ஆட்கொள்ளுவாய்", என்று நெஞ்சம் நெகிழ்ந்து புலம்புகிறார். அப்பாடலை மீண்டும் செவி மடுப்போம்:

"காகமாய் நின்று கதறிக்கதறி அழும் எனைக்
கை அணைத்து அருள் புரியவும்"

பரந்தகடலில் தான் தத்தளிப்பதாக அல்லவா சொன்னார், அது என்ன கடல்? இருட்கடல். பாவக்கடல். அதைக் கடப்பதற்கு இறைவனுகிய மரக்கலமே துணை என்று நம்புகிறார்.

"பவக்கடலை நீக்கிப் பரிவாய் கரையேற்றுங்
கவிழா மரக்கலமே கண்ணே பராபரமே."

*பவளக்கடலைக் கடந்து மஸ்தான் சாகிப் அருட்கடலில் பயணிக்க விழைகிறார்.*

"ஒப்பில் அருள்ஆழி ஓட அடியேற்கு ஒரு
கபபலாய் வந்தருளாய்க கண்ணே பராபரமே!"

*அவர் ஆசை அதோடு நிற்கவில்லை. உய்வதற்கு உறுதுணை நிற்கும் மெய்ஞ்ஞான இன்பக்கடலைக் குடித்து சும்மா இருக்க கிருபை செய்யவேணடுகிறார். அநத சுத்தப் பரிபூரணமாகிய இனபக்கடலில் ஒரு துளியேனும் கைகொண்டு தொட்டவர்கள் முக்காலும் நல்லோர் ஆவார்கள். திருப்பாடலை இப்போது கேட்போம்.*

"சொல்லு மெய்ஞ்ஞானச் சுகக்கடலை உணடுயான்
சுமமாவிருக்க அருளவாய்"

"சுத்த பரிபூரண சுகவாரி தன்னிலோர்
சொட்டாகினும் தொட்டபேர்
நலலவர்கள், நலலவாகள், நலலவர்கள் என்றைக்கு
நானும் நலலவனுவனே?"

*என்று உசாவுவார்.*

*அருட்கடலில் மிதக்க விரும்பிய அவர் இன்பஞானக் கடலைப் பருக விரும்புகிறார். அளவுக்கு மிஞ்சி மாநதினுல் பேரிபன் வெள்ளத்தில் அமிழந்துதானே ஆகவேண்டும். பாட்டைக் கேட் போம்:*

"கடல்மடை திறந்தென அருள்மடை திறந்து அடிமை
கண்குளிர்வது எக்காலமோ
கங்கு அறற பேரினப வெள்ளத்தில் மூழ்கி என்
கலி தீர்வது எக்காலமோ!"

*எனறு மனமிளகுகிறா.*

*தன்னைக் கருணைகூர்ந்து ஆளவரவேண்டுமென்று இறைவனை வேணடிடும் ஞானச் செலவர் தன்னைச் சேர்ந்தோரை மறந்து விடவிலலை. அவர்கட்கும் இறைவனது அருட்தேனை தெளித்திட வேண்டுகிறார்.*

"மகிழீரோ, புகழீரோ கருணை கூர்ந்து எனை ஆள
வாவெனறு அழைத்திடீரோ
சேரீரோ என்னையும் சேர்ந்தோர்க்கு உமதருள்
தேறல் தெளித்திடீரோ"

*என்று இறைஞ்சுவார். நிராமயக்கண்ணியில்,*

''எந்த உயிரும் எமதுயிரென்று எண்ணி எண்ணிச்
சிந்தை தெளிய அருள் செய்வாய் நிராமயமே''

என்று ஒருபடி மேற்சென்று இறைஞ்சு நிற்பார்.

தொண்டினை மூச்சாய்க் கொண்ட ஞானவள்ளல் அன்றோ மஸ்தான் சாகிப்!

இறைக்காதல் பெருக்கால் ஏகத்துவத்திற்கு நெஞ்சம் விரும்பிய வற்றையெல்லாம் அர்ப்பணிப்பதே பரிபக்குவ நிலையாகும். அதற்கேற்ப மஸ்தான் சாகிப் தன்னிடம் 'உள்ளது உரியது எல்லாம்' இறைவனிடம் ஒப்படைக்கிறார். உடலையும் உடலை வளர்க்கும் பொருட்களையும், உடலில் உலவும் உயிரையும் காணிக்கையாய்த் தவயோகத் தட்டையில் வைத்து இறைவனுக்கு அளிக்கிறார். இந்நிலையில் இறைவனைத் தன் காதலியாகப் பாவித்து அவர் கொஞ்சுவதைக் கேட்போம்:

''முட்டை பொரிப்பேன முழுக்கோழிதான் பொரிப்பேன்
தட்டைப பீங்கானில் வைத்துத் தருவேன மனோன்மணியே''

இவ்வாறெல்லாம் காதலியைக் கொஞ்சும் அவர் சமயம் வரும்போது காதலியிடம் கெஞ்சவும் செய்கிறார்.

''என்னை விட்டால மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனுக்கு
உன்னை விட்டால் பெண் எனக்கு உணடோ மனோன்மணியே''

முட்டை என்ற சொல் அண்டம்—உலகம்—என்றும் பொருள்படும். உலகத்தைத் துறக்கிறேன் என்கிறார். முட்டைக்குள் இருப்பது கரு. கருவை அழிக்கிறேன் என்கிறார் சாமக்கோழி கூவுதல் எனபோம. கோழியைப் பொரிப்பது நாவையடக்கி மோனநிலையிலிருப்பதைக் குறிக்கும். குஞ்சு எப்படி முட்டைக்குள அடங்கி ஒடுங்கி அசைவற்றுக் கிடக்கிறதோ அதேபோன்று ஐமபொறிகளும் தம் செயலற்று இறைவன் பால் ஒடுங்க 'தூங்காமல் தூங்க' வேண்டும் என்கிறார். மற்றோர் இடத்தில்,

''சொற் கடங்காச் சுகஞானம் தன்னில்
சும்மா விருக்கும் சுகமதே மோனம்''

என்பார்.

முட்டை முந்தியதா, கோழி முந்தியதா, என்ற வாதம் இறைவன் உண்டு என்பதையும் அவன் படிப்பு ஆற்றலையும் மெய்ப்பிக்கும்.
வாழ்வின் ெ . . ல் டிவுவரை யாவ

இறைச் சன்னிதானத்து ஒப்படைத்து தன்னையே ஐக்கியப்படுத்திக் கொள்ளும் முனைப்பை, முட்டை—கோழி எனும் குறியீட்டால் மஸ்தான் சாகிப் உணர்த்துகிறார். சேய் வாய் மடுக்கச் சுரக்கும் தாய்ப்பாலென எணண எண்ண ஊலங்கும் பொருள் வளம்.

''மரணம் வருவதற்கு முன்னாலே மரணித்து விடுங்கள்,'' என்பது நபிமொழி. இதன் பொருள் நம்முடைய நிலையற்ற உள்ளமையை அழித்து நிரந்தரம் இலங்கும் இறைவனில் இணைந்து நிலைபெறுவதாகும். மஸ்தான் சாகிப் பாடுகிறார்:

''நான் சாமுன் நான்சாவ நாடினேன்,
நான் சாமுன் நான்சாவ அருள்புரியவும்''

இப்பாடலில் ஒருபுறம் நபிகள் நாயகத்தின் பொன்மொழி மின்னுகிறது. மறுபுறமோ செருக்கைத் தூண்டும் ''நான்'' அகந்தைச் செத்துப்போக அருள்புரியவும் என்னும் கருத்துரைப் பளிச்சிடுகிறது, இறுதியாக மஸ்தான் சாகிப் நமகெல்லாம் விடுக்கும் அழைப்பினைக் கேட்போம்:

''ஐயன் குணங்குடியானையன்றி'' வேறு துணையில்லை, எனவே,

''போவோம் குணங்குடிக் கெலலோரும்—புறப்படுங்கள்
போவோம் குணங்குடிக் கெல்லோரும.''

எதற்கு? ஞானப்பாலை அருந்தி உள்ளொளி பெறுவதற்காக. இங்கு குணங்குடி என்ற தொடரால் நற்குணங்கள் எல்லாம் உறையும் ஒன்றை உருவகப்படுத்தி அதற்கு உரித்தான குருநாதரைச் சுட்டுகிறார். போவோம் குணங்குடிக்கு என்பது சுவர்க்க பதியை—மோட்சத்தை—நோக்கி நடைபோடுவோம் என்று பொருள்தரும். இவ்வாறாக நாம் வாழ்வில் கடைத்தேற கடைப்பிடிக்க வேண்டிய பல்வேறு அகமிய உண்மைகளையும், ஞானத்தின் உட்கருத்துக்களையும் இலைமறை காயாக மக்கள் மத்தியிலே வைத்து மங்காப்புகழ் பெற்ற மாமேதை மஸ்தான் சாகிப். துளசிச் செடியின் வேர், தண்டு, கிளை, இலை, தளிர், பூ எல்லாம் மணப்பது போன்று, அவரின் பாடல்கள் அனைத்தும் பல்வகை மணத்தை அள்ளிக் கொடுப்பவை.

# விஞ்ஞான நோக்கில் மெய்ஞ்ஞானியர்

எம். ஏ. ஹைதர் அலீ, பி.ஏ.,

விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும் நேர் எதிரெதிர் திசையை நோக்கிய இரு நோக்குகள் என்பதே உலகில் பொதுவாக உணரப் பட்டிருக்கிற கருத்தாகும்.

உலகின் வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஞானம் என்பது ஒரே துறையாகவே இருந்து வந்திருக்கிறது. புலன் ஐநதாலும் மனிதன் பிரபஞ்சத்தை உணர முற்படுகிறான். புலன் வழியே கிடைக்கின்ற ஞானத்தை அல்லது அறிவை வரிசைப் படுத்தி தர்க்க ரீதியாகப் புத்தியைக் கொண்டு முடிவை எடுக்கிறான்,

வேறெந்த ஜீவனுக்கும் இல்லாத சிறப்பு மனிதனிடத்தில் இருக்கிறதென்றால இது 'புத்தி' என்ற இந்த சிறப்பு தான். இதை ஆறாவது அறிவு எனகிறார்கள். மனிதனை 'அறிவு ஜீவி' எனறு அடைமொழி கொடுத்து அழைக்கின்றார்கள்.

புலனறிவைக கொண்டு உணர்ந்ததை அடிப்படையாக வைத்து எடுக்கின்ற முடிவுகள் மனத்திலேயே அலலது புத்தி யிலேயே போடப்படுகிற கணக்காக இருநதுவிடாமல் அதே புலனகளைப் பயன்படுதது ஒனறுக்குப் பலமுறையாக ஆராய்நது முடிவெடுக்கப் படவேணடுமென்பது தான் விஞ்ஞானத்தின் சிறப்பாகும்.

முறகாலத்தில் 'அகன்ற நெற்றியை உடையவன் புத்தி சாலி' எனற ஒரு கருத்து இருந்தது. அதேபோல் கூர் மூக்கை உடையவன் கலை நோக்கமுடையவன் என்றும் கூறுவதுண்டு.

சில அறிஞர்கள் அகல நெற்றியை உடையவர்களாக இருந் தாாகள்; சில உலகறிநத கலைஞர்கள் கூர் மூக்கை உடையவர் களாக இருந்தார்கள் என்பதால் அகல நெற்றியை உடையவர் களெல்லாம் அறிவாளிகள்; கூர்மூக்கை உடையவர்களெல்லாம் கலைஞர்கள் எனறு ஒட்டு மொத்தமாக சொல்லி விடுவது தவறு ' வி ' ' தின் கொள்கை.

விஞ்ஞானத்தின் அடிப்படையைக் குறித்து விளக்குகின்ற அறிஞர்கள் மூன்று முக்கிய அம்சங்களை முன் வைக்கிறார்கள். அவற்றுள் முதன்மையானது,

> "விஷயங்களைப் பற்றிய கூற்று நேரடியாகக் கண்டறியப்பட்ட குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டுமே யல்லாது தகக சான்றுகள் இல்லாத வெறும் மேற்கோள்களின் அடிப்படையின் மீது நிறுவப் பெறுதல் கூடாது.
>
> —பெட்ரண்ட் ரஸ்ஸல்

விஞ்ஞானத்தின் இந்த முதன்மையான அடிப்படையை மெய்ஞ்ஞானம் கடைப்பிடிக்கிறதா என்றால் கடைப்பிடிக்கிறது என்பதுதான் உண்மை.

உலகில் ஏராளமான மதங்கள் இருக்கின்றன. பண்டைகால இந்து மதம், சீனாவிலும், கிரேக்கத்திலும் பாரசீகத்திலும் வழங்கும் மதங்கள், இருண்ட ஆப்பிரிககக் கண்டத்தில் இன்றும் நிலவும் வழிபாட்டு முறைகள் இவைகளையெல்லாம் ஆதி மதங்கள் என்று கூறலாம்.

யூத மதம், கிருஸ்துவ மதம், இஸ்லாமிய மதம், புத்த மதம் ஜைன மதம் இவற்றை வரலாற்றுக்கால மதங்கள் என்று பிரிக்கலாம்.

சீக்கிய மதம், காதியானிகள், கிறிஸ்துவ மதத்தின் பிற்காலப் பிரிவுகள் இந்து மதத்தில் தோன்றிய மதச் சீர்திருத்த இயக்கங்கள் ஆகியவற்றை பிற்கால மதங்கள் என்று விவரத்திற்காகக கொள்ளலாம்.

உலகில் இவை தவிர இன்னும் எத்தனை மதங்களிருந்தாலும் அவை அனைத்தும் ஒரு கொள்கையில மட்டும் உறுதியாக நிறகின்றன.

மதங்களின் அந்த முதற்கொள்கை இந்த நில உலகமும் பிரபஞ்சமும் மட்டுமே உண்மையல்ல என்பதாகும்.

மனிதனின் உடலில் 'ஆன்மா' என்று ஒரு பொருள் இருக்கிறது. அது மரணத்துக்குப் பின்னர் வாழ்ந்திருக்கக் கூடியது என்பது எல்லா மதங்களிலும் வழங்கக் கூடிய கருத்தாகும்.

மறுமை, ஆன்மா என்ற மதத்தின் இந்த இரண்டு கருத்துக்

மரணத்துக்குப் பின்னர் ஏற்படக் கூடிய மறுமையைக் கண்ணால் காண முடியுமா? கண்ணுக்கும் தெரியாத ஆன்மாவைக் குறைந்தபட்சம் இந்தவிடத்தில் இருக்கிறதென்று சுட்டிககாட்டிட முடியுமா?

என்னுடைய ஆன்மாவை உன்னிடத்திலே காட்ட முடியாது. ஆனால் உனக்கு ஆன்மா இருப்பதை உணரவைக்க முடியும் என்று மதவாதிகள் கூறுகிறார்கள். இப்படி மதத்திலே நம்பிக்கை யுடையவர்களெல்லாம் அதன் அடிப்படைகளை செவிவழிச் செய்தி களை ஏற்று நம்புகிறார்கள்,

ஏற்றுக் கொண்டிருக்கக் கூடிய நம்பிக்கையை அனுபவத்தால் உணர முற்படுவதுதான மெய்ஞ்ஞானம். இந்த மெய்ஞ்ஞானத் துறை உலகத்திலுள்ள எல்லா மதங்களிலும் இருந்து வருகிறது.

கிறிஸ்துவ மதத்திலே ஆன்ம ஞானத்துறை—மெய்ஞ்ஞானத் துறையை 'Mysticism' எனகிறார்கள். யூத மதத்தில் மெய்ஞ் ஞானம் 'Kabbala' என்று அழைக்கப்படுகிறது. இஸ்லாமிய மதத்திலும் 'Sufism' எனனும் பிரிவு மெய்ஞ்ஞானப் பிரிவாகும். இந்தியாவிலும் மெய்ஞ்ஞான இயக்கங்கள் தோன்றி த்வைதம்— அத்வைதம்—விசிஷ்டாத்வைதம் என்ற பிரிவுகளாக விளங்கு கின்றன.

மதம் கூறுவதை அதாவது மதத்தின் பொதுக் கருத்துக் களான தெய்வம்—மறுமை—ஆன்மா இவற்றை அனுபவித்து உணர வைப்பதுதான மெய்ஞ்ஞானத்தின் பங்கு.

இஸலாத்தைப் பொறுத்தவரை அதனுடைய மூலமுதற் கொள்கை "இறைவன்" ஒருவனே" எனபதாகும். அதாவது "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்பதாகும். பொதுவாக இந்த மூல மொழிக்கு வணக்கத்திற்குரியவன் அல்லாஹவையன்றி யாரு மில்லை" என்று பொருள் கொள்வார்கள். இது கலிமாவின் 'ஷரீ அத்' எனபதாகும்.

பொதுவான இக்கொள்கை 'தரீக்கத்' எனனும் இஸ்லாமிய மெய்ஞ்ஞானப் பாதையில் 'இலாஹ' என்னும 'இருப்பவன்' அலலாஹ்வைத் தவிர யாருமிலலை, அதாவது "பிரபஞ்சத்தில் அலலாஹ்வைத் தவிர வேறு யாருமே இல்லை" என்பதாகும்.

இந்தக் கருத்தை பெருமானார் நபிகள்நாயகம் (ஸல்) அவர்கள் தர்க்க ரீதியாக நிரூபித்த ஒரு சம்பவம் சுட்டிக் காட்டுவதற்கு ஏற்றதாகும்.

நபிகள் நாயகம் அவர்கள் தீவிரமாகப் பிரச்சாரத்தில் ஈடுபட்டு பலதெய்வ வழிபாட்டைக் கண்டித்து சிலை வணககத்தை கடிந்து கொண்டிருநத நேரததில, மக்காநகரத்தில பெருமானாரின எதிரிகளான மாற்று கருத்துடையோருக்குத் தலைவரான அபுல் ஹிகம் என்னும் ''அறிவின் தநதை'' தமது கூட்டத்தாரால் பெருமானாருடன் பேசப் பிரதிநிதியாக அனுப்பப்பட்டார்.

அப்போது பழமை வாதிகளின வாதத்தை விளக்கிக் கூறிய அபுல ஹிகம் கேட்டார் 'முஹமமதே! ஒரே தெய்வம் இருக்கிறது. அநத தெய்வமே அனைத்தையும் ஆள்கிறது என்பதிலே நமக்குள் கருத்து வேறுபாடு கிடையாது. அஙகு எங்குமுள்ளதெய்வம் இந்த சிலையிலும் இருககிறது என்று கருதித்தானே இதை வழிபடுகிறோம். நீர் ஏன் தடுக்கிறீாகள்,

நபிகள் நாயகம் அவர்கள் மெத்தப் பணிவோடு ''நல்லது அபுல் ஹிகமே நீங்கள் வழிபடும் அந்த இறைவன் தூணிலும் துரும்பிலும் வானிலும் மணணிலும் வளியிலும் வெளியிலும் இருப்பது உணமையா?'' என்றார்கள்

அதற்கு அந்த அறிவினுடையத் தந்தை;''ஆம்! முகம்மது ஆம்! ஒப்புக் கொள்கிறோம். உண்மைதான், எங்குமுள்ள ஆணடவன் சிலையிலுமிருக்கிறான் எனறுதான் நாங்கள் சொலகிறோம். நீர் மறுக்கிறீர்'' என்றார்.

நபிகள் கோமான் பணிவாகவும் நயமாகவும் சொனனார்கள்; ''அபுல ஹிகமே சிலையிலும்கூட எங்குமுள்ள அந்த இறைவன் இருப்பதை நான மறுக்கவில்லை. ஆனால் அந்த இறைவன் ''உங்களிலே'' இலலையா? அதைத்தான் நான கேட்கிறேன்''

''ஆம்'' இருக்கிறான் என்று தலையசைத்தார் அபுலஹிகம்'

''நம்மிலேயே இருக்கக் கூடிய ஆண்டவனை நமக்குள்ளேயே உணர்ந்து வழிபடுவதை விட்டு வெளியிலே-சிலையிலே ஏன்தேட வேணடும'' எனறார்கள்.

அறிவின் தந்தை வாயடைதது நின்றுவிட்டார். நபிகள் நாயகம அவர்களது இந்தக கருதது தனிமைப்பட்ட கருத்து அலல. தமிழச் சித்தர்களும் இதை அறபுதமாக எதிரொலித்திருக்கிறார்கள்.

> ''நட்ட கல்லை தெய்வமென்று
> நம்பி புஷ்பம சாத்தியே
> சுறறி வந்து மொணமொணத்து
> சொலலு மநதிரம ஏதடா?

நட்ட கல்லும் பேசுமோ
நாதனுள்ளிருக்கையில
சுட்ட சட்டி சட்டுவம்
கறிச்சுவை அறியுமோ?''

இது தமிழ்ச் சித்தர் பத்திரகிரியார் பாடலாகும். இங்கே இஸ்லாத்தினுடைய ஏகத்துவக் கொள்கை அற்புதமாகத் தொனிக்கிறது.

எங்கும் இறைவன் இருக்கிறான் என்பதை பெருமானார் அவர்கள் இவ்வாறு தர்க்க ரீதியாக விளக்கியது மட்டுமின்றி இதை மொழிவது இஸ்லாத்தின் முதற்கடமை என்றார்கள்.

''லாயிலாஹ இல்லல்லாஹ்'' எனும் மூல மந்திரத்தை மொழிவது மட்டுமன்று; அதை உன்னுள் நீ ஆராய்ந்து உணர்வதால் ஈமான்—நம்பிக்கை பூர்த்தி பெறும்' என்று மொழிந்தார்கள்.

இந்த ஆராய்ச்சியும் அதன் பயனும் தான் மெய்ஞ்ஞானப் பாதையின் வெற்றி என்பதை குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் விளக்குகிறார்கள்.

''ஐயன் குணங்குடியானை அன்றிவேறுண் டென்னுள்
ஆய்ந்து பார்த்தேன்
ஐயன் குணங்குடியானை யன்றி வேறொன்றுமென்
னுளாய்க் காணேன்
ஐயன குணங்குடி யானே யானயென்
றறிந்தபின யெனனறிவாய் நினற
ஐயன குணங்குடி யானே அதிமோகத்
திருநடன 'மாடுவானே!',

என்று பாடுகிறார்கள். தன்னுள் ஆராய்ந்து அனுபவிககின்ற உண்மைதான் ஏகததுவ உணமை எனபது இஙகே ஒரு தெளிவான விஞ்ஞானக் கண்ணோட்டமாக இருபபதைக் காணகிறோம்.

எனவேதான் இஸ்லாத்தின் மூலக் கொள்கையான 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்பது ஒரு அனுமானம், அதாவது விஞ்ஞான மொழியில் கூறினல் 'புனைகொளகை' (Hypothesis) ஆகும. இதை உணர தனனுள் ஆராயசசிகளை நிகழ்த்துவதே மெயஞ்ஞான முயற்சி.

மெய்ஞ்ஞானம் என்பது ஏதோ நரகத்தில் விழாமல் பாதுகாத்துக் கொள்வதற்கோ சுவர்க்கத்தை சென்றடைய வழிதரக்

கூடியதா என்று 'நரக — சுவர்க்க மத பாஷை'யில் கருதப் படுமேயானால் அது தவறாகும்.

மஸ்தான சாகிபு அவர்கள் தாம் எதனை அறிந்து கொள்ள விரும்புகிறார் என்பதை அவர் தமது குருபிரானாகிய ஹஜ்ரத் முகையித்தீனை நோக்கிப் பாடுகின்ற கீழ்க்கண்ட பாடல் தெளிவாகக் கூடியது:

''கண்ட பொரு ளத்தனையு மாகி நின்றவைகளுங்
 காணாத காரணத்தை
கருதரிய சித்தாய் விசித்திரமாய் நின்றிலங்
 காநின்ற காரணத்தை
அண்ட கோடிகளையுந் தன்னுள்வைத் தணுவினுக
 கணுவான காரணத்தை
அறியாம லெனதெய்வ முனதெய்வ மென்பார்க்கு
 மவ்வகைக் காரணத்தை
யெண்டிசை வளைக்கின்ற வித்தாயிருந்துமோ
 நிடமற்ற காரணத்தை
எய்திக களிக்கவடி யேனுமுமை நம்பினேன
 யெதிர் காட்டி யாளுதற்கே!''

அணுவிலும் அண்டகோடிகளிலும் இரகசியமாய் இலங்கக் கூடிய காரணம் (Cause) என்னவென்பதை விளக்குமாறு வேண்டுகிறார் என்றால் மெய்ஞ்ஞானிகளுக்கு விஞ்ஞான நோக்கில்லை என்று எப்படிச் சொல்வது?

விஞ்ஞானிகளின் முடிவான நோக்கந்தான் என்ன என்று உணர்வதற்கு, ஹார்வார்டு பல்கலைக் கழகத்தின் இரசாயனப் பிரிவுப் பேராசிரியர் ஜார்ஜ் வால்டு கூறுகின்ற ஓர் கருத்தை இங்கே குறிப்பிடலாம்.

''ஐந்நூறு கோடி அல்லது ஆயிரங்கோடி வயதுள்ள இப்பிரபஞ்சத்தில் நாம் வசித்து வருகிறோம் என்பதை உணர்ந்துவருகிறோம்.

''பிரபஞ்சத்திற்கு, அதற்கே உரியப் பரிணாமம் உண்டு என்பதையும் அறிகிறோம். நட்சத்திரங்களும், நட்சத்திரப் புஞ்சங்களும் பிறக்கின்றன. வளர்கின்றன, மடிகின்றன.

''இயற்கையின் வரிசைக் கிரமத்தில் உயிருக்கு ஓர் இடமுண்டு. உயிர் பிரபஞ்ச பௌதிகத்தில் ஓரங்கம் வகிக்கிறது. புரோட்

டான்களும், நியூட்ரான்களும், மின்சாரமும் கொண்ட பிரபஞ்சத்துடன் புறப்பட்டுப் போனுல் உயிர் கடைசியாய்க் காட்சி அளித்தே தீரும்.

"இந்த உயிர்தான் மனிதனுக்கு ஓர் இடம் தருகிறது. அவன்தான் சிக்கலிலும் சிக்கலான 'இருப்பு'. தன்னைப் பற்றி தானே சிந்திக்கத் தொடங்கிய ஆதி வஸ்துவும மனிதனே ஆவான்."

சென்ற இருபதாண்டுகளில் உயிர் பௌதிக அறிவியலிலும் உயிர் இரசாயன அறிவியலிலும் தோன்றியுள்ள பிரம்மாணட ஆராய்ச்சி முடிவுகளின் அடிப்படையில் பேராசிரியர் ஜார்ஜ் வால்டு (George Wold) இவ்வாறு கூறுகிருர்.

அப்பா அவர்களின் வேட்கைக்கும் அறிவியல் விஞ்ஞானி ஜார்ஜ் வால்டின் வேட்கைக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது.

மற்ருெரு இரசாயனத் துறை விஞ்ஞானியான ராபர்ட் ஆர். வில்லியம்ஸ் என்பவரின் கருத்தையும் ஒப்பு நோக்கலாம். இவர்தான் வைட்டமின் (பி) ஒன்றை தனியே பிரிதெடுத்து. செயற்கை முறையில் தொகுத்தப் பேரறிஞராவார்.

இவர் கூறுகிருர்:

"மனிதனது இரசாயன பாரம்பரியம் அவனது இன உணர்ச்சியையும், பரிணமப் போக்கின் அறிவையும் விருதநி செய்கிறது எனக கருதுகிறேன்.

"உடலுறுப்புக்களைக் கொண்டே பிர்வின் ஒரு பாரம்பரியக் கொள்கையை வகுத்தார். இதைவிட்டு அப்பால கடந்து நிற்பது இரசாயனக் கொள்கையாகும்.

"இக்கொள்கை நாம் எங்கிருந்து வந்தோம் என்பதை சுட்டிக்காட்டுகிறது. அதை நன்ருகவும் விவேகத்தோடும் ஆராய்ந்தால் நாம் எங்குபோய்க் கொண்டிருக்கிறோம் என்பதையும் அது அறிவிக்கும்."

இது ஒரு விஞ்ஞானியின் வேட்கை! குணங்குடியார் கண்டதென்ன, அவர் வாயாலேயே கேட்டால்:

"என்னிலை தன்னை அறிந்தே—அதில்
இருந்திடும் சூத்திர மறிந்தே"
அன்னிய நிலைகளைத் துறந்தே—குரு
ளி கி ெ றி ே "

மனிதனது இரசாயனப் பாரம்பரியத்தைத் தொடர்ந்து ஆராயந்தால நாம எங்கிருந்து வந்தோம் எஙகு போய்ககொண ருக்கிறோம என்று விளங்கிவிடும என்பது ராபாட் வில்லியமஸின் முடிவு.

அப்பா அவர்கள் மனிதனின் அநத நிலையை அறிந்து நிலையை அறிநது விட்டதாகக் கூறுகிறாகள:

''எனனிலே தனனை அறிந்தே—அதில்
இருநதொரு சூத்திரம அறிநதே

'Understanding the seat of my being, and also the route''

என்று மஸ்தான் சாகிபு பறையறிவிக்கின்றாகள.

விஞ்ஞானம் மனிதனையும் பிரபஞ்சத்தையும உயிரணுவையும் (Cell) அணுவையும (Atom) அடிப்படையாகக கொணடு பௌதீக மாக ஆராயமுனைகிறது. ஆனால் மெய்ஞ்ஞானமோ பிரபஞசத்தின் மூலககூறு 'மனிதனே' என்றும, மனிதன தனனுள தானே ஆராய்வது கொணடு பிரபஞசம முழுவதின் ரகசியத்தையும் உணர்ந்து கொள்ள முடியும் என்று வாதிடுகிறது.

நாம் முன்னே எடுத்துககாட்டிய அறிஞா ஜார்ஜ வாலடின கூற்றுப்படி,

(''மனிதனாகிய அவனதான சிக்கலிலும் சிககலான ''இருப்பு''. தன்னைப்பறறித் தானே சிநதிக்கத் தொடஙகிய ஆதிவஸ்துவும மனிதனே ஆவான்.''

என்ற கருத்து விஞ்ஞானத்தின் பொதுவான கணணோட்டமாயிருக்குமானால பிரபஞ்சததின் மூலக்கூறு ''மனிதன்—அலலது அவனது உயிர்—அலலது அவனது அறிவு'' எனறு கூறுவதிலே எபபடி தவறு வரமுடியும்?

மஸதான சாகிபு அவர்கள் மனிதன பிரபஞ்சததின் மூலககூறாக இருப்பதை தமது முதற பாடலிலேயே குறிப்பிடுகிறார்கள:

''மகுலியத்தான தாத்துல கிபுரியாவில்
மறைந்த கன்சுல் மகுபியாம்
மஸ்கூதது அன்குல கதீமுல அமாவான
மவுஜூதெனும சிர்புலே

அகுதிய்யத் துகதாகி வாகிதிய் யத்தான
ஆலம அறுவா கானதில்
ஆலம் மிதலாகி ஆலம் அஜசாமான
ஆலம் இன்சாஞன பின்.''

'தாத்' என்னும் பரம்பொருளின் 'கன்சுல் மகுபீ' என்னும் அவவியக்தப் புதையலாயிருந்து அப் பொருளின் இருக்கையான 'அமா' விலிருந்து இறங்கி 'அகுதியத்து-ஆதி, வகது-அநாதி, வாகிதியத்து-அநதம் ஆகிய கோலங்களாக வெளிப்போந்து ஆலம் ஆறுவாஹ்-ஆன்ம உலகம், ஆலம் மிதால்-சூக்கும உலகம், ஆலம் அஜசாம்-ஜட உலகம் ஆகியவற்றினின்றும் வெளிப்பட்டு ஆலம் இன்சான-மனிதனென்னும் உலகமாக வெளிப் போநது'' என்று குறிப்பிடுகிறுர்கள்.

ஆதி பரம் பொருளின் மறைந்த புதையலாக உலகில் வெளிப் பட்டிருப்பது 'இன்சான்' என்னும மனித கோலமே என்ற முடிவின் அடிப்படையிலே தான் மனிதன் எனும் மூலக்கூறை தனது ஆராய்ச்சிப் பொருளாக மெய்ஞ்ஞானம் ஏற்றுக் கொண டிருககிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இதனைச் சுருக்கமாக

''தனனே அறிந்தவன் தன் நாயனே அறிந்தான''. ''He who knows himself knows his Lord''. — என்று மொழிந்தார்கள்.

நாம முனனா குறிப்பிட்ட பேராசிரியா ஜார்ஜ் வால்டின் மற்ரெரு கருத்தை எடுத்து ஆராய்வோம்.

இயற்கையின வரிசைக் கிரமத்தில் உயிருக்கு ஓர் இட முணடு. உயிர் பிரபஞ்ச பௌதிகத்தில் ஓா அங்கம வகிக்கிறது. புரோட்டான்களும், நியூட்ரானகளும், மின்சாரமும் கொண்ட பிரபஞ்சத்துடன் புறப்பட்டுப் போனல் உயிர் கடைசியாய்க் காட்சி அளித்தே திரும்.''

நல்லது ''உயிர் கடைசியாய்க் காட்சி அளித்தே திரும்'' என்பது விஞ்ஞானத்தின நல்ல முடிவாகவே இருககட்டும் ஆனல 'புரோட்டானகளும், நியூட்ரான்களும் மின்சாரமும் கொணட பிரபஞ்சத்துடன்' நாம புறப்பட்டு போகு முன்னர் 'உயிரே

எனவே தான் உயிரற்ற ஒன்றிலே உன் ஆராய்ச்சியை நடத்தி உயிரை அறிய முனைவதைவிட அது முழு இயக்கத்துடன் இருக்கும் போதே அதனை ஆராய வேண்டுமென மெய்ஞ்ஞானம் கூறுகிறது. அப்பா அவர்கள் இப்படிப் பாடுகிறார்கள்.

சூத்திரப் பாவை கயிரற்று வீழுமுன்
சூட்சக் கயிற்றினைப் பாரடா— அதி
சூட்சக கயிற்றினைப் பாரடா!

Lo! seek for the Cord of cause:
cause that holds thy body amass!
Lo! seek for the cord of cause,
Before it leaves thee! Alas!

இப்படி விஞ்ஞான நோக்கோடு மெய்ஞ்ஞானிகள் மேற்கொண்ட ஆராய்ச்சிகளிலிருந்து கிடைத்த உண்மைகள் வேதங்களாகவும், ஆகமங்களாகவும், இன்று உலகிலே காணப்படுகின்றன.

மெய்ஞ்ஞானக் கருத்துக்களை 'கலை உணர்ச்சியின் கற்பனை கண்ணோட்டம்' என்று ஒரு தவறான அபிப்பிராயம் விஞ்ஞான உலகில் உண்டாகியிருப்பதன் காரணத்தால் தான் விஞ்ஞானம் மெய்ஞ்ஞானத்தின்—கருத்துக்களை ஏற்கத் தயங்குகிறது. இந்த தடையை நீக்க கற்பனைக்கும்—தீர்க்க தரிசனத்துக்கும் இடையிலுள்ள வேறுபாட்டை அறிந்து கொள்வது முறையாகும்.

தீர்க்க தரிசனம் (Prophecy) நபித்துவம் என்னும் இந்த வகைப்பட்ட அறிவு மனித அறிவின் ஒரு பரிணாமமாகும். இது தனனில தானே ஆராய்ந்து பார்த்தாலொழிய விளங்கிக்கொள்ள முடியாததாகும். நபிகள் நாயகம் அவர்கள் '' கனவு நுபுவத்தில நூற்றில் ஒரு பங்கு ' என்றார்கள். கனவைப பற்றிய ஆராய்ச்சியில் விஞ்ஞான பரிசுத்தமாக இறங்கினால அது ''தீர்க்க தரிசனம'' பதார்த்த ஞானமே என்பதை தெளிவுபடுத்தும் என்று இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஆனால் கவிதையும், இலக்கியமும்—கலையும் விஷயங்களைப் பற்றிய அன்புணர்ச்சியேயன்றி அறிவின் வயப்பட்டதன்று.

அறிவியல கண்கொண்டு பிரபஞ்சத்தின் தோற்றத்தை ஆராய்வதைப் பொறுத்துக கொள்ளாத ஒரு ஆங்கிலக் கவிஞர் கடந்த நூற்றாண்டில் இப்படியும் பாடியிருக்கிறார்;

"ஓ விஞ்ஞானமே! புளிய மரத்தடியில் நான் அனுபவித்த வேனிற்காலக் கனவைக் கிழித்து சின்னாபின்னமாக்கி விட்டாயே!" என்ற இந்தக் கருத்து மெய்ஞ்ஞானத்துக்கு ஒவ்வாததாகும்,

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களே இஸ்லாத்தின் தலைசிறந்த மெய்ஞ்ஞானி ஆவார்கள். அவர்களுடைய தீர்க்கதரிசனம் — திருக்குர்ஆன் என்பது மாபெரும் ஷெய்கு முகையித்தீன் இபுனுல் அரபியின் கருத்தாகும். திருக்குர்ஆனின் வசனங்கள் கற்பனை கவிதை வரிகளே என்று அராபியர்கள் பேச முனைந்தபோது அதற்கு ஒரு எச்சரிக்கை கூட திரு குர்ஆனிலேயே வழங்கப்பட்டிருக்கிறது.

மேலும் நபிகள் நாயகம் அவர்கள் இப்படியும் ஒரு கருத்தைக் கூறினார்கள்!

"உலகத்தைப் பற்றிய அறிவு மரணத்தோடு உங்களைவிட்டுப் பிரிந்து விடும்; உங்களைப் பற்றிய அறிவோ மரணத்துக்குப் பின்னரும் உங்களுக்குத் துணையாக வரும்."

விஞ்ஞானம் உலகத்தை ஆராய முனைகிறது.

மெய்ஞ்ஞானம் மனிதனை ஆராய முனைகிறது.

விஞ்ஞானம் உடலை ஆராய்ந்து உயிரைத்தொட முனைகிறது. மெய்ஞ்ஞானம் உயிரை ஆராய்ந்து உடலுக்கும் தீர்வு காண்கிறது விஞ்ஞானம் புறத்தை ஆராய்ந்து பிரபஞ்சத்தையும் நட்சத்திர தொகுதிகளையும் கண்டு வியக்கிறது மெய்ஞ்ஞானம் அகத்தை ஆராய்ந்து ஆன்ம, சூக்கும அகமிய உலகங்களை கண்டு வியக்கிறது.

"பிரபஞ்சத்தைப் பற்றி சிந்திக்கும் தோறும் நமது மனதில் ஒரு பயங்கர எழில் தோன்றக் காண்கிறோம். இந்த பயங்கர எழிலின் பின்னணியில் ஏதோ ஒரு சக்தி ஊடாடுவதை உணர்ந்து வணங்காமலிருக்க முடியாது" என்று சார்புக் கொள்கை கண்ட ஐன்ஸ்டீன் கூறினார்.

> "பார்க்கப் பலவித மாயும்—ஆகப்
> பல்லாயிரங் கோடி யண்டமதாயும்
> காக்கும் நிலைக்கு யிராயும—நின்ற
> காரண பூரண நாதனைப் போற்றி"

இவ்வாறு மஸ்தான் சாகிபு அப்பா பாடுகிறார்கள்.

*விஞ்ஞானிகளையும் மெய்ஞ்ஞானிகளையும் திகைக்க வைக்கும் காரண நாதனை கண்டு, முஹம்மது நபி அவர்கள் கொணர்ந்த திருக்குர்ஆனை புகழ்கிறது.*

*அலஹம்ந்து லில்லாஹ்!*

Praise be to Allah, Lord of the worlds
The Beneficent the Merciful.
Owner of Day of Judgment!
Thee (alone) we worship, Thee alone we ask for help!



# குணங்குடியார்

கவிக்கோ எஸ். அப்துல் ரகுமான்

இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களுள் தமிழுலகில் நன்கு அறிமுகமான பெயர் குணங்குடியார் எனப்படும் மஸ்தான் சாகிபு. அவருடைய 'வித்தையில் தோழ'ரான புலவர் நாயகம் சேகனுப் புலவர் குணங்குடியார் திருப்பாடல் திரட்டுக்குப் பாடியளித்த 'வாயுறை வாழ்த்'தில் குணங்குடியாரின் வாழ்க்கைக் குறிப்புக்களைத் தந்துள்ளார். செவிவழிச் செய்திகளிலிருந்தும் குணங்குடியாரைப் பற்றிய சில குறிப்புகள் கிடைக்கின்றன.

இராமநாதபுரம் மாவட்டம் தொண்டிக்கு அருகில் உள்ள குணங்குடி என்னும் ஊரில நெய்னா முஹம்மது, பாத்திமா என்பவர்களின் புதல்வராய் ஹிஜ்ரி 1207 (கி. பி 1788) ஆம் ஆண்டில் பிறந்தவர் குணங்குடியார். பெருமானார் முஹம்மது(சல்) அவர்கள் அருளிய ஓஸியத்துக்கள்' (அறிவுரைகள்) அனைத்தையும் திரட்டிப் 'பொன்னரியா மாலை' என்னும் நூல் பாடிய மதுரை மின்னா நூறுத்தீன் மரபில் வந்தவர். அன்னை பாத்திமாவின் தந்தைகருத் தந்தையாாமீது குணங்குடியார் பாடியிருக்கும் அரபு இரங்கற் பாவின் 'வ நிஸ்பத ஹாதா ஷைகி நஸ்ப முஹம்மதி' என்ற வரியிலிருந்து அவர் வள்ளல் நபி (சல) வழி வந்தவர் என்று தெரிகிறது.

குணங்குடியாருககுப் பெற்ரோர் சூட்டிய பெயர் சுல்தான் அப்துல் காதிர். பின்னர் 'மஸ்தான் சாகிபு', 'மஸ்தான் சாமி,' 'குணங்குடியார்,' 'தொண்டியார்', 'ஆரிபுபிலலா', 'ஓலியுல்லா' என்று பல சிறப்புப் பெயர்களால் மக்கள் அவரைக் குறிக்கலாயினர்.

இளமை முதற்கொண்டே உலகியல் வாழ்வில் ஈடுபாடு குறைவாகக் கொணடிருந்த குணங்குடியார், தம்முடைய பதினேழாவது வயதில அவருக்கென உறுதிசெயது வைத்திருந்த அவருடைய தாய் மாமன் கட்டை சாஹிபு என்பாரின் புதல்வி மைமூன் என்பவரைத் திருமணம செய்து கொள்ள மறுத்துத் துறவு நெறியில் ஈடுபடத் தொடங்கினர். கீழக்கரை சென்று அங்கே செய்கபதுல் காதிரி லெப்பை ஆலிம என்பாரிடம் அரபிக் கல்வி பயின்றார். பின்னா திருச்சிராப்பள்ளி சென்று அங்கிருந்த ஞானி மௌலவி ஷாம சாஹிபு என்பாரிடம் தீட்சை பெற்றுக் கடுந்துறவு பூண்டார். பகலெல்லாம் நோன்பும் இரவெல்லாம் தொழுகையுமாக அவருடைய நாட்கள் கழிந்தன. இக்காவ

கட்டத்தில் அவா பல இடங்களுககுச் சென்றுநிட்டை புரிந்துளளாா திருபபரங்குனறத்தில ஒரு மண்டலமும், அறந தாஙகியில ஆறு திஙசளும், தொணடியில் அவருடைய மாதுலர் அடஙகிய வாழைத தோப்பில் நானகு திங்களும 'கல்வத்து' எனப்படும் தியான நிட்டையில் அவா இருந்ததாகத் தெரிகிறது பின்னர் பிததநடை' கொணடு சதுர கிரி, நாக மலே, யானே மலேபோனற பல மலேகளிலும். காடுகளிலும, நதிக்கரைகளிலும அலேந்து தி ந்து விரத வாழக்கை மேற்கொணடிருந்தார் இக காலத்திலதான அவருடைய 'பிதத நடை' கண்ட மக்கள அவரை 'மஸதான்' (பித்தா) என அழைககலாயினர். இக காலத்தில தீயைத தொடுதல், மரத்தில் தலேகீழாகத் தொங்கித் தியானிததல போனற பல சித்துக்களேக காட்டியதாகத் தெரிகிறது. இதே காலததில அவர் வடநாடும சென்று வந்தார்

இறுதியில் அவர் ஞானுசிரியரின ஆணேப்படி சென்னே அடைநது இராயபுரத்தில் உள்ள பாவா லெப்பை என்பவருடைய தோட்டத்தில் தங்கி நாற்பது நாட்கள் யோக நிட்டையில் இருந்தார் அவருடைய தபோவனம் மக்கள் மன அமைதியையும், ஞானத்தையும் தேடிவரும் புனிதத் தலமாயிற்று. அனபர்கள் கொணர்ந்த காணிக்கைப் பொருள்களே ஏழை எளியவர்க்குப் பகிர்நது அளித்து வந்தார் குணங்குடியார். அவருடைய இருபபிடம வயிற்றுப் பசி, ஞானப் பசி இரணடையும தணிககும இடமாயிற்று. இவவாறு பனனிரணடு ஆணடுகள சென்னேயில வாழ்ந்துளளாா. ஹிஜரி 1254 (கி.பி. 1835)ஆம் ஆணடு ஜமாதில் அவ்வல பதினன்காம் நாள் தம்முடைய நாற்பத்தேழாம் வயதில் தம் உடல் வாழவைததுறநதார் இராமநாதபுரத்திலேயே அவா நலலடக்கம் செயயப்பட்டாா. அவர் வாழந்து வந்தபோது அவருடைய பெயரால் தொணடியார் பேட்டை' என வழங்கப்பட்ட பகுதியே இனறு மருவி 'தண்டையாா பேட்டை' என வழங்குகிறது

சூஃபி ஞானி

குணஙகுடியாரின் வாழ்வும் வாக்கும் அவர் சூஃபி ஞானியாகத திகழந்ததைக காட்டுகின்றன. பதினேழாவது வயதிலேயே அவர் கீழக்கரை செயகப்துல் காதிரி லெப்பை ஆலிம அவர்களிடம் 'தவத்தினது இயல்பும் தாபதர் இயல்பும கற்றுணாந்திருககிருர். ஹிஜ்ரி 1228 (கி.மு. 1809) ஆணடு முற்றும் துறந்த துறவி ஆகியிருககிருர் திருச்சிராப்பள்ளியில் மௌலவி ஷாம் சாஹிபு என்பவரிடம் சூஃபி முறைப்படி 'முரீது'

எனப்படும் தீட்சை பெற்றுள்ளார் மலைகளிலும், வனங்களிலும் தங்கி கலவத்து' எனப்படும் நிட்டை புரிந்துள்ளார். 'ஆசன விகற்பத்து ஆகிய யோகமும போசனம் அறியாப் பொழுதொடு நேமமும், மேலாம் காலும் கீழாந் தலையும், பாலாம் உடலுமாப் பல்பட வணங்கி' அகோரத் தவமியற்றியுள்ளார், பல அற்புத சித்துகளை விளைவித்துள்ளார். தம்மையடைந்த பரிபக்குவத் தினரைச் சீடராக ஏற்று 'முரீது' தந்து ஞான, யோக நெறிகளை உணர்த்தியுள்ளார். மௌன விரதம் பூண்டு "சுட்டிக் காட்டியும் எண்ணில் தொகுத்தும், எட்டிக் காட்டியும் எழுதிக் காட்டியும்' வாழ்ந்து வந்துள்ளார். சென்னை வாழ்க்கையின்போது 'முரீது' முறைப்படி தம் முன்னிலைக் குருவான முகிய்யிதீன் ஆண்டகைக்கு 'பாத்திஹா' எனப்படும் நேர்ச்சைப் படையல் செய்திருக்கிறார். 'ஒருவர்க்கும் காணு ஒதுக்கமும் பதுக்கமும, இருவர்க்கே காணும் ஏகமும் ஆகத் தூங்காது தூங்கிச் சுகத் தொடு தனனிலை நீங்கா' திருநதிருககிறார், இவையெலலாம் அவருடைய 'வித்தையில் தோழர்' புலவர் நாயகம் பாடிய 'வாயுறை வாழ்த்தி'லிருந்து தெரியவருகின்றன.

**மஸ்தான்**

குணங்குடியார் பெற்ற 'மஸ்தான்' என்ற பெயரும் அவர் ஒரு சூஃபி என்பதைக் காட்டுகிறது 'மஸ்தானு' என்ற பாரசீகச் சொலலுக்குக் 'குடிவெறி கொணடவர்' அல்லது ஏதேனும ஒனறில் வெறி கொண்டவர்' எனறு பொருள். சூஃபி நெறியில 'மது' என்பதும் 'போதை' அல்லது 'வெறி' என்பதும 'ஆனந்த பரவச' நிலையைக் குறிக்கும் குறியீடாகும். பரம் பொருளின் உணர்வில் ஈடுபட்டுத் தன்னை இழநத ஞானியை 'வெறியர்' (மஸ்தானு) என அழைபபது மரபு. "'மஸ்தான்' அலலது போதை கொணடவர் எனபவா பரமபொருளின காதலர், ஏகத்துவக கடலில் மூழகியவர்' அவருககு மறை பொருள்கள் தெரியும்; ஆனால தம்மைச சுறறியுள்ள இவவுலகச் சூழலை அவர் உணரார்; அவர் காதலியின (பரம்பொருளின்) தோற்றத்தை உணர்பவா. ஆனால அததோறறம் புலனுணர்வு உலகத்தோடு தொடாபற்றது". சூஃபி ஞானம் பற்றி முதன முதலில் அரபியில் எழுதப்பட்ட கவிதை நூலுக்கு அதன் ஆசிரியர் உமர் இப்னு ஃபாரிள் (ரஹ) 'மதுநூல' (கம்ரிய்யா) என்றே பெயர் சூட்டியுள்ளார். தலைசிறப் புகழுடைய பாரசீக சூஃபி ஞானக் கவிஞா மௌலானா ரூமி அவாகள "நரன் காதல" ஆன மாவைக் குடித்து வெறிகொணடவன" எனறு கூறுவார்.

அவருடைய வரலாற்றில் கண்டோம். அவர் பாடல்களிலும் இதனை நாம் காணலாம். ஆனந்த பரவச நிலையிலேயே அவர் பாடல்கள் வெளிப்பட்டிருக்கின்றன என்பதை அவர் திருப்பாடல் திரட்டில் முதலாவதாக அமைந்துள்ள 'வஸ்துதயத்தின ஆனந்தம்' தொடக்கமாக உள்ள பத்துக் கவிகளின் இறுதியில காணப்படும "ஆனந்தமாகி பேரின்பவனுபோக நிலையாற் கூறிய இப்பத்துக் கவியும .." என்ற குறிப்பு உணர்த்துகிறது

பித்தர், பேதையர், பத்தர் இம்மூவரும் ஒரு வகையில் ஒரே நிலையில் உள்ளவர்கள். அவர்கள் சொல்லும் செயலும் உலக நடைக்கு மாறாக இருக்கும், உலகம் அவர்களைப் புரிந்துகொள்ள இயலாது.

> "பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
> பத்தர் சொன்னவும பன்னப பெறுபவோ'

என்பார் கம்பர்.[2]

> "பித்தர் பிடித்த பிரபஞ்சத்தார் போலன்றே
> முத்தர்க் கிருக்கும் முறைகாண் நிராமயமே"

என்பார் குணங்குடியார்?

மது தன்னைப் பருகியவரின் அறிவை மயங்கவைக்கும் ஆனால் இந்தக் குறியீட்டு 'மது'வோ தன்னைப் பருகியவரின அறிவைத் தெளிவாக்கும், மயக்கத்தை நீக்கும். இத்தகைய 'மதுக்குடிய' ரைத்தான நான 'உன்மத்த' மனிதர் என்பேன் எனகிறார் குணங்குடியார்.

> "புத்தி தெளியாப் புலத்தோர் தமைத்தவத்து உன
> மத்த மனுஷரென மாட்டேன் நிராமயமே' [4]

குணங்குடியார் இத்தகைய 'உன்மத்த மனுஷ'ராகவே இருந்திருக்கிறார் எனவேதான் மஸ்தான்' என அழைக்கப்பட்டார்.

**பக்கீறு**

சூஃபியின் இலக்கணங்களுள் ஒன்று வறுமையை வலிந்தேற்றல், அதற்காகப் புலனின்பப் பொருள்களை மட்டுமின்றித் தேவைகளையும துறத்தல் சூஃபிகள் இதனை 'ஜுஹத்' (துறவு) என்பர்; இறைவனைத் தவிர மற்றவை அனைத்தையும் துறத்த

இ வி

ஸூஃபி என்பவன் ஒரு பயணியாகக் கருதப்படுகிறான். ஸூஃபித்துவம் ஆன்மாவின் துணிகரப் பயணம் ('சுலூக்'). பயணி சாலிக் எனப்படுவான. அவனுக்கு வழிகாட்டியாக அமையும். குரு 'முர்ஷித், அல்லது 'பீர்' எனப்படுவார். ஸூஃபி வழிகாட்டியின் துணையோடு ஏழு நிலைகளைக் கடக்கிறான். இந்நிலைகள் 'மகாமாத்' எனப்படும் முதல்நிலை மானுடநிலை— 'உபூதிய்யத்'—இந்நிலை பாவங்களுககாக வருந்தி ஆன்மாவைத் தூய்மைப் படுத்துதல். இரண்டாம் நிலை காதல்நிலை — 'இஷீக்'. பொறியின்பங்களைத் துறநது இறைக்காதலில் ஆழ்ந்துபோதல் இந் நிலையாம். மூனறாம் நிலை துறவு நிலை— 'ஜுஹத்'. இது இறையைத் தவிர அனைததையும் துறத்தலாம். நான்காம் நிலை ஞானநிலை — 'மஅரிபத்', பரம்பொருளின் இயல்பு, பண்பு. செயல ஆகியவற்றைச சிந்திததுணர்தல் இந்நிலையாம். ஐந்தாம் நிலை பரவச நிலை—'வஜத்'; பரம்பொருளைத் தியானித்து மனக் கிளாச்சியடைந்து தன்னை மறந்து பரமான்மாவோடு ஒன்றுதல். ஆறாவது உணமை நிலை—'ஹகீகத்'; இதயம் உணமையான பரம் பொருள் தன்மையால விளககமுறுதல்; விளக்கமுற்றபின் இறையைச் சார்தல். ஏழாம் நிலை ஒன்று நிலை—'வஸ்ல்' —எனப் படும். இது பரம்பொருளை நேருக்கு நேராகக் கண்டுணர்தலாம். இவ்வேழு நிலைகளையும் கடந்தவன் இறுதியில் தான் எனும் தன்மையை முற்றிலும் அழித்துக் கொண்டு பரமான்மாவோடு அததுவிதமாவான்; இந்நிலை 'ஃபனு' எனப்படும்.

ஏழு நிலைகளில் மூனறாம் நிலையாகிய 'ஜுஹத்' நிலையுற்றவன் 'பக்கீர்' எனப்படுவான். 'பக்ரு' என்று அரபுச் சொல்லுக்கு வறுமை, இன்மை என்று பொருள். ஸூஃபித்துவத்தின் தலைமை ஊறறாகச் சருதப்படும பெருமாளுர் முகம்மது (சல்) அவர்கள்,

"அல் பக்ரு பக்ரி வல பக்ரு மின்னி"

(வறுமை என் பெருமை; அவவறுமை என்னிடத்தது) எனக் கூறியுள்ளார். இங்கு 'பக்ரு' எனற சொல் வெறும் வறுமையை மட்டும் குறிக்காமல் 'இன்மை' என்ற பொருளையும் குறிக்கும். அவவாறு பொருள கொள்ளுஙகால 'யான், எனது' என்ற இரணடுணாவும் அற்றிருப்பது என பெருமை எனறும், தான் எனும் உணாவை புறறம அழிததுக்கொண்டு பரம்பொருளோடு ஒனறிவிட்டவன தான என்றும் அவர் குறிப்பது புலப்படும். எனவே 'பககீர்' எனற சொல் மூனறும் நிலையாகிய 'ஜுஹத்' எனபதை மட்டுமே குறிக்காமல ஸூஃபி இறுதியில் அடையும் பரிபூரண நிலையாகிய 'ஃபனு' என்பதையும் குறிக்கும். ஸூஃபி

கலைச் சொற்களில் 'பக்கீர்' என்பதும் 'ஃபானி' என்பதும் ஒரு பொருட்கிளவிகள் பரிபூரணமுற்ற சூஃபியை 'பக்கீர்' என்றே அழைப்பார் குணங்குடியார். இத்தகைய பரிபூரண நிலையுற்ற சூஃபி என்பதை அவர் வாக்காலேயே உணரமுடிகிறது; முகியித்தீன் சதகத்தின் 82-வது பாடலில் அவர் தம்மை 'பக்கீறு என அழைத்துக் கொள்கிறார். 'ஃபனா' எனும் நிலையிலிருந்து மீண்டு வநது பக்குவமுற்றோர்க்கு ஞானத்தை உணர்த்தி வழி காட்டும் நிலைக்கு 'பகா' என்று பெயர். இந்நிலையிலும் குணங் குடியார் இருநதிருக்கிறார் என்பதை,

> ''நிலையுறு சத்துச்சித் தாநந்த மாக நிறைபொருளைக்
> கலையுறு மாட்சியில தானுற்றுயாரையும் காட்டவல்லோன்''*

என்ற அவருடைய சீடர் மகாவித்துவான் திருத்தணிகை சரவணப் பெருமாளையரவர்கள் வாக்கால் அறியமுடிகிறது.

### தரீ:கா

யோக, ஞான நெறிகளில் பல்வகை முறைகள் இருப்பது போனற சூஃபித்துவத்திலும் பல முறைகள் உள. இம்முறைகள் அல்லது வழிகள் 'தரீஃகா'க்கள் எனப்படும்.

> ''அல் துருஃகு இலல்லாஹி கா நுஃபூஸி பனீ ஆதமா''

(மனித இதயங்கள் எத்தனையோ அத்தனை வழிகள் ஆண்டவனை அடைய) என்பது அரபுப் பழமொழி.

சூஃபித்துவத்தில் உள்ள பல தரீஃகாக்களுள் காதிரிய்யாத் தரீஃகா புகழ்பெற்றதாகும். இந்நெறியினை ஏற்படுத்தியவர் ஜீலானில் பிறந்து பாக்தாதில் மறைந்த ஞானி அப்துல் காதிர் ஜீலானி (கி. பி. 1077-1166) எனபவராவர். காதிரிய்யாத தரீஃகாவின மூலம் மற்றைய தரீஃகாக்கள் போன்றே பெருமானார் (சல்) அவர்களிடமிருந்து தொடங்குகிறது. பெருமானாரின் பிரிய மருமகனார் ஹஸ்ரத் அலி (ரலி) அவர் களால் இந்நெறி விளககமுற்று ஹசன பஸ்ரீ என்பவரால் நிலை நிறுத்தப்பட்டது. அவருடைய சீடர் ஹபீபுல் அஜமி 'ஹபீ பிய்யா' எனற நெறியை ஏற்படுத்தினார். இந்நெறியின் எட்டுப் பிரிவுகளுள் ஒன்று அபுல் பராஹ் சர்சவஸி (இ. 1055) என்பவரால் ஏற்படுத்தப்பட்ட 'சர்சவ்ஸியா' என்ற நெறி இந்

காதிர் ஜீலானி ஆவர். அவருடைய மறைவுக்குப் பின்னர் 300 ஆண்டு கழித்து அலெப்போவில பிறந்த சையித் முஹம்மத் கவுஸ் [பத்தாவது பட்டம்) என்பவரால் காதிரிய்யா நெறி இந்தியாவில நிறுவப்படடது[6].

தமிழகத்தில் இந்நெறியைப் பரப்பியவருள் குறிப்பிடத் தகுநதவர் மகான ஷாகுல் ஹமீது ஆணடகையாவர் (கி பி 1490-1558). நாகூர், காயல் பட்டினம, கீழக்கரை ஆகிய ஊர்கள் இநநெறியில குறிப்பிடத் தகுந்த கேந்திரங்கள்.

குணங்குடியார் காதிரிய்யாத் தரீஃகாவைச் சார்ந்தவர் எனபதை.

> "ஊங்கு முரீதின் உயர்வழி அவரது
> தாங்கும 'காதி ரியயா'த் தன்னைக்
> கணஞ்ேறட்டம இட்டு"[7]

என்ற புலவர் நாயகம் வாயுறை வாழ்த்து வரிகள் விளக்கு கின்றன. மேலும் முகியித்தீன் சதகத்தின் முன்னுல் காணப்படும் குறிப்பில் "முன்னிலைக் குருவாகிய முகியிததீன் ஆண்டகையன்" எனறு குறிப்பிடப்பட்டிருப்பது கொண்டும், "முகியித்திணுமென் குருபதம்" என்ற குருவணக்கப் பாடல் வரி கொண்டும் இக் கருதது உறுதிப்படுகிறது.

குரு

சூஃபியின் ஆன்மீகப் பயணம் வழிகாட்டியின் துணையின்றி அமையாது. வழிகாட்டுதல இறைவன் அருளால் நிகழ க்கூடியது. 'ஃபயஸானுல்லாஹ' அலலது 'ஃபஸ்லுலலாஹ்' என சூஃபிகள் குறிப்பிடும் இறைவன அருளை இடைவிடாது இரப்பது மூலம் பெறலாம்.

> "யஹ்திலலாஹு லினூரிஹி மய்(ன்)யஹரவு"

(அலலாஹ தான் நாடியவர்களைத் தன் ஒளியின்பால் செலுத்து கிறுன) என்பது திருமறை வாககு.[8]

> "அவனருளாலே அவன்தாள வணங்கி"[9]

என மணிவாசகமும,

> "மயர்வற மதிநலம் அருளின னெவனவன்"[10]

என நம்மாழ்வாரும பாடுவதும் ஒப்புநோக்கத்தக்கது

இறைவனுடைய நாமங்களாக அரபியில் வழங்கும் அழகிய 99 நாமங்களுள் 'ஹாதி' எனபதும் ஒன்று இதற்கு 'வழி காட்டி' என்று பொருள். இறைவனின் வழிகாட்டுதல இரு வகைப்படும். தேனீக்குக் கூடுகட்டத் தெரிவது போன்று எல்லா உயிரினங்களுக்குள்ளும் அமைந்திருக்கும் வழிகாட்டுகல் 'தக்வீனீ' எனப்படும். இரண்டாவது வகை தூதர்கள் வாயிலாக வேதங்களை வெளிப்படுத்தி மாந்தர்ககு நன்னெறி காட்டுவது. இது 'தஷ்ரீயி' எனப்படும்.

"சூஃபித்துவத்தில் ஆன்மீக வழிகாட்டியாகிய குருவின் பணி தூதர்மணி முகம்மது (சல்) அவர்கள்மீது இறைவன் சொரிந்த அருளை பாரம்பரியச் சொத்தாகப் பெற்று அவ்வருள் துணை கொண்டு தீட்சை பெற்றுரைத் தெய்வீக வெளிப்பாடுகளின் வழியே நேர் நெறியில் பயணம் செய்யச் செய்து இறைவனை அடைய வழிகாட்டுதலாகும."[11]

"இறைவனே அவனுக்கு (சூஃபிககு) குரு; வழிகாட்டி" என்பர் 'குல்ஷனே-ராஸ்' என்ற நூலில் ஷபிஸ்தாரி என்பார். எனவே இறைவனே குரு வாயிலாக உணர்த்துகிறுன் என்பதே சூஃபிகளின் கொள்கை.

> "அருவாகி உருவாகி அருவுருவ மற்ற அறி
> வாதார மோனமாகி
> தந்தைதா யாகி அருள் தந்தகுரு ஆகிஎன்
> தனனுயிர்க் குயிருமாகி"[12]

என்று இக்சருத்தைப் பாடுகிறுர் குணங்குடியார்.

"ஷைகுக்கு (குருவுக்கு) கௌவரம் அளிப்பது அல்லாஹ்வுக்கு கௌரவம் தருவதாகும். ஷைகுககு உரிய உரிமைகள் அல்லாஹ்விற்கு உரிய உரிமைகளாம்" என்று 'புதூஹாதுல் மககிய்யா' என்ற நூல் குறிப்பிடுகிறது. இநநெறிப்படியே தம முன்னிலைக் குருவாகிய முகியித்தீன் ஆண்டகையை 'சாட்சாதி ஈசுர சொரூபமே' (நியமநிலை-6) என்பா குணங்குடியார் மேலும் ஆனந்தப் பத்தின இறுதிக் குறிப்பிலும் 'குருபரனை ஒருபரனுகக் கொண்டாடித் தோத்திரஞ் செய்தது' என்று கூறுவதையும் இம்முறைப்படியே பொருள் கொளள வேணடும்.

## சூஃபித்துவ அவதாரக் கோட்பாடு

பரம்பொருளிலிருந்து படைப்புக்கள் உருவாகி அமைந்த நிலையை சூஃபித்துவம் 'அவதாரம்' (தனஸஸுலாத்) என்று கூறும். " ான் ெ இ 'ே . . . றி '

நாடினேன்; எனவே படைப்புக்களை உருவாக்கினேன்'' என்று இறைவன் கூறியதாக 'ஹதீதெ—குத்ஸி'யில் (தூதர் நாயகம் முகம்மது (சல்) அவர்கட்கு இறைவன் அருளிய ஞான வாக்கு களின் தொகுப்பு நூல) கூறப்படுகிறது.

படைப்புக்கள் உருவாவதற்கு முன்னர் துரியாதீத தத் சொரூபமாக இருநத நிர்க்குணப் பிரமத்தை சூஃபித்துவம் 'தாத்' என்று குறிப்பிடும். இது இன்னதெனச் சொல்லொணுதது; மனம் வாக்குக் காயத்திற்கெட்டாதது. இந்நிலை 'அஹதிய்யத்' எனப் படும். இரண்டாம் நிலை வஹ்தத்' எனப்படும். இந்நிலையில் 'தாத்' உள்முகமாக தியானம் கொணடு (ஹுவியத்-அவன்மை) வெளிமுகமாகத் தனக்குள் உள்ள பரமாண்டங்களை உணரும் (அனீய்யத்—தான்மை) 'தாத'தின் பண்புகள் 'சிபத்'துக்கள் எனப்படும். இந்நிலையில் 'தாத்'தும் 'சிபத்'தும் தனித்தனியாக வகுக்கப்படாமல தொகுப்பாகவே உணரப்படும். மூன்றும் நிலை 'வாஹிதிய்யத்' எனப்படும். இது பண்புகளைத் தனியாக வகுத்து உணரும் நிலை. இந்நிலையில் உயிர், அறிவு, சக்தி, நோக்கம், கேட்டல், காணல், பேசல் ஆகிய பண்புகள் உணரப் படுகின்றன இநத உணர்வு நிலை 'லாஹுத்' எனப்படும் இதனைச் சகுணப் பிரமம் எனலாம். லாஹுத் எனப்படும் இறைத்தனமை படைத்தல், காத்தல, அழித்தல் என்ற முத் தொழில் இயற்றத் தொடங்குங்கால் 'ஜபரூத்' என்றழைக்க படும்.[19] 'ஜபரூத்'தின் பணபுகள் ஆன்மாவாகவும், வானவ ராகவும் (இயறகைச் சக்திகள்—தேவர்கள்) வெளிப்படும் நிலை 'ஆலமெ மலக்கூத' எனப்படும். இதற்கடுத்து படைப்புக்களின் மாதிரிகள் — மூலப் படிவங்கள் — உருவாகும். இது 'ஆலமெ மிதால்' எனப்படும். இதிலிருந்து படைப்புக்கள் உருவாகித் தூல உலகு உணடாகும். இது 'ஆலமெ நாசூத்' அல்லது 'ஆலமெ' இன்சான் எனப்படும்.

'வஸ்துதயத்திருநந்தம்' என்ற பாடலில் குணங்குடியார் இக்கோட்பாட்டையே பாடுகிருர். அப்பாடலில் 'ஆலமெ மலக்கூத்' 'ஆலம் அறுவாகு' எனவும், 'ஆலமெ நாசூத்' 'ஆலம் அஜ்சாம்' எனவும் குறிப்பிடப்படுகின்றன. தாம் பாடுவது சூஃபிஞான நெறியே எனச் சுட்டுவதற்கு வஸ்து தயத்திருநநதம், வஸ்துதயநிலசதிருநநதம் என்ற இரு பாடல் களிலும் சூஃபி ஞானக கலைச்சொற்களையே பெய்து பாடுகிருர்.

**நாயக நாயகி பாவம்**

சூஃபிகள் பரமபொருளைக் காதலியாக பாவித்துப் பாடுவர். மி . — . இ'திய ம பி ம்கூட—இறைவனை

நாயகனைக் கருதிப் பாடும் முறைக்கு இது முரணானது எனினும் சித்தர்கள் பரம்பொருளை 'வாலை' என்றும் 'மனோன்மணி' என்றும் இம்மரபுக்கு முரணாகப் பாடியிருப்பதைக் காணலாம். சித்தர்களுக்கும் சூஃபிகளுக்கும் பல ஒற்றுமைக் கூறுகள் உள. அவற்றுள் இதுவும் ஒன்று. தமிழ் சூஃபிக் கவிஞர்களுள் ஒருவராகிய தக்கலை பீர் முகம்மது அவர்களைப் பதினெண் சித்தர்களுள் ஒருவராகச் சேர்த்துக் கொண்டிருப்பது இங்குக் கருதத் தக்கது.

சூபிகள் பரம்பொருளைப் பெண்ணாகப் பாவிப்பதற்குப் பல காரணங்கள் உள. அழகு என்பது தெய்வீகப் பண்புகளின் வெளிப்பாடு. அழகின் உச்ச அளவு பெண்மையிடமே காணப் படுகிறது. மேலும் பெண்மை படைக்கும் ஆற்றல் பெற்றது, தன் அழகு என்ற பண்பால் ஈர்த்துக் காதல் கிளர்ச்சியைத் தூண்டி இணைப்புக்குத் துடிக்க வைப்பது

மேலே குறிப்பிட்ட பரம்பொருளின் 99 அழகிய பெயர்களை—அதாவது தெய்வீகப் பண்புகளை—அழகைச் சார்ந்தவை (ஜமால்) என்றும், மாட்சிமையைச் சார்ந்தவை (ஜலால்) என்றும் இருவகையாகப் பிரிப்பர். தெய்வீக அழகு, மாட்சிமை ஆகிய இரண்டையும் அவற்றின் தன்மை கருதி முறையே பெண்மையாகவும், ஆண்மையாகவும் உருவகிப்பார். இவ்விரண்டு பண்புகளும் பரபஞ்சத்தில் வெளிப்படையாகவும், பக்குவம் பெற்ற ஆன்மாவிடம் அந்தரங்கமாகவும் இருக்கின்றன. தெய்வீக அழகு விரிவை உடையது, மாட்சிமை ஒடுக்கத்தை உடையது. அழகு (ஜமால்) என்பது தூலப் படைப்பாகிய கீழ் நிலையிலிருந்து மேலேறிச் சென்று மூலசத்தை அடையும் ஏற்ற நிலையைக் குறிப்பது மாட்சிமையோ (ஜலால்) மூலச் சத்து படிப்படியாக இறங்கித் தூலப்படைப்பான அவதார—இறக்க—நிலையைச் சுட்டுவது. இவையெல்லாம் கருதி சூஃபிகள் பெண்ணைத் தெய்வீகப் பண்புகளின் குறியீடாகவே மதிப்பர். பாரசீக சூஃபிகளின் ஞானப் பாடல்களில் பெரும்பான்மை இக் குறியீட்டுக் காதல்நெறிப் பாடல்களே!

இத் தெய்வீக அகப்பொருள் மரபைக் குணங்குடியாரிடமும் காணலாம். ஆழ்வார், நாயன்மார்கள் பக்தி நெறியைச் சிறப்பித்துப் பாடுவது போன்று குணங்குடியார் காதல் நெறியைச் சிறப்பித்துப் பாடுகிறார்.

> "வேத வேதாந்தமெல்லாம் விட்டேறிய கடந்து
> "காதலித்து நின்றேன் கண்ணே றகுமானே!"[14]

'கட்டழகி தனைனயென் கண்ணிலுங் காண்கிலேன்
காண்கிலன் என்றழுவனோ?''[18]

'கண்ணுட்டி யானவென கண்மணியை என்றுதான்
காண்பனோ?[19]

மனோன்மணிக் கண்ணி எனத் தனியாகவே ஒரு பகுதி முழுமையும் இந்நெறிப்படிப் பாடப்பட்டுள்ளது. அப்பகுதியுள் வரும்

''என்னை விட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ உன்றனுக்கே
உன்னை விட்டால் பெண்ணெனக்கும் உண்டோ
மனோன்மணியே''[17]

என்ற கண்ணி பரம்பொருளைக் காதலியாகக் கருதும் பாவனையின் நுணுக்கத்தை உணர்த்துகிறது.

'மற்ற அனைத்தையும் துறந்து பரம்பொருள்பால் தீவிரக் காதல் உடையவனே உண்மையான ஆண்பிள்ளை; மீசை மட்டும் முளைத்தவன் அல்லன் என இந்நெறியினைக் கீர்த்தனைப் பகுதியில் வரும் விருத்தத்திலும் விளக்குவார் குணங்குடியார்:

''மீசையுள ளாண்பிள்ளைச் சிங்கமாவார்களோ
முகத்தின மயிர் விரித்தோ ரெல்லாம
மீசையுள் ளாண்பிளளைச சிங்கமெனவன்காண்
குணஙகுடிபால விரைந்து கொண்டோன.''

அமர நிலையாகிய 'பசா' எனபது தெய்வீகக் காதலி தன் காதலர்களை நேசிக்கிறாள் எனபதை உணர்வதே. காதலுக்கு அழகு தேவைப்படுகிறது, அழகை விரும்புகிறது. அழகுக்குக் காதல் தேவைப்படுகிறது; காதலை விரும்புகிறது பரம்பொருள் பரிபூரண அழகாகவும் காதலாகவும் இருககிறது. தன்னைக் காதலிப்பாரை அது காதலிக்கிறது. அதனால காதலிக்கப்படுவார் காதலர் என்ற நிலைமாறிக் காதலியோடு ஒன்றுகி விடுகின்றனா. இதுவே பரிபூரண அத்துவிதம். காதலிபபாரும் காதலிக்கப் படுவாரும் வேறு வேறல்லர். பரம்பொருளே ஒரே காதலி; ஒரே காதலன்.

''இஷ்கோ ஆஷக மஹுாகர்தத் ஜின் முகாம்
குத ஹமோ மாஷுகசு மஞத் உஸஸலாம '.

என்று பாடுகிறுர் ஷயீக் சாத் அபுல் கயீர் என்பார் (ஒரு

''ஆதிநீ 'மகுசூக்கு' றகுமானும் நீ எனக்கு
ஆன'மகு பூவு'ம் நீயே''[19]

மகுசூக்கு — மாஷூஃ—காதலன்; மகுபூவு — மஹபூப—காதலி)

பரிபாஷை

நந்தீஸவரன், மாஞேன்மணி, வாலை, அம்பலம், சிவம், சகதி சாமபவி, கேசரி போனற சொற்களைக் குணகுஙடியார் கையாளுவது பலரைக் குழப்பத்தில ஆழ்த்தியுளளது. இதை வைததுககொண்டு குணங்குடியார் இஸலாத்தை விடடு நீஙகி விட்டதாக இஸ்லாமியர் சிலரும், அவர் இநது சமயத்தைச் சார்நது விட்டார் என இந்து சமயததவர் சிலருமை கருதி மயங்குவா. இமமயககத்திற்கு அறியாமையே காரணம.

ஒவ்வொரு துறைக்கும் கலைச்சொற்கள உணடு. அது போனறே ஆனமீக ஞானம் பெறற அறிஞருமை பரிபாஷையில் தான பேசுவர். இததகைய பரிபாஷைச சொறகள் பாமர மககளைக் குழப்பத்தில் ஆழ்த்தி அங்ஙனம் பேசுவாரைச் சமயா சார நெறிக்கு எதிரானவர் எனக கருதவைக்குமை ஆபததும் உணடு. அரைகுறை அறிவினர்க்குத் தெரிந்தால் ஆபத்து எனபதனுல வைததியர்கள மருநது மூலிகைகளுககுப பரிபாஷை பயனபடுத்துவர். ஞானிகள பரிபாஷை பயனபடுத்துவதற்குமை இதுவே காரணம். கலைச்சொறகளோ, பரிபாஷையோ ஏதேனும் ஒரு மொழிச சொற்களாகவே இருககும். இருபபினுமை அவை அமமொழிச் சொற்களாகக் கருதப்படாமல அததுறைககுரிய கலைச்சொறகளாகவே அனைதது மொழியினராலும் கருதப்படடுப் பயனபடுததப்படும். ஞான பரிபாஷையுமை அவவாறே குணங குடியார பயன்படுத்தும் பரிபாஷைச் சொறகள இநது சமயத தினர் பயனபடுததுமை சொற்களாயினுமை அவா அச்சமயத்தவர் கொள்ளும் பொதுப் பொருளில அவற்றைக கையாளவில்லை இங்கே அவை பரிபாஷைச் சொறகளாகப பயனபடுத்தப்படு கின்றன எடுததுக காட்டாக வைததியாகள 'அரி' எனும் சொலலைப் பயன்படுததினுல் 'திருமால' எனப் பொருள் கொள்வது தவருக முடியும். அதறகுக 'கடுக்காய' போனற வேறு பொருள் உண்டு வைத்திய பரிபாஷையில இதுபோனறே குணங்குடியார் போன்ற ஞானியர், சித்தர்கள பயனபடுத்துவன இநது சமயச் சொற்களல்ல; அவை யோக, ஞான பரிபாஷைச் சொற்கள். அவற்றிற்குப் பொருளும் வேறு.

''பாடுகின்ற சித்தருடை நூல்க ளெல்லாம்
பரிபாஷை தெரியாது''

என்பர் சித்தரான அகத்தியர். இந்தப் பரிபாஷை பாமரர்க்குந் தெரியாது; ஆனல் இத்துறை வல்லார்க்குத் தெரியும்.

இனி, குணங்குடியார் கையாளும் யோக பரிபாஷையைக் காண்போம்.

1. பிரமன்: உள்வாங்கும் மூச்சு என்னும் பூரகத்தைச் சித்தர்கள் பிரமன் எனபர், கண், மூக்கு, செவி, நாவு என்னும் நான்குறுப்புக்களை நானமுகன் என்பதும் உண்டு [19]

2. விட்டுணு: வாங்கிய மூச்சை உள்நிறுத்தும் கும்பகத்தை விட்டுணு என்பர்.

3. உருத்திரன்: வெளிவிடும் முச்சாகிய இரேசகத்தை உருத்திரன் என்பர்.

4 சிவன் 'போம் வாயு சிவம்; உள்ளே புகுதல் சக்தி' என்று கூறும் ஞானசர நூல் (41). சிவம் உயிர் என்றும், சக்தி உடலென்றும் நிஜானநத போதம் கூறும். செம்பொருள் எனனும் மூலப் பொருளில் பரம் பொருளைக் குறிக்கவும் இச் சொல்லை ஞானியர் கையாள்வர்.

5, அம்பலம் புருவ நடு எனப் பொருள்படும் சூஃபிகள இதனை 'நசீரா; எனபர். 'புருவ மத்தி சிவமென்னும சுகவடிவாகிய பரமாததுமாவின் ஸ்தானமாம்' என்று சிவயோக சாரம். [20]

'நாசி நுனியில நயனத் திடைவெளியில்
தேசிகனர் ஆடும் திருநடனம'[21]

எனறும்,

'குறறம் பலநீக்கிக் குணங்குடியென் றேமேவும்
சிறறம பலமவாழ் சிவமே'[22]

என்றும் குணங்குடியார் பாடுவார்.

6. நந்தி· குரு எனப பொருள்படும்:

'முச்சுடர் வட்டமே சக்கரமாம்—அது
மூக்கு நுனியில் கழுமுனையாம
அசசுடா வட்டத் திருநதவனே—குரு
ஆனந்த நந்தியாம ஞானப் பெணணே!''[23]

7. தட்சிணுமூாத்தி இதுவும் குரு எனப் பொருளபடும்.

'மறைக்கவா சனிலகிரி கொள்ளு மென்றுன
மகத்தான தெட்சனு மூர்த்தி யாசான்
நிறைக்கவல்லோ யோகமுதல ஞானம் சொன்னுன
நிற்கவிட மற்றநிர் மலமாம் சோதி'[24]

8. மனோன்மணி, வாலை, உமை, சக்தி: இவை குண்டலி சக்தியைக் குறிப்பிடுவன:

''அம்பிகை மனோன்மணிக் குண்டலித் தாய்பதம்
அர்ச்சிக்க அருள் புரியவும'[25]

இவை பரம் பொருளின் சக்திநிலையையும குறிக்கும.

''மூலத் துதித்தெழுந்த முக்கோணச் சககரத்துள
வாலைதனைப போற்றுமல் மதிமறந்தேன்[26]
'அறிந்துகொள அகண்டத்தே ஞான சகதி
ஆத்தாளைப் பூசித்தால அறுப தீவாள[27]

மேலே குறிப்பிட்ட வாஹிதிய்யத சக்தி எனப்படும், இதனை சூஃபிகள் 'உம்மஹாதுஸ் ஸிபத்' (பண்புகளின் தாய்) என்பா

9. கணபதி; படைப்புத் தொகுதிகளின் தலைவன் என்ற பொருளில பரம்பொருளையே குறிககும.

'ஆதார மூலத் தடியில் கணபதியைப்
பாதார விந்தம பணிந்துநிறப தெககாலம்'[28]

10. சாம்பவி கேசரி; இவை யோக முத்திரைகள்.[29]

இதுபோன்றே வேறு சொற்களும் பரிபாஷை என அறிய வேண்டும். இதனை அறியாது ஞானியாகளுக குறிப்பிட்ட சாதி, சமய முத்திரை குத்துவது அறியாமையாம.

''சமயமெவ்லாம் சத்தியுணடு சிவமு முணடு
சணடாளா பிரித்தலலோ தளளி ஞாகள
சமயமெல்லாம் வேதாந்தசித் தாந்த முணடு
சாதகத்தைப் பாராமல தமஙகி ஞர்கள
சமயமெல்லாம நாதமுணடு விநது முணடு
காக்காமற் கெட்டாாகள் உலகத் தோாகள
சமயமெலாம் அம்பரமாம் ஞான முணடு
தாயைவிடட பாவத்தால தவறிப போச்சே'[30]

என்ற பாட்டு இங்கு சிந்திக்கத்தக்கது.

பொதுவானவர்

நதிகளுக்குத் தனிப்பெயரும் வேறுபாடும் உணடு. ஆனுல அவை கடலில் கலந்துவிட்ட பிறகு கடலநீராக ஒன்றுகிவிடும்.

பிறகு அங்கே நதி நீரைத் தேடுவது அறியாமையே. ஞானியரும் அத்தகையரே. சமயாசார சடங்குகளே மனிதர்களைப் பிரித்துக் காட்டுவன. யோக நெறி நின்று ஞானமுணர்ந்து பேரின்பத்தில் ஒன்றறக் கலநதுவிட்ட ஞானியர்க்குச் சாதி குல சமய முத்திரைகள்இல்லை: அவர்கள் அவற்றைக் கடந்தவர்; அவை அனைத்திற்கும் பொதுவாய் நிற்பவர்.

'காணபபா சாதிகுலம் எங்கட் கில்லை'

என்பார் வால்மீகி.

'நான கிறித்தவன அல்லன்;
யூதன் அல்லன பார்சி அல்லன்;
முஸ்லிமும அல்லன்'

என்பர் ஸூஃபி ஞானக கவிஞர் மௌலான ஜலாலுத்தீன் ரூமி அவர்கள்,

'மத பேதம் ஓதிமதி கெட்டவர்கரு எட்டாத
வான் கருணை வெள்ளம்''[1]

என்றும்,

மதமத் தனையுமற்றறு மதமுற்று யானும்உம்
மதமாக அருள்புரியவும்[2]

என்றும், குணங்குடியார் பாடுவார்.

குணங்குடியார் ஸூஃபி நெறி நின்று ஞானம் உணர்ந்தவர். அதனைத் தமிழர்க்கு உணர்த்த வந்த வள்ளல். எனவே தமிழ் மொழியில் வழங்கும் பரிபாஷையைப் பயன்படுத்துகிறார். வேறு பாடு கருதாத அவர் பொதுவுள்ளத்தை நாம் இங்கே காணலாம்.

''ஏழையடி யேன் விலாமல்உள றுந்தமிழ்க்கு
இரஙகுவதும் எககாலமோ
தீதுமத பேதஙக ளற்றுமே எங்குமிது
செல்வதுவும் எக்காலமோ?''[3]

என்ற பாட்டில் அவர் நோக்கத்தை நாம் உணரலாம்.

## குறிப்பும் விளக்கமும்

1. "Intoxicated ones, Mastan, are lovers of God, Sufi's who are drowned in the sea of Unity, acquinted with mysteries but unaware of the vicissitudes of this world. They are ones who have a vision of the Beloved which whas no semblence to the sensible world of existence"—Laleh Bakhtiar, "Sufi exp-essions of the mystic quest", Thame
d L d 976 113

2 கம்பர் இராமாயணம். பால. கா பாயி. பா. 8.
3. குணங்குடியார். நிராமயக் கண்ணி. 248,
4. மே. கு. கண்ணி 205.
5. மகாவித்வான் திருததணிகை சரவணப் பெருமாள் ஐயர். ஞானமணி மாலை-38
6 Bishop John A Subhan, 'Sufism', The Lucknow publishing House Lucknow U p. 1960 pp 160—183
7 செய்கப்துல் காதிர் நயினர் லெப்பை ஆலிம் புலவர், வாயுறை வாழத்து, வரி 221—223
8 திருக்குர்ஆன 24;3
9. மாணிக்கவாசகர், திருவா. சிவ. புரா. வரி 18.
10 நம்மாழ்வார், திருவாய்மொழி. மூத. பத. பா 1,
11. The role of the spiritual master in Sufism who continues to reflect the Divine Grace bestowed upon the prophet, is to guide the initiated through Divine Revelation towards the straight path in the journey to God — Laleh Bakhtiar p. 41
12. முகியித்தீன் சதகம-37
13 'லாஹூத்தைச் சிவமாகவும, 'ஜபரூத்தை'ச் சகதியாகவும் கூறும் இநது சமயம்.
14. குணங். றகுமான் கண்ணி-88
15 மே. கு. முகியித்தீன சதகம் பாடல்-93
16 மே. கு. முகி. சத, பா. 94.
17 மே கு. மனோன்மணிக கண்ணி–73.
18 மே. கு. மகிமையினுநந்தம். வரி-3.
19. 'நான்முகனே கண்ழுக்குச் செவிநா வாகும—வாலமீகி சூத். ஞானம-3.'
20. பூரணனந்தர், சிவயோக சாரம், சிததர் பாடலகள் பிரேமா பிரசுரம, சென்னே, 1959, பக். 358.
21. குணங. குறையிரஙகியுரைத்தல், பா. 3
22 குணங. நநதீஸவரக் கண்ணி-51
23. மதுரை வாலைசாமி, ஞானக்கும்மி, சித். பா மே கு பா.54
24. கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனர, ஞானப பாடல்கள், பா. 55
25 குணங. காட்சிநி ,, பா. 1.
26. பட்டினத்தார், பூரணமாலை, பா. 1.
27 கைலா. கம். மே. கு பா. 78.
28. பத்திரகிரியார, மெய். புலம. 66.
29 பூரணனநதர், சிவயோக சாரம், சித.பா மே.கு.பக் 346,350
30 கைலா கம். மே. கு. பா. 25
31. குணங. முகி. பத. பா. 42.
32. குணங். சமாதி நிலை. சா. 7.
33. குணங். முகி. சத. பா. 103.

# சூஃபி இலக்கியப் பதிப்புகளும் உரைகளும்

இரா, முத்துக்குமாரசாமி

தமிழ் இலக்கியம் எல்லா வகையான சமயங்களாலும் வளர்ந்தது. இந்த நாட்டில தோன்றிய சமயங்கள் மட்டுமின்றிப் பிறநாடுகளில் தோன்றிய சமயங்களும் தமிழ்நாட்டில வேரூன்றி விழுந்துவிட்டுள்ளன. எல்லாச் சமயங்களும் தமிழை வளர்த்தன. தமிழன்னைக்குத் தம்மாலியன்ற வகையில் அணிகலன்களில் சில காலத்தால பழுப்பேறியுள்ளன. அவள்மீதுள்ள அணிகலன்களை அவளுடைய மக்களே அறியாமலிருக்கின்றனர். அந்த அணிகலன் களை மெருகூட்டும் பணி அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. அத்தகைய பணிகளுள் ஒனறே மறைந்து கிடக்கும் இஸ்லாமியத் தமிழிலக்கியச் செல்வங்களைத் தமிழகூறு நல்லுலகத திற்கு எடுத்துககாட்டும் பணியாகும்.

மக்கத்தில் தோன்றி மதீனத்தில் மலர்ந்த மார்க்கத்தைத் தாங்கள் மேற்கொள்ளினும் இஸலாமியத் தமிழ்ப் புலவர் பெருமக்கள தாம பிறந்த தமிழ் மண்ணின் மரபை மறவாது பேணிக காத்து வநதுளளனர். அவர்கள் படைத்த இலககியங் களனைத்துமே தமிழ இலககிய வடிவங்களிலேயே பெரிதும் ஒத் துள்ளன புராணம், கலம்பகம், மாலை, பிள்ளைத்தமிழ் போன்ற தமிழ் மரபையொட்டிய இலக்கிய வகைகளிலேயே தமிழில் சமய உண்மைகளைக் கூறும் நூல்களைப் படைத்தனர். மணணின் மரபை அவர்கள் மறவாத காரணத்தால் தமிழ் மககளும் எசசமயத்தைச் சாாநதவராயினும் இஸலாமியத் தமிழ் இலக்கியச் சுவையை இனபமுடன் நுகர்ந்து மகிழ்கின்றனர்.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தின பெரும்பகுதி சீறாப் புராணம் போன்ற புராணஙகளாலும், காபபியஙகளாலும் கவரப் பெற்றுள்ளன. எனினும இஸ்லாமியப் பெருமக்களைப் பெரிதும் கவர்நதுள்ளவை ஞானப் பாடல்களேயாம். இஸ்லாமிய ஞானச் செல்வரான குணங்குடி மஸ்தானின் பாடலகளைப் பயிலாத தமிழாகளே கிடையாது. எனலாம். குறிப்பாக அவருடைய நூலைப் பயிலுமபோது அது இஸ்லாமியப் பெருநூலா அல்லது இநது சமய நூலா என்று தெளிவாகத் தெரியாத அளவிற்கு எல்லாம்வல்ல இறைவனை, மூல முழு முதல்வனைப் பாடும் நூலாக அது அமைந்துள்ளது. அவரும் தமிழ்நாட்டுச் சிததர்களுள் ஒருவ ராக எணணிபபோற்றிப் புகழப் பெறுகிறார். அவரைப் போன்ற மெய்ஞ்ஞானச் செல்வர்களையே இஸ்லாமிய மக்கள் 'சூஃபி'கள் என றும் அவருடைய இலக்கியங்களை, மெய்ஞ்ஞானப் பாடல்களை

இஸ்லாமிய சமயம் பல்வகைத் தொழுகைக் கட்டுப்பாடு களுடன் கூடியதாகும். எல்லாம் வல்ல இறைவனைத் தொழவும், நேரமும் ஒழுங்குமுறையும் வகுத்துக் கொணடுள்ளது. அச்சம யத்தைச் சார்ந்த அனைவருக்கும் ஆண, பெண, சிறுவர் எல்லோ ருக்கும் இத்தொழுகைக் கட்டுப்பாடுகள் இன்றியமையாதன. ஒவ்வொரு சமயமும் இதைப் போன்ற ஒழுங்குமுறைகளையும் சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் வைத்துள்ளது. ஆனால் இம்முறைகளும், சடங்குகளும சாதாரண மக்களுக்குத்தான பெரிதும் பொருந்திவரும். இவற்றைக் கடந்து எல்லாம் வல்ல இறைவன் ஒருவனே. அவனை ஞான வழியில் மட்டுமே காண இயலும் என்று எண்ணிய ஞானிகள் எல்லாச் சமயத்திலும் உள்ளனர்.

இத்தகைய ஞானிகள் புறவேடங்களிலும் சடங்குகளிலும் தம் நாட்டத்தைச் செலுத்துவதில்லை. தமக்குள் தாமே இறை வனைக் காண முயல்வர். இத்தகையோர் பிறரைப்போல இல்லற நெறியை நாடுவதில்லை. துறவு பூணடு மக்கள் நடமாட்டமற்ற காடுகளிலும் மலைகளிலும் குகைகளிலும் வாழ்வர். உடலை வளர்க்கும் உணவை உணபதை விட்டுவிட்டு ஞான அறிவை வளர்க்கும் பணியிலேயே ஈடுபட்டிருப்பர். தமிழ் மக்கள் இவர் களைச் சித்தர்கள் என்பர். இஸலாமியப் பெருமக்கள இவர்களைச் 'சூஃபி'கள் என்பர்.

'சூஃபி'கள் என்போர் இஸலாத்தின் முன்னணி வீரர்கள். ஆத்ம விசாரணைக்கும், சத்திய சோதனைககும் உளளாகி அரிய சாதனைகள் செய்திட்ட அறிஞர் பெருமக்கள், கருமம், ஞானம், பக்தி, யோகம், ஆகியவற்றின்மூலம் உள்ளும் புறமும் ஒளி பெற்று இலங்கும் இறையன்பர்கள' இறைவனுடன இரணடறக் கலந்து அறியாப் பெருநிலைப் பெற்ற நிறைஞானிகள்.

'சூஃபி' என்றால் கம்பளி என்று பொருள். தொடக்கத்தில் இஸ்லாமியப் பெரு ஞானிகள் கம்பளி ஆடைகளையே அணிந்து வந்தனர். எனவே அவர்கள் சூஃகள் என அழைக்கப் பெற்றனர் என்பர். இதற்கு வேறு விளக்கம் கொடுப்பாருமுளர்,

'சூஃபிகள் என்பார் மெய்ஞ்ஞானிகள். இவர்களைத் தமிழ் நாட்டுச் சித்தாகளோடு ஒப்பிடலாம். மெய்ஞ்ஞானம் என்பதைக் கவிஞர் பேராசிரியா அப்துற் றஹ்மான அவர்கள் எளிய கவிதை வடிவில் விளக்கியுள்ளார்கэ

கடுவேசங் கடக்கின்ற
    கல்பென்ற குதிரைக்கே
கடிவாளம பூட்டுவதே
    கதியூட்டும அருள்ஞானம்,
தானெனனும் தருக்குநிலை.
    தலைவிட்டும கழறறுவதே
ஊனுயிரும் முக்திபெறும்
    உயர்வான மெயஞ்ஞானம்.

இத்தகைய மெய்ஞ்ஞானத்தை அடைதற்குரிய தொழுகை முறையும் இறைநெறியுமே இஹ்ஸான் என்பதாகும். இதுவே சூஃபிஸத்தின அடிப்படையாகும்.

வணக்கத்துக்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயகன் இல்லை என்று ஏற்றுக கொண்டபின் அத்தகைய அல்லாஹ்வை ஒருவா நேராகப் பார்க்க முடியாவிட்டாலும் அவரைத் தொழு பவர்கள் அவரைக் காணமுடியாவிடினும் அவ்வாறு தொழுபவர் களை அவர் பார்த்துக்கொணடேயிருக்கிறூர் என்ற உறுதியோடு இறைவனைத் தொழுவதாகும். மெய்ஞ்ஞானிகள் என்னும் சூஃபிகள் இதையே செய்தனர். இவர்கள் பாடியே பாடல்களே சூஃபி இலக்கியம் எனப் போற்றப்படுகிறது.

சூஃபி இலக்கியத்தின் தூண்களாகத் திகழ்ந்தவர்கள் 23ஆம் நூற்றூண்டில் வாழ்ந்த முப்பெரும் பாரசீக மெய்ஞ்ஞானிகள் ஆவர். பருதுத்தீன அத்தர், ஜலாலுதீன் ரூமி, சா அதி என் பவாகளே அவர்கள்,

தமிழ் மொழியில் சூஃபி இலக்கியம் கடந்த ஐந்து நூற்றூண் டுகளாகவே சிறநது விளங்குகிறது

தமிழச் சூஃபி இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள ஞானிகள் பலர் உள்ளனா. இருப்பினும் எல்லோராலும் போற்றப்பெறு பவர் குணஙகுடி மஸ்தான் சாகிபு அவர்கள். அடுத்துக் குறிப் பிடப்பெற வேணடியவர்கள் தக்கலை பீர்முகம்மது அப்பா அவர் களும் சோட்டாறு ஞானியார் சாஹிபு அவர்களும் ஆவர். இவர் களைத் தமிழர் சூஃபி இலக்கிய மும்மணிகள் என்று குறிப் பிடலாம்.

குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் காலத்தால் பிற்பட்ட

பாடல்கள் சமய வேறுபாடு கடந்து எல்லாச் சமயத்தாராலும் பாடிப்படித்து மகிழப் பெறுவன.

இராமநாதபுர மாவட்டம் குணங்குடி என்னும் சிற்றூறில் கி. பி, 1787இல் தோன்றியவர் இவர். இவர் தம் இயற்பெயர் சுல்தான் அப்துல்காதிறு பதினேழு அகவையிலே பெரியோர்கள் மணமுடிக்கத் திட்டமிட்டிருந்தபோது வீட்டை விட்டு வெளி யேறி ஞானநெறியில் புகுந்தவர் அவர். பல ஊர்கள் சென்று பல்லோரிடம் ஞானச்செலவம் பெற்று இறுதியாக இராயபுரத்தில 1834இல அடககமானவர்.

குணங்குடியாரின் பாடல்கள் பெரும்பாலும் அவர்தம் குரு நாதர் முகையித்தீன் ஆண்டகையை முனனிறுத்தியே அமைந் திருக்கும். அவர் தம் பாடல்கள் தமிழ்ச்சிததர் பாடல்களுக்கு ஈடு இணையற்றவை.

> ''வற்ருத சமுத்திரமே, வள்ளலே வான்பொருளே
> சித்தர் உளத்தில் தெளிவே நிராமயமே''

என்று தம்மைச் சித்தராக்கித் தாம் வணங்கிய எல்லாம் வல்ல அல்லாஹ்வைச் சித்தர் உளத்தில தெளிவாக்கியவர் குணங் குடியார்.

இறைவனை நாயகநாயகி பாவத்தில் தம்மை நாயகியாக்கி இறைவனை நாயகனுக்கிப் பாடுவார் பலர். குணங்குடியார்தம்மை நாயகனுகவே வைத்துக் கொண்டு இறைவனை நாயகியாக்கிப் பாடிய 'மனோன்மணிக் கண்ணிப் பாடல்கள்' படித்துப் படித்து மகிழத்தக்கவை.

> ''என்னைவிட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ
> உனறனுக்கே
> உன்னைவிட்டால் பெண எனக்கு உண்டோ
> மனோன்மணியே''

என்று குணங்குடியார் பாடலைப் படிக்கும்போது அவருக்கு இறைவன் மேல் எவ்வளவு ஈடுபாடு என்பதை உணரமுடிகிறது.

இத்தகைய மெய்ஞ்ஞானப் பாடல்களை இஸ்லாமியப் பெரு மக்கள் மட்டுமல்லாது இந்து சமயப் பெருமககளும பெரிதும விரும்பிப் படித்தனர். இப்பாடலகளை முதன முதலில் விரும்பித் தொகுத்தவரே ஓர் இந்துதான். குணஙகுடி மஸ்தான அவர்கள்

நாள்தோறும் பாடல்களைப் பாடிவந்தபோது, அவருடன் இருந்த அன்பர்களின் தலையாயவரான சீயமங்கலம் அருணாசல முதலியார் அவற்றைத் தொகுத்து வைத்தார், அவற்றையெல்லாம் தொகுத்து நூலாக வெளியிட உதவியர் புலவர் நாயகம் அவர்கள்

முதன்முதலில் தொகுத்து வெளியிட்டது மட்டுமின்றித் தொடர்ந்து அதைப் பல பதிப்புகள் வெளியிட்டவர்களும் அவற்றிற்கு உரையெழுதியவர்களும் இந்து சமயத்தினர்தாம். இதைப் பற்றி தமிழ் நூல் விவரணப்பட்டியை முதன்முதல் தொகுத்த ஜான் மார்டாக் என்ற மேனாட்டு அறிஞர் 'இந்துக்கள் குணங்குடி மஸ்தானைத் தம ரிஷிகளில் ஒருவராகக் கருதியதால் அவர் பாடல்களைத திரும்பத் திரும்ப அசசிடுகின்றனர்' என்று குறிப்பிட்டுள்ளார்.

குணங்குடியார் பாடல்களை அருணாசல முதலியார் தொகுத்து வைத்திருப்பினும் செம்மைப்படுத்தும் பணியைச்-சேகனாப் புலவர் எனும் புலவர் நாயகம் அவர்களிடமே ஒப்படைக்கிறார். செய்கப்துல்காதிர்நெயனார் லெப்பை ஆலிம் என்ற நீண்ட பெயரையுடைய சேகனாப் புலவர் அவர்கள் குணங்குடியார். பாடல்களைச் செம்மைப்படுத்துவதற்கு மிகவும் தகுதியானவர் ஏனெனில் குணஙகுடியாருடன அவர் பள்ளியில் பயின்றவர். குணங்குடியாரைத் தம் 'வித்தையிற்றோழன்' என்று பாராட்டுகிறார் புலவர் நாயகம்.

புலவர் நாயகம் குணங்குடியாரின் பாடல்களைப் பதிப்பித்த விதத்தைக கீழ் வருமாறு குறிப்பிடுகிறார்·

"சொல்லும் அதுவே பொருளும் அதுவே
புல்லும் தொகையும் புணர்ப்பும் அதுவே
அன்றி ஒனறும் அமைத்தேன அல்லேன்"

பாடல்களில் இருந்த சொற்களைப் பொருள் சிதையாதவாறு இருந்தது இருந்தவாறு பதிப்பிததாக அவர் குறிப்பிடுகிறார. பதிப்புப் பணியில் அவர் சிறநதவா என்பது முதன்முதலில சீறாப் புராணத்தைப் பல ஏடுகளிலிருந்து பதித்த வகையில் யாவரும் அறிவா. எனவே இன்று மஸ்தான சாகிப் அவாகளின் பாடல நமக்குக் கிடைப்பதற்குக் காரணமாயிருந்தவர் புலவர் நாயகம் அவாகள் என்பதை அறிகிறோம.

குணங்குடி மஸ்தான் பாடல்களின்மூலம் மட்டும் தொடர்ந்து பலபதிப்புகள் வந்துள்ளன. அருணாசலமுதலியாரைத் தொடர்நது

சி. நாராயணசாமி முதலியார் பதிப்பித்து வந்துள்ளார். சூன். 1874இல் ஏழாம் பதிப்பை வெளியிட்டு உள்ளார் அதன் பத்தாம் பதிப்பு 1875 டிசம்பரில் வெளிவந்துள்ளது. இவ்வாறு ஓராண்டுக் குள்ளேயே மூன்று நான்கு பதிப்புகள் வெளிவந்து மக்களிடையே நன்கு பரவியிருந்ததைக் காணுகிறோம்.

இந்த நூற்றாண்டில் பலர் மஸ்தான் சாகிப திருப்பாடற் றிரட்டை வெளியிட்டுள்ளனர். திருக்குறளை எவ்வாறு ஒவ்வொரு பதிப்பகத்தாரும் தாங்கள் ஒரு பதிப்பு கொணடு வரவேண்டு மென்று கருதினார்களோ அவ்வாறு மஸ்தான் சாகிப் பாடல்களை யும் அச்சிட்டனர்.

காலத்துக்கேற்ற வகையில் செம்மைப்படுத்தும் பணியைக் கோட்டாறு கா. ப. ஷெய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் ஏறறுக்கொண்டு மஸ்தான பாடல்களை ஆய்ந்துள்ளனர். அப்பணி யில் வேறு சிலரையும் ஈடுபடுத்தியதால் பின்வந்த பதிப்புகள் அனைத்தும் 'கோட்டாறு கா. ப. ஷெய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் முன்னிலையில் பரிசோதித்த பிரதிக்கிணங்க அச்சிட்ட தாகக் குறிப்பிடுகின்றனர்.

அட்டாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் முன்னிலையில் பரிசோதித்ததை முதன முதல வெளியிட்டவர்கள் அமரம்பேடு இரங்கசாமி முதலியார் அண்டு சனஸ் அவர்கள் 1921இல் தமது பூமகள் விலாச அச்சுக்கூடத்தில் அதனைப் பதிப் பித்துள்ளனர். 1923இல் மேற் குறிப்பிட்ட பிரதிக்கிணஙக கே.வி, துரைசாமி முதலியாரவர்கள் ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் பிரஸ்ஸில் திருப்பாடற்றிரட்டை வெளியிட்டுள்ளனர்.

சென்னை மண்ணடி சரணபவ அச்சுக்கூடம் 1930இல் திருப் பாடற்றிரட்டை அச்சிட்டுள்ளன. பாமர மக்களுக்குப் பயன படக்கூடிய நூல்களைப் பெருவாரியாக அச்சிட்டு வரும் பி. இரத்தின நாயகர் & சன்ஸ் நிறுவனம் தொடர்ந்து இதுகாறும் திருப்பாடற்றிரட்டை அச்சிட்டு வருகின்றது.

குணங்குடியாரின் பாடல்களை மட்டும், பயின்று வநத மக்களுக்கு அவற்றின் பொருளையும் உரைவடிவில் தர வேண்டு மென்ற எண்ணம் இந்த நூற்றாண்டின தொடககததில் எழுநதது. அதைப் பதிப்பாளர்கள் நூலின தொடக்கததில் குறிப்பிட்டுள் ளார்கள்.

'மஸ்தான் சாகிபு அவர்கள் ஜீவதிசையில் அருளிச் செய்த திருப்பாடற்றிரட்டு' என்னும் இந்நூலை ஏறக்குறைய அறுபது வருஷங்களாகியும் இதற்கொருவரும் உரையெழுதி வெளிப் படுத்தாதிருந்ததனுல் இப்பொழுது வேதாந்த நூல்களில் தேர்ச்சி யுடையவரும் தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு முதலிய நூல்களுக்கெல்லாம் உரையெழுதியவருமாகிய பிர பணை வித்துவான காஞ்சீபுரம இராமஸ்வாமி நாயுடவர்களைக் கொண்டு பதவுரை விசேஷவுரை முதலியன எழுதுவித்ததாகப்' பதிப்புரை குறிபபிடுகின்றது.

மூலமும் உரையும சரிவர அமைந்திருக்கின்றதா என்பதை ஆயும் பணியைத திருநெலவேலி மாவட்டத்திலுள்ள செவ்வல் மாநகரம் மகாவித்துவான எம் ஏ. நெயினு முகம்மதுப் பாவல ரவாகள ஏற்றிருநதனர். இவவிருவரின கூட்டு முயற்சியால் மஸ்தான் சாகிப் திருப்பாடற்றிரட்டு குறிப்புரையுடன் சென்னை திரிபுரசுந்தரி விலாசம் பிரஸ் 1905இல் அச்சிட்டது.

மஸதான் சாகிப் பாடல்களை உரையுடன் படிக்க மக்கள் விரும்பியதால் கா. இராமஸவாமி நாயுடு அவர்களின் உரையை அவர்கள் விரும்பி வரவேற்றனர். இவவுரை 1916இல் இரண் டாம் முறையாகச் செனனைப் பூமகள் விலாச அச்சுக்கூடத்தின வழி அமரம்பேடு முத்து வடிவேலு முதலியாரவர்களால் பதிப்பிக் கப் பெற்றது. அவரே 1925இல் மூன்றும் பதிப்பையும் அதே அச்சகத்தில் வழி கொணாந்தனர். அதன்பின் அவ்வுரை மீணடும் அச்சிடப் பெற்றதா என்ற விவரம் தெரியவில்லை.

இராமசாமி நாயுடு அவர்களின உரை பதவுரையுடனும் விசேஷவுரை என்ற வகையில் ஓரளவு சிறு விளக்கவுரையுடனும் கூடியதாக அமைநதிருந்தது. இருபபினும நூலுககு விரிவான உரை தேவைப்பட்டது. அதை நிறைவேற்றியவர் சென்னைத் தொணடை மண்டலம் கல்விசசாலை பிரதம தமிழ்ப் பண்டிதர் வித்துவான் கு. சுப்பன செட்டியார் அவர்கள் மாணவர் மா. வடிவேலு முதலியாா ஆவார்

வடிவேலு முதலியார் எழுதிய பொழிப்புரை மூலப் பாடல் களின் சுவையை முறறும விளககுவதுடன் அவற்றைப் புரிந்து கொள்ளப் பெருநதுணையாக உள்ளது.

அவ்வுரையாசிரியருக்கு வேணடிய பொருளுதவியைச் செய்து அச்சிட்டு வெளியிடும் பொறுப்பைச் சென்னை, புரசையிலிருந்து சி வியர் க்கொண்டார். அவர்தம

சுந்தரவிலாச அச்சுக்கூடத்தின் வாயிலாக நூல் அச்சிடப் பெற்று 1908இல வெளியாயிற்று.

பின்னர் வடிவேல் முதலியாரின் உரையை அச்சிடும் உரிமையை சென்னை ஷாஹுல் அமீதியா அச்சியந்திர சாலை பெற்று 1928இல இரண்டாம் பதிப்பை உருவாக்கிற்று.

இராமஸ்வாமி நாயுடு பதவுரையும் வடிவேலு முதலியாரின் பொழிப்புரையும் வெளிவந்த பினனரும் இஸ்லாமிய சமயததைச் சார்நத ஒரு நூலுக்கு அச்சமயத்தைச சாரநத ஒருவரே உரை யெழுதுவது சாலப்பொருத்தமானது என்ற கருததை அடிபபடை யாகக் கொண்டு தமிழ் நாட்டுஅரசியலில கடநத அரை நூற்றாண டாகப் பங்கு கொண்டவரும் சிறநத இலககியச செலவருமான திருத் தணி என. ஏ. ரஷீத் அவாகள புதுஉரை எழுதலாயினா அவவுரை மிக அழகிய முறையில் கணணையும கருததையும் கவர் கினற வகையில் அவர்தம் ஞானவெள்ளல பதிபபகத்தின மூலமாக மஸ்தான் சாஹிபு பாடலும உரையும என்ற தலைப்பில 1979இல் வெளியிடப பெறறுளளது.

இஸலாமிய மெய்ஞ்ஞானச செல்வாகளுள் குணங்குடியார் யாவரும் அறிநத ஒருவராகிவிடடாா பலராலும நனகு அறியப் படாத மெயஞ்ஞான மேதைகள பலருளர். அவர்கள் படைத துளள மெயஞ்ஞானப பாடலகள முழுவதும் அசசிடப் பெற்றுள ளனவோ எனறும் அறிவதற்கில்லை. கி.பி. 17ஆம் நூற்றாணடு முதல இநத நூறறாணடுவரை பல மெயஞ்ஞானிகள் வாழ்ந்துள்ள னா. அவர்களுள் தலையாயவா தககலை மெயஞ்ஞான மேதை பீாமுசமமது சாகிப் ஒலியுலலா ஆவர். கி பி 17ஆம நூற்றாண டைச சாரநத அவா இயறறிய மெய்ஞ்ஞான நூல்கள இன்றும் எலலோராலும போற்றிப படிததுப புகழப பெறுகின்றன. தமிழகததில 'பதினெண் சித்தா' எனறு 18 சிததாகள் போற்றப பெறுகினறனர். அவாகளுள ஒருவராகப பீாமுகமமது சாகிப அவர்களும திகழ்கிறாகள் எனபதை நோககுமபோது அவா இந்து சமய மககளிடையே எவவளவு செலவாககுப பெறறிருந தாா என்பதை உணர முடிகிறது. பதினெண சிததா ஞானக் கோவையில அவர்தம் 'ஞானரத்தினக் குறவஞ்சி'யும் சேர்ககப் பெற்றுளளது.

மெயஞ்ஞானி பீர்முகம்மது அவாகளின் நூலை அசசிடும் முயறசி நூறு ஆணடுகட்கு முன்னரே மேறகொளளப் பெறறுள ளது 1878இல் கோட்டாறு செயிகு மைதீனாரு லெப்பை அவர்கள குமாரா மெயஞ்ஞானசுருபராகிய செயிகுசுதம்பி லெப்பைசாகிப்

அவர்கள் அப்பாவின் 'ஞானப்புகழ்ச்சி' நூலை அச்சிட்டுள் ளார். தஞ்சை மாநகரில் கோவிந்தாசாரியாரின் சிவாநந்நிலைய அச்சுக்கூடத்தில் இது புதுப்பிக்கப்பட்டது.

செய்குத் தம்பி லெப்பை சாகிப் அவர்கள் தாமே ஒரு மெஞ் ஞானி ஆவார். பல ஞானப்பாடல்களுக்கு ஆசிரியா

மேற்கூறிய பதிப்பில் 'ஞானப்புகழ்ச்சி' (573 பாடல்கள் 'முச்சுடர் பதிகஙகள' (92 விருத்தங்கள்) 'ஞான நடனம்' (12) ஆகிய மூன்று பீர்முகம்மது நூல்கள் இடம் பெற்றுள்ளன.

இவற்றுடன் இதனை அச்சிட்ட செய்குத்தம்பி லெப்பை சாகிபு அவர்களின் ஞான ஆனந்த அடைக்கலம், ஞானப் பதிகங்கள் ஆகியவையும் அச்சாகியுள்ளன.

பீர்முகம்மது அப்பாவின் ஞானப்பாடல்களை வெளியிடுவதுடன் அவற்றுக்கு ஞானவிரிவுரையும் எழுதி வெளியிட வேணடுமென்ற முயற்சி மேற்கொள்ளப்பெற்று பாண்டிமணடலம் செவவல் மாநகரம் மகாவித்துவான் எம்.ஏ. நயினு முஹம்மதுப் பாவலர் அவர்கள் சில நூலகளை உரையுடன் வெளிவர உதவியாயிருந்திருக் கிறார். சென்னை, திருவல்லிக்கேணி யுனானிமதரிய்யா மெடிக்கல் ஸ்டோர்ஸ் உரிமையாளர் டாக்டர் எம்.ஏ. ஷேக்மதார் சாகிபு அவர்களும் அவர்கள் திருக்குமாரர்களும் அவற்றைப் பொருட் செலவிட்டு அச்சிட்டுள்ளனர்.

மகரிபத்து மாலை [நம் பதிப்பு-1955) ஞானமணிமாலை (2ஆம் பதிப்பு—1923) பிஸ்மில்குறம் [4 ஆம் பதிப்பு—1959) ஞான ரத்தினக் குறவஞ்சி உறை, ஞான முச்சுடர் அவதாரிகை உரை, ஞானக் குறம் பகுத்தறிவுரை, ஞானப்பால் அகமிய உரை, ஞானப்பூட்டு திறவுகோலுரை, ஞான ஒப்பாரி திருக்கட்டளை உரை முதலாயின நயினு முகம்மதுப் பாவலரவர்களின் உரைத் திறனை நனகு உணர்த்துபவை.

அப்பாவின 'பிஸ்மில்குறம' காயற்பட்டணம் கணணகுமது மகுது முகமமது அவர்களால செப்பனிடப்பெற்றுச் 'சுத்தப் பதிப்பாகச் சென்னை எம். ஏ. ஷாகுல் அமீது அண்ட் சன்சாரால் 1956இல் வெளிவந்துள்ளது. இதற்கு முன்னரே இது பதிப்பிக்கப் பெற்றிருக்கும். இநநிறுவனம் ஈடேற்றமாலை (1955) திருநெறி நீதம் (1955) ஆகியவற்றையும் வெளியிட்டுளளது.

கோட்டாறு, ஞானியார் சாகிபு (வலி) டிரஸ்ட் ஞானியாரின்

புகழ்ச்சி, ஞானமணிமாலை, ஞானக்குறம், ஞானரத்தினக் குற வஞ்சி. ஞான ஆனந்தக்களிப்பு, திருமெய்ஞ்ஞானச் சரநூல், ஞான நடனம், ஞானமுச்சுடர்ப் பதிகங்கள், ஞானவிகடசமர்த்து மகரி பத்துமாலை முதலியவை டிரஸ்டு வழி வெளிவந்துள்ளது.

தக்கலை அஞ்சுவண்ணம் பீர்முகம்மதிய்ய முஸ்லீம் சங்கம் ஞானியாரின் ஞானப்புகழ்ச்சி, ரோசுமீசாக்குமாலை, திருமெய்ஞ் ஞானச் சரநூல் ஆகியவை அடங்கிய நூலை 1977இல் அச்சிட் டுள்ளது.

மெய்ஞ்ஞானி பீர்முகம்மதவாகளின பாடலகளனைத்தையும செபபனிட்டு விரிவான உரையுடன் நலலமுறையில இனி பதிப் பிக்கவேண்டும்.

கோட்டாறில் வாழ்ந்த சைகு அபூபக்கா சாகிபு அவர்களின் குமாரரா சைகுமுகிய்யிததீன மலுககு முதலியாரே 'ஞானியார் சாகிபு' எனறு எலலோராலும் போறறபபெறும மெய்ஞ்ஞானி ஆவார். 13ஆம நூறறுாணடில வாழநத அவா கமுதி செயிது முகிய்தீனின் வேணடுகோட்கிணஙகிப் பாடிய ஞானபபாடலகள் அச்சில வெளிவநதுள்ளன.

இவ்வாறு முப்பெரும் ஞானிகளின திருப்பாடலகள் தமிழக மககளுககுப் பயன படுமவகையில பல பெருமக்கள் அசசுபபொறி யேறறியுளளனர். இவாகள் மட்டுமனறிப பிறகாலத்தில பல மெய்ஞ்ஞானிகள தோன்றி அறிய பல பாடலகளைப் பாடி யுளளனர். அவற்றை அச்சிடும் பணியும் அவவப்போது நடை பெற்றிருக்கிறது. இதுவரை வெளிவநதுளள மெயஞ்ஞானப் பாடலகள அனைத்தையும் தொகுத்து 'மெயஞ்ஞானக களஞ் சியம' என்று வெளியிட்டால இஸலாமியப் பெருமக்கள தமிழ மொழிக்குச் செய்துள்ள தொணடு நனகு புலனாகும.

பிற்கால ஞானிகளுள் குறிப்பிடத்தக்க ஒருவா மெயஞ்ஞான குரு கோட்டாறு செய்குபாவா செய்குசுலைமானுல் காதுரியீ சாகிப் ஆவா. அவர் அருள் ஞானததுள் மூழகிப் பலகாலம் கல்வததிலிருநதும காடுமலை குகைகளிலிருந்தும முத்தெடுத்து பரமஞான நிஷடையிலிருந்து பாடிய திருமெய்ஞ்ஞானப் பாடலகள் பல. அவறறைத் தொகுத்து வெளியிடப்பொருளுதவி செய்தவர் அவருடைய சீடராகிய கொழும்பு ஹசன அலி முகிய்யதீன் பாவா அவர்கள். 'திருமெயஞ்ஞானச்சரகத திருப் பாடற்றிரட்டு' எனற பெயரில இவை தொகுககப் பெறறு

கொழும்பு மீனும்மாள் அச்சியந்திர சாலையில்1922இல் அச்சிடப் பெற்றுள்ளன.

இந்நூலில் மெய்ஞ்ஞானத்தங்கப் பாட்டுமாலை (156) ஷிபா மாலை (70) தாய்மகளேசல் (101) திருமணி நடனவலங்காரப் புஞ்சம் (300) உகதத்துமாலை (48) வாகிதிய்யாமாலை (65) ஞானக்கண்மாலை (108) சன்ஜீல் கருமாத்துமாலை (251) முதலிய பல சிறுநூல்கள் அடங்கியுள்ளன.

திருவனந்தபுரத்தைச் சார்ந்த கணியாபுரத்து மெய்ஞ்ஞான சொரூபராகிய செய்கப்துல்காதிறு வாலைமஸ்தான் சாகிபவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஞானப் பாடல்கள் 'ஞான வாக்கியம்' என்ற தலைப்பில் காயற்பட்டணம் கண்ணகுமது மகுது முகம்மதுப் புலவரவர்களாற் பார்வையிடப்பெற்றுச் சென்னை சாகுல் அமீதியா அச்சியந்திர சாலையில் 1928இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இதிலுள்ள பாடல்கள் 424.

தென்காசிப்பதியிலெழுந்தருளி திருவனந்தபுரம்,' புனலூர் கொழும்ப முதலியவிடங்களில் வாழ்ந்த ஞானுதிக்கரென்னும் ஆ. சி. பரிமளம் முகமமதுகாசிம் சாகிபு அவர்கள் பிற்காலத்தில் வாழ்ந்த மெய்ஞ்ஞானச் செல்வர்களுள் ஒருவராவார். இவர் தம் அருட்பாடல்கள் 1555ம் 'ஞானமிர்த போதனை' என்ற தலைப் பிலும் 'பரிமளத்தார் பாடல்' என்ற துணைத்தலைப்புடனும நூலாகியுள்ளன. ஞானரதகின ஒளிதீப முனுஜாத்து, நெஞ்சகக்கும்மி உயிர்க்குருக்கணணி, தனனையறியும் பதம் போன்ற பல தலைப்புக் களில் இவர் பாடியுள்ளார்.

பரிமளத்தாரின் மனைவி இறசூல் பீவி அம்மாளும் கணவரைப் போலவே ஞானப்பாடல்கள் பாடும் ஆற்றல் பெற்றுச் சிறந்து விளங்கியுள்ளார். 'ஞானுமிர்த சாகரம்' என்ற நூலில் அறநூறுக்கு மேற்பட்ட பாடல்கள் உள்ளன. என்தாய்க்கணணி, குருபரக்கணணி, கப்பல்சிந்து, தாய்மகளேசல், அம்மானை' நெஞ் சோடு புலம்பல் போன்ற பல தலைப்புகளில பாடல்கள் அமைந் துள்ளன. அம்மையாரின் புதல்வர். முகமமதப்பாசு சாகிப் அவர்கள் தென்காசி ராமானுஜம் அச்சுயந்திர சாலையில் 1910இல் இதைப் பதிப்பித்துள்ளார்

காயற்பட்டணம் செய்குமுகம்மது ஹாலிஹ ஒலியுல்லா அவர்களின் குமாரர் மெய்ஞ்ஞானி அப்துல் கனி சாகிப் அவர் களின் ஞானப்பாடல்கள் 'ஞானுந்த ரத்தினம்' முதற்கண நாகை

எம். ஏ. நெயினா முகம்மது அவர்கள் உரையுடன் சென்னை ஹக்கீம் கொ அ. சாகுல் அமீது அவர்களால் 1927இல் சாகுல் அமீதியா அச்சியந்திர சாலையில் அசசாயிற்று இதில் ஞானப் பிரசன்னசுரத்தினம் நிராமயக்கண்ணி, சந்தக்கும்மி, மெய்ஞ் ஞானக கீததனைகள், குருவருள் ஆனந்தக்காட்சி போன்ற பல சிறு நூல்கள் அடங்கியுள்ளன.

தொணடி மோனகுரு செய்கு மஸதான் சாகிபு அவர்கள் சென்ற நூற்றாண்டின இறுதியில வாழ்ந்த பெருஞானி அவர்தம் பாடல்களைத் திருசசியில் வாழ்ந்த பெரும்புலவரான பிச்சை இபுறாகிம் புலவரவாகள இலக்கணமிலக்கியம் இயையப் பாாவை யிட்டுத் தர திருப்பாடற்றிரட்டு என்ற தலைப்பில் 1933இல் சாது பொன்னம்பலம சுவாமிகள் அச்சிட்டுள்ளனர் 611 பாடல்கள் கொண்ட இசசிறுநூல கைக்கடக்கமாக அழகிய முறையில் அச்சிடப் பெற்றுள்ளது.

கடையநல்லூர் சாமில் வலீ அல்ஆரிபு ஷெய்குனா செயகுதுமானுல் அவர்கள் பாடியுள்ள 'ஞானோதய புஞ்சம்' என்னும் 'மெய்ஞ்ஞானக் கருவூலம்' அரிய மெய்ஞ்ஞானப் பாடல் களைத் தாங்கியுள்ளது. பினாங்கியுள்ள ஐக்கிய முஸ்லீம் சங்கத்தார் பெரும் பொருட்செலவில் இப்பாடலகளைத் தொகுத்து வெளி யிட்டுள்ளனர். ரஹ்மான முனாஜாத் (29) முகிய்யதீன ஆண்டகை முனாஜாத் (29) மெய்ஞ்ஞானக் கும்மி (98) மெய்ஞ்ஞானச் சதகம் (100) போன்ற பல சிறு நூல்களும் பல கீர்த்தனைகளும் இந்நூலில அடங்கியுள்ளனா.

இஸ்லாமியப் பெருமக்களால் முப்பெரும் ஞானிகள் என்று போற்றப் பெறுபவர்களில இரணடாமவா கோட்டாறு ஞானி யாா சாகிபு அவர்கள். அவர் தோற்றம் 1747. ஹலரத்து ஷெயகு முகியித்தீன மலுககு முதலியாா என்று இளமையில் பெயர் சூட்டப் பெற்ற ஞானியார் இளமையில் கல்வியில் நாட்ட மில்லாது பல ஒலியுல்லாககளின் வழி நின்று ஞான நெறியைக் கைக்கொளளலானாா பின்னர் கமுதி சென்று முகியித்தீன் பிள்ளையவர்கள் வீட்டில் சிலகாலம் தங்கியிருந்தபோது திருவாய் மலர்நதருளிய பாடல்களே 'மெயஞ்ஞான விளககம' என்ற பெயரில் 1936இல சென்னை கேசரி அச்சுக்கூடததில் பதிப்பிககப் பெறறுள்ளது. பாடல்களைத் தொகுத்துச செமமைப்படுததியவர் ஞானியாரவர்தம பேரன் மௌலவி ஞானியாா செய்துமுகியித் தீன ஆவர்.

கொழும்பு மீனும்மாள் அச்சியந்திர சாலையில் 1922இல் அச்சிடப் பெற்றுள்ளன

இந்நூலில் மெய்ஞ்ஞானத்தங்கப் பாட்டுமாலை (156) ஷிபா மாலை (70) தாய்மகளேசல் (101) திருமணி நடனவலங்காரப் புஞ்சம் (300) உகதத்துமாலை (48) வாகிதிய்யாமாலை (65) ஞானக்கண்மாலை (108) சன்ஜீல் கருமாத்துமாலை (251) முதலிய பல சிறுநூல்கள் அடங்கியுள்ளன.

திருவனந்தபுரத்தைச் சார்ந்த கணியாபுரத்து மெய்ஞ்ஞான சொரூபராகிய செய்கப்துலகாதிறு வாலைமஸ்தான் சாகிபவர்கள் திருவாய் மலர்ந்தருளிய ஞானப் பாடல்கள் 'ஞான வாக்கியம்' என்ற தலைப்பில் காயற்பட்டணம் கண்ணகுமது மகுது முகம்மதுப் புலவரவர்களாற் பார்வையிடப்பெற்றுச் சென்னை சாகுல் அமீ தியா அச்சியந்திர சாலையில் 1928இல் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இதிலுள்ள பாடல்கள் 424.

தென்காசிப்பதியிலெழுந்தருளி திருவனந்தபுரம், புனலூர் கொழும்பு முதலியவிடங்களில் வாழ்நத ஞானிக்கரென்னும் ஆ. சி பரிமளம முகம்மதுகாசிம் சாகிபு அவர்கள் பிற்காலத்தில் வாழ்ந்த மெய்ஞ்ஞானச் செலவர்களுள் ஒருவராவார். இவர் தம் அருட்பாடல்கள் 1555ம் 'ஞானமிர்த போதனை' என்ற தலைப் பிலும் 'பரிமளத்தார் பாடல்' என்ற துணைத்தலைப்புடனும் நூலா கியுள்ளன. ஞானரத்தின ஒளிதீப முனுஜாத்து, நெஞ்சகக்கும்மி உயிர்க்குருக்கணணி, தனனையறியும் பதம் போன்ற பல தலைப்புச் களில் இவர் பாடியுள்ளார்.

பரிமளத்தாரின மனைவி இறசூல் பீவி அம்மாளும் கணவரை போலவே ஞானப்பாடல்கள் பாடும் ஆற்றல் பெற்றுச் சிறந்து விளங்கியுள்ளார். 'ஞானமிர்த சாகரம்' என்ற நூலில் அறநூறுக்கு மேற்பட்ட பாடலகள் உள்ளன என்தாய்ககண்ணி, குருபரக்கண்ணி, கப்பலசிந்து, தாய்மகளேசல், அம்மானை' நெஞ் சோடு புலம்பல் போன்ற பல தலைப்புகளில் பாடல்கள் அமைந் துள்ளன. அம்மையாரின் புதல்வர். முகம்மதப்பாசு சாகிப் அவர்கள் தென்காசி ராமானுஜம் அச்சுயந்திர சாலையில் 1910இல் இதைப் பதிப்பித்துளளார

காயற்பட்டணம செய்குமுகம்மது ஹாலிஹ் ஒலியுல்லா அவர்களின் குமாரர் மெய்ஞ்ஞானி அப்துல் கனி சாகிப் அவர் களின் ஞானப்பாடல்கள் 'ஞானந்த ரத்தினம்' முதற்கண் நாகை

எம். ஏ. நெயினு முகம்மது அவர்கள் உரையுடன் சென்னை ஹக்கீம் கொ அ. சாகுல அமீது அவர்களால் 1927இல் சாகுல் அமீதியா அச்சியந்திர சாலையில் அசசாயிற்று இதில ஞானப் பிரசன்னசரத்தினம் நிராமயக்கண்ணி, சந்தக்கும்மி, மெய்ஞ் ஞானக் கீர்த்தனைகள், குருவருள் ஆனந்தக்காட்சி போன்ற பல சிறு நூல்கள் அடங்கியுள்ளன.

தொண்டி மோனகுரு செய்கு மஸதான் சாகிபு அவர்கள் சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழந்த பெருஞானி அவர்தம் பாடல்களைத் திருச்சியில் வாழ்நத பெரும்புலவரான பிச்சை இபுறுகிம் புலவரவர்கள இலக்கணமிலக்கியம் இயையப் பார்வை யிட்டுத் தர திருப்பாடற்றிரட்டு என்ற தலைப்பில 1933இல் சாது பொன்னம்பலம் சுவாமிகள அசசிட்டுள்ளனர். 611 பாடல்கள் கொண்ட இச்சிறுநூல கைக்கடக்கமாக அழகிய முறையில் அச்சிடப் பெற்றுளளது.

கடையநல்லூர் காமில் வலீ அல்ஆரிபு ஷெய்குனு செய்குதுமானுல அவர்கள் பாடியுள்ள 'ஞானோதய புஞ்சம' என்னும 'மெய்ஞ்ஞானக கருவூலம்' அரிய மெய்ஞ்ஞானப் பாடல் களைத தாங்கியுள்ளது பினாங்கியுள்ள ஐக்கிய முஸ்லீம் சஙகத்தார் பெரும பொருட்செலவில இப்பாடலகளைத் தொகுத்து வெளி யிட்டுள்ளனா. ரஹமானா முனாஜாத் (29) முகிய்யதீன ஆண்டகை முனாஜாத் (29) மெயஞ்ஞானக் கும்மி (98) மெய்ஞ்ஞானச் சதகம் (100) போன்ற பல சிறு நூல்களும் பல கீர்த்தனைகளும் இந்நூலில அடங்கியுள்ளனா.

இஸ்லாமியப் பெருமக்களால் முபபெரும ஞானிகள் என்று போற்றப் பெறுபவர்களில் இரணடாமவா கோட்டாறு ஞானி யாா சாகிபு அவாகள. அவர் தோறறம் 1747. ஹலரத்து ஷெய்கு முகியித்தீன மலுக்கு முதலியாா என்று இளமையில் பெயா சூட்டப் பெற்ற ஞானியார் இளமையில கல்வியில் நாட்ட மிலலாது பல ஒலியுல்லாக்களின் வழி நின்று ஞான நெறியைக் கைக்கொள்ளலானார் பின்னர் கமுதி சென்று முகியித்தீன் பிள்ளையவர்கள் வீட்டில் சிலகாலம் தங்கியிருந்தபோது திருவாய் மலர்நதருளிய பாடல்களே 'மெயஞ்ஞான விளக்கம' என்ற பெயரில் 1936இல் சென்னை கேசரி அச்சுககூடததில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. பாடலகளைத் தொகுத்துச செமமைபபடுத்தியவர் ஞானியாரவர்தம் பேரன மௌலவி ஞானியாா செய்துமுகியித் தீன ஆவா.

இதற்கு முந்திய பதிப்பான முதல் பதிப்பை வெளியிட்டவர் செய்யிது தாஹா ஆலிம் சாகிபு ஆவார். ஞானியார் பாடல்களின் பல பிரதிகளை ஆய்ந்து, வழுக்களைக் களைந்து, பிரதிபேதங்களை நட்சத்திரக் குறியிட்டும் செம்மைப்படுத்திப் பதிப்பித்தவர் கொட்டாம்பட்டி எம் கருப்பையாப் பாவலர். இரண்டாயிரம் பாடல்களுக்கு மேற்பட்ட ஞானச் செல்வத்தை அழகுற அச்சிட்டுள்ளனர்.

ஞான காரணம், ஞான தோத்திரம், ஞானப் பஃறொடை, ஞான அம்மானை, ஞானத் திருப்புகழ், ஞானப்பிள்ளைத் தமிழ் ஞானக்கும்மி போன்ற பல பிரிவுகள் நூலில் உள்ளன. மொத்தத்தில் அரிய ஞானச் செல்வம் இதுவாகும்.

நெல்லை மாவட்டத்தில் கி. பி. 1854இல் தோன்றியவர் காலங்குடி மச்சரேகைச் சித்தர். அவர்தம் முழுப் பெயர் சையிது அப்துல் வாஹிது ஆலிம் மௌலானா ஐதரூஸ் புலவர் என்பதாம். தமிழ், அரபு ஆகிய இரு மொழிகளிலும் வல்லவரான அவர் முப்பதாவது வயதில் மெய்யுணர்வு பெற்றுச் சித்தரானார்' நூறாண்டுகட்கு மேல் வாழ்ந்தவர். கி. பி. 1951இல் மறைவுற்றார். அவர்தம் மெய்ஞ்ஞானப் பாடல்கள் 'மச்சரேகை சித்தன் திருப்பாடல்' என்ற நூலில் தொகுத்து 1928இல் அசசிடப் பெற்றுள்ளன.

இந்நூலில் காருண்ய சதகம், மோக்ஷ சதகம், காரண சதகம், மெய்ஞ்ஞான சதகம், பூரண சதகம், பேரின்ப சதகம், நாதாந்த சதகம், சிதானந்த சதகம், ஏதார்த்த சதகம், வேதாந்த சதகம் முதலிய சதகங்களும் வாரீர் கண்ணி, தண்ணருட் கண்ணி, உபதேசக் கண்ணி முதலிய கண்ணிகளும் நூலில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு சதகத்திலும் பத்துப் பதிகங்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பதிகத்திற்கும் தனித் தலைப்பு கொடுக்கப் பெற்றுள்ளது. பாடல்கள் சீர்பிரிக்கப் பெற்று அழகிய முறையில் அச்சிடப் பெற்றுள்ளன. பாடல்கள் சுவையானவை. சித்தர் தன்னைத் தானே தரிசித்த விதத்தை சொல்கிறார்.

> ''மனமன்றிக் கோயிலில்லை மாயையன்றிப் பூசையில்லை
> நினைவன்றிச் சகமுமில்லை நிராசைபிற்பா ராசையில்லை
> வினையன்றித் தோற்றமில்லை விசாரணையில் விகாரமில்லை
> தலையன்றி பொனறுமில்லை தனைத்தானே தரிசித்தாம்''

பாடல்கள் அனைத்திலும் ஞானவெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.

ஞானரத்தினசாகர மதாறிய்யா என்ற நூல் பலருடைய ஞானப் பாடல்களின் தொகுப்பாகும். மேலப்பாளையம் மெய்ஞ் ஞான குஞ்ஞாலி செய்கு முகியித்தின் சாகிபு, அவர்தம் பேரன் ஆலிம் சாகிபு, அவர்தம் கலிபாவாகிய காடை செய்குமுகம்மது அபூபக்கர் லெப்பை ஆகிய இவர்களோடின்னும் பெரியோர்கள் பாடல்களும் இதில் அடங்கியிருக்கின்றன. இதனைத் தொகுத்து முதலில் அச்சிட்டவர் காடை லெப்பை கலீபா ஆவார். அவரிட மிருந்து உரிமை பெற்று 1923இல இரண்டாம் பதிப்பை அச்சிட் டது சென்னை ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையாகும்.

இந்நூலில் மவுஜூது மாலை, இன்னிசை, பலவகை மூனு ஜாத்துகள், கும்மிப்பாட்டு, ஆனந்தக் களிப்பு போன்ற பலவகைப் பாக்கள் இடம்பெற்றுள்ளன.

'நெல்லை யள்ளுஞ் சிறு பெண்ணுளே
நெல்லைக் குத்துஞ்செல்வக் கணுளே
அலலாகூ வென்ற வருளை யனுதினம்
அகத்தினிற் குத்தெடி மின்ஞளே'

என்று ஞானப் பாடல்களுடன் பெண்கள் நெல்குத்தும் பாங்கில் அமைந்துள்ள 'நெல்குத்தும் பாட்டு' படிக்கச் சுவையானது.

நாகூர மௌலா சாகிபு எனனும் ஷா முகம்மது கௌது சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய நூல் 'மெய்ஞ்ஞானத் தெளிவு, பல்வேறு ஞானப் பெருமக்கள் பைராகி மொழியில் பாடிய பாடல்களை செந்தமிழ்ச செய்யுள்களால் இஞ்ஞானியார் ஆக்கியுள்ளார். 200-க்கு மேற்பட்ட பாடல்களைக் கொண்ட இச்சிறு நூல் 1926இல் விஜயபுரம் கருணாநிதி அசசியந்திர சாலை யில் பதிப்பிக்கப்பெற்றது.

இந்நூல்கள தவிர வேறு ஞானப்பாடல் நூல்களும் அச்சாகியுள்ளன. 1875முதல் 1925வரையுள்ள இடைப்பட்ட ஐம்பதாண்டுக் காலத்தில் பல ஞானப் பெருமக்களின் பாடல்கள் நூல்வடிவில் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. இநநூல்கள் இப்போது கிடைப்பதற்கரிதாயுள்ளன. இத்தகைய அரிய நூல்களின பெயர்கள் கீழே தரப்பெற்றுள்ளன. இவை மீணடும் மீண்டும்

ஞானக் களஞ்சியம்
—பஷீர் அப்பா என்னும் முகையத்தீன் சாகிபு
ஞான ஆசாரக் குறவஞ்சி—மௌலானா அப்துல் ஹகீம் காதிரி
ஞானோதய புருசம்
—ஷெய்கு உதுமான் லெப்பை, ஷெய்கு பஷீரு லெப்பை
மெய்ஞ்ஞான ஆனந்தக்களிப்பு—செய்கு பஷீர் அப்பா
மெய்ஞ்ஞான சதகம் — பஷீர் அப்பா நாயகம்
மெய்ஞ்ஞானப் பேரமுதம்—ஆர். பி. எம். கனி
மெய்ஞ்ஞான ரத்தின வலங்கார கீர்த்தனம்
—முகம்மது ஹம்ஸா லெப்பை (1920)

மெய்ஞ்ஞானத் திறவுகோல்
—பொதக்குடி தே. ப. அப்துர் ரஹ்மான் (1955)

ஞானமணிமாலையென்னும் அறிவுமாலை
—கும்பகோணம், அகமதிபுனு முகம்மது காசிபு

மெய்ஞ்ஞானமாலை — கச்சிப்பிள்ளையம்மாள், இளையான்குடி

மெய்ஞ்ஞான அற்புத முனாஜாத்து
—மேலப்பாளையம், செய்யது முகையத்தீன் புலவர்

ஞானோதய தீப அலங்காரம்
—செய்கு அபிபு முகம்மது ஆலிம் சாகிபு

ஞானப் புகழ்ச்சி—செய்து மன்சூறு லெப்பை சாகிபு

ஞானரத்தினாகரம்—முகம்மது மீரான் மஸ்தான் சாகிபு

மெய்ஞ்ஞான கவி சிதாரத்தினச் சிந்து
—சே. செ. முகம்மது ஷாகுமஸ்தான் சாகிபு (1928)

(மதுரை அஷ்டலட்சுமி பிரஸ்)

தமிழ் இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகளின் நூல்கள் பல கிடைக்கப் பெறவில்லை. அவை அனைத்தையும் தொகுக்கும் பணி விரைவில் மேற்கொள்ளப்பெறவேண்டும்.

# TAMIZHIL ISLAMIA MEIGNANA ILAKKIANGAL

(Sufi Literature in Tamil)

*Compiled by*

**MANAVAI MUSTAFA**

மெய்ஞ்ஞான நெறிகளை இஸ்லாமிய, தத்துவக் கருத்துக்களோடு குழைத்து இலக்கிய மெருகோடு தமிழுலகத்துக் குத் தந்து இறையுணர்வையும் தமிழ் ஞான இலக்கியத் துறையையும் வளப படுத்திய மெய்ஞ்ஞானியாதம் படைப் புக்களின ஆய்வுரைத் தொகுபபே இந்நூல்.



*Published by:*

**MEERA FOUNDATION**

AE-103, ANNA NAGAR

MADRAS-600 040